மாவலி வாணன் மன்னன் இருந்தவிடம்
காடுகளைத் தான்பார்த்தான் கன்னன்புலி ராமய்யனும்
அந்நேரந் தன்னிலா யிரம்பேரைத் தானழைத்துக்
காடுவெட்டி முள்ப்பொறுக்கிக் கட்டையற வேபறித்து
ராசகெம் பீரன் நல்லபெருங் கோட்டைதனை
ஏறிட்டுத் தான்பார்த்தார் எல்லோருங் கெடிகலங்கி
கூவிக் கடல்போலே கொக்கரித்துச் சேனைவெள்ளம்
தாவிப் பரிவாரந் தளத்துடனே தான்கூடி

[வானரவீரமதுரையில் இறங்கிக் கூடாரமடித்துக் கொலுவிருத்தல்]

வானர வீரன் மதுரைதனில் வந்திறங்கி
ஆற்றங் கரையும் அடர்ந்த மரத்தடியும்
தோப்பு மாமுஞ் சோலையிடங் கொள்ளாமல்
பாலை[ப்] பருக்குமந்தப் பாங்கான ஊரணியும்
மன்னன் புலிராமன் மனமகிழ்ந்து கொக்கரித்து
ஏரிக் கரைக்குள் இறங்கினார் பாளையமும்
எண்ணிக்கை யேபிடிக்க எல்லாரும் வந்துநிற்க
ஆனை அறுநூறு ஆறு யிரங்குதிரை
ஒட்டகை யெழுநூறு உபைய தளத்துடனே
இந்திரன்போல் ராமய்யனும் ஏகாந்தக் கொலுவிருந்தார்
அந்தநாள்ச் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[படையெடுப்பைப்பற்றித் தூதன்மூலமாகச் சடைக்கன் அறிதல் : சபதம்]

கங்குல் விடிந்து கதிரோன் எழுந்திருந்து
சடைக்கனுட தூதுவனும் தளத்தையெல்லாம் தான்பார்த்துக்
கெடிகலங்கியே பயந்து கெடிசடைக்கன் முன்னேவந்து
தெண்டனிட்டுத் தூதுவனும் செப்பினா னப்போது
ஆண்டவனே இப்போ அடியேன் பயந்துவந்தேன்
என்றுசொன்ன தூதுவனை ஏறிட்டுத் தான்பார்த்து
ஒன்றுக்கும் அஞ்சாதே உரையடா தூதுவனே
கச்சித்திருமலை யேந்திரருக்குக் கண்ணான ராமய்யனும்
காசினியில் வேந்தர்தம்மை கப்பங்கட்டச் செய்தவனும்
வணங்காத பேரை வணங்கவைத்த ராமய்யனும்
மானா மதுரையிலே வளைந்தடித்தார் கூடாரம்
கோடிக் குறுவெள்ளம் கொண்டுவந்து விட்டாற்போல்
இந்தப்பெருஞ் சேனைவெள்ளம் எங்கே யிருந்ததய்யா

**296.** 2 முள்ப்புறக்கிக்.
**306.** 1 ஏரைக்.
**311.** 2 செண்டு.
**317.** 1-2 யெண்டு சொன்ன தூதுவனெ.
**318.** 3 ஒரையடா.

கண்டு பயந்துவந்தேன் கற்தாவே ஐயாவே
பூண்ட மணிமார்பன் புகழ்ச்சடைக்க னப்போது
சீறுவடி வாள்அசைத்துச் சினந்தான் சடைக்கனுந்தான்
எறிந்துவிட்ட பம்பரம்போல் இங்கே நீ ஓடிவந்தாய்
முன்னாள் நம்மாலே மூண்டுவந்த மன்னர்ஸர்வம்
பறம்பக்குடிக் கோட்டையிலே பட்ட தறியானோ
துப்பாக்கி தன்னாலே சூறையிட்டேன் கண்டாயே
அறிந்திருந்து பார்ப்பான் அவன்படைதான் வந்ததென்றால்
இதுக்குப் பயந்துவந்தா யென்னடா தூதுவனே
சூரப்பய்யனைத் துரத்திச் சூறையிட் டேன்கண்டாய்
அருணாத் திரிதனையும் அவன்படைக ளத்தனையும்
குழல்வாய்க் கிரையாகக் கொள்ளைகொண்ட தறியானோ
சடைக்க னுடவலுவைத் தானும் அறியானோ
அறிந்து மிருக்கலையோ அவனுந்தான் சொல்லலையோ
என்னை மெலிவிக்க எவரால் முடியுமடா
எண்ணாமல் வந்து இறங்குமந்தப் பா[ர்]ப்பானைக்
கண்ணைப் பிடுங்கிக் காட்டிலே யோட்டாட்டால்
என்பெயர் தான்சடைக்கன் எடுத்ததுவும் ஆயுதமோ
பின்குடுமி தன்னில்ப் பேருலகு தானறியத்
தேங்காயைக் கட்டிச் சிதற அடியாட்டால்
என்பேர் சடைக்கன் எடுத்ததுவும் ஆயுதமோ

### [ராமநாதபுரத்துப் பண்டாரம் பகைத்திறமொழிதலும் சடைக்கன் கோபித்தலும்]

ராமநாத சுவாமி பூசைபண்ணும் நல்லதொரு பண்டாரம்
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் முன்னேவந்து
உம்முடைய வாள்த்திறத்தை உரைத்தீரே மன்னவரே
மன்னப் புலிராமன் வாய்த்திறமுங் கைத்திறமும்
இப்போது நானுரைக்க இனிக்கேளு மன்னவரே
பாளையக் காறரெல்லாம் பணியாத பேருமுண்டோ
அரசர் படையோடே ஆண்மைசெய்ய வேண்டாங்காண்
கற்தன் பெரும்படைதான் கடல்போலே வந்ததென்றால்
சென்று வணங்கித் திறையிடவே வேணுமென்று

**328.** 1-2 எறிந்தி விட்டுப் பம்பறம்போல்.
**331.** 3 சூறையிட்டான்.
**332.** 4 வந்துதென்றால்.
**335.** 4 ளத்தினையும்.
**338.** 2 மிருக்கிலையோ; 4 சொல்லிலையோ.
**341.** 2 பிடிங்கிக்.
**353.** 1 கத்தன்; 4 வந்து தென்றார்.

காண வெனக்கடுகிக் கப்பங்கட்ட வேணுமென்றார்
பண்டாரஞ் சொன்னதற்பின் பாங்காய்ச் சடைக்கனுந்தான்
செங்கமலக் கண்கள் சிவக்கவிழி நீர்ததும்பச்
சிறிவடி வாளசைத்துத் தீரன் சடைக்கனுந்தான்
பார்ப்பான் தனக்குப் பயந்துமெள்ளத் தானுமினிக்
கப்பமுங் கட்டிக் கைகட்டி நிற்பேனே
ஈழத்து மன்னவர்கள் என்னை நகைப்பார்கள்
மண்டலத்தி லுள்ள மன்னர் நகைப்பார்கள்
அவ்வார்த்தை கேட்டு ஆனதொரு பண்டாரம்
என்வார்த்தை தன்னை இனிக்கேளா யாமாகில்
ஆசார வாசல் அரமனைக்கு உள்ளதெல்லாம்
இடித்துப் பரவி எருக்கு விரைப்பான்காண்
பேய்கொண்டான் ஆண்டி பிடரியிலே போடுமென்றார்
அந்த மொழிகேட்டு ஆனதொரு பண்டாரம்
ஆண்மைத் திறங்கள் அறிவேமென்று பண்டாரம்
கோவித் தெழுந்திருந்து கோவிலிலே போனார்காண்

[சடைக்கன் தனது படைவீரர்களை அழைத்துக் கூத்தன்மகன் சேதுபதியின் பொருட்டு இராமப்பய்யன் படையெடுத்து வந்தமை சொல்லுதல் ; வீசுகொண்டைத் தேவன் மறுமொழி]

பண்டாரம் போனதற்பின் பாங்காச் சடைக்கனுந்தான்
என்மருகா வன்னியரே இப்புதுமை கேள்க்கலையோ
மதியா ரழகனையும் வாவென்று தானழைத்து
மக்கத்தி லானையெனு மதப்புலியைத் தானழைத்துச்
சின்னாண்டி பெரியாண்டி சென்றுசமர் வென்றவனே
வெண்ணிமாலை குமரா வீராணி வாவென்று
சேதுக்கு வாய்த்த சேவகனே வாவெனவே
வாதுக்கு வெட்டிவரும் மதுரைவழி கண்டவரே
கொண்டையங் கோட்டைக் குறும்படிக்கு மன்னவரே
செம்பிநாட்டி லுள்ள சே[ர்]ந்தபடை மன்னவனே
மங்கல நாட்டு வணங்காத மன்னவரும்
கன்னன் கலியாணி காவலனே வாவெனவே
ருவுத்த மாரே நயமுடனே வாருமென்று
வீசுகொண்டைத் தேவா வீமனே வாவெனவே
குமார னழகனையுங் கூப்பிட்டுக் கிட்டவைத்து
வாதுசொல்லி வெட்டிவரும் வணங்க[ா] முடிவேந்தர்

**355.** 1-2 கணவென நடகிக்.
**356.** 1 பண்டாறஞ்.
**361.** 1 ஈளத்து.
**363.** 1 அவ்வாற்தை.
**367.** 1-2 பேய்தொண்டா னடி.
**377.** 3 சேவுகனே.
**386.** 1 வாத்திசொல்லி.

பொத்தை யுடையான் போர்வேந்தே வாருமென்று
கறுத்த வுடையான் கன்னனே வாருமென்று
றாவுத்தக் கற்தன் நல்லபடைக் காலாளும்
பாளையக் காறர் பரிவார மத்தனையும்
வாவென்று தானழைத்து வரிசை மிகக்கொடுத்தார்
மாப்பிள்ளை வன்னியரே வாருமென்று கிட்டவைத்து
வேங்கைப் புலிகளே வீரப்பரி வாரங்களே
முன்னாளில் வந்தவினை முடியவெட்டி வென்றீர்களே
அந்நாளி லென்னை அரசுநிலை யிட்டீரே
இந்நாளில் வந்தவினை இயம்புகிறோம் கேளுமினிக்
கூத்தன்மகன் சேதுபதி வார்த்தை குறியாக
ராமப்பய்ய னென்றொருவன் நம்பதியைத் தானோக்கி
மானா மதுரையிலே வந்தே யிறங்கினானும்
மதச்சடைக்கன் தானுரைக்க மறவருமங் கேதுரைப்பார்
வீசுகொண்டைத் தேவன் வேந்தன் முகம்பார்த்துப்
பார்ப்பான் படையெடுத்தால் பாரமென்று சொன்னீரே
வந்த வடுகரெல்லாம் மடிந்தார்கள் அந்நாளில்
இந்த விசைவாறான் இவன்பிழைத்துப் போவானோ
வாறபடை யத்தனையும் மடியவே போரிடுவோம்
சூறையிட்டுச் சுற்றித் துணிபிடுங்கி வாறோமையா
தீரன் சடைக்கன் செய்தியெல்லாங் கேட்டபின்பு

**[சடைக்கன்மருகனான வன்னி தைரியங்கூறிப் படையுடன் போருக்கெழுதல்; கடுக்கழத்தூர், காரடர்ந்தகுடி,** காவனூர் என்ற ஊர்களைக் கடந்து செல்லுதல்]

மட்டுப் படாதவன்னியன் மதம்பொழிந்து கொக்கரித்துக்
கெட்டானோ பார்ப்பான் கீழ்த்திசையை நோக்கிவந்து
பஞ்சாங்கஞ் சொல்லவொரு பாமூரு தானில்லையோ
பூசைபண்ணித் தான்பிழைக்கப் பிள்ளையார் தானில்லையோ
ஆசைகொண்டு வந்தானோ அறியாமல் பார்ப்பானும்
முன்வந்து தெறிபட்ட முதலிமார் சொல்லலையோ
வடுகர்பட்ட பாடெல்லாம் மறந்தார்கள் மன்னவர்கள்
பார்ப்பானும் இத்தேசம் படையெடுத்து வந்தானோ
இங்கே படையெடுக்க இனிவெட்கந் தானில்லையோ
சாய்ப்பாக வந்த தளத்தை முறியவெட்டிப்
பார்ப்பான் குடுமியிலே பாங்குடனே தேங்காயைக்
கட்டி யடிப்பேனென்றான் கன்னன்புலி வன்னியுந்தான்

**387.** 1 மொத்தை.
**393.** 2 புலியளே.
**394.** 4 வென்றியளே.
**395.** 3 அரிசிநிலை.
**406.** 2-3 சுத்தித் துணிபிடிங்கி.
**411.** 3. புள்ளையார்.
**416.** 3 இனிவெக்கந்.
**419.** 4 வன்னியன்தான்.

மார்பிலிடும் நூல்பறித்து மாட்டுவடம் போட்டிடுவேன்
அண்டரெல்லாங் கொண்டாடும் அம்மானை யிப்போது
ஆண்பிள்ளை சிங்கம்வன்னி அம்மான் முகம்பார்த்து
வெண்ட்ரள மார்பா விசாரமினி வேண்டாங்காண்
கண்டு வணங்கிவன்னி கடுகியே தானெழுந்து
பொக்கிஷத்தைத் தான்திறந்து பூஷணங்கள் தானெடுத்து
ஆபரண முள்ளதெல்லாம் அன்பாகத் தானணிந்து
வங்கார மானவன்னி வாதுசொல்லித் தானெழுந்து
சிங்கார மாகவெகு சேனை தளத்துடனே
மதயானை தனிலேறி வந்தானே வீதியிலே
விதமான பெண்களெல்லாம் வேடிக்கை பார்க்கவந்தார்
வெறுமை பிடித்தாப்போல் மெய்விரலை வாயில்வைத்து
அறுமறுக்கன் கொண்டாப்போல் அங்கிசைந்த பெண்களெல்லாம்
தன்னியத்தைக் கையாலே தானமுக்கி நிற்பாரும்
நின்று மயங்கி நெடுமூச் செறிவாரும்
உடுத்த கலைசோர ஒய்யாரக் குழல்சரிய
இப்படியே நின்றார்கள் ஏந்திழைமா ரெல்லோரும்
வன்னிதுரை என்பாரும் மன்மதன்காண் என்பாரும்
தேவேந் திரனோ திருமாலோ என்பாரும்
பூவேந்தன் என்பாரும் போசன் இவன் என்பாரும்
இந்தப் புவியாளும் ராசன்காண் என்பாரும்
என்று புலம்பி யேமாந்து நிற்பாரும்
செப்பமுடன் வன்னித்துரை தீரன்காண் என்பாரும்
நடந்தான்பெருஞ் சேனையுடன் நல்ல வழிகூடி
நாடு கலக்கியெனும் நல்லதொரு வான்பரியைக்
கொண்டு வரச்சொன்னான் கோடையிடி வன்னியுந்தான்
ஏறினான் வான்பரிமேல் இயல்வேந்தர் சூழ்ந்துவர
ஆனை குதிரைபடை அன்பாகத் தானடக்க
ஆனைமேல் பேரிகை அதிர்ந்து முழங்கிவர
ஒட்டகைமேல் பேரிகை ஒக்க முழங்கிவரக்
குதிரைமேல் டம்மானங் கூட முழங்கிவரத்
தித்தியும் மத்தளமும் சேர ஒருபுறமாய்த்
தத்தி நடனமிடத் தாதியர்கள் தானாட
ஆனைத் திரளும் அடல்பரியு முன்னடக்கச்
சேனை மிகநெருங்கச் செந்தூள் மிகப்பறக்க

**425.** 2 தான் துரந்து.
**429.** 4 வீதிஇலே.
**433.** 3 தானமிக்கி.
**439.** 1 பூவேந்திரன்.
**446.** 3 இயர்வேந்தர்.

வானத்தின் மீன்போலே மன்னர் குடைநெருங்க
வாணப் பொதியுடனே வங்கார ஈட்டிகளாம்
அருவிகட்டி வல்லயங்கள் ஆர்ப்பரித்து முன்னடக்க
அம்புவில்லுக் காறர் அதிவீரர் சூழ்ந்துவரக்
கோடேறிச் சூழ்ந்துவரும் குப்பாயக் குழல்க்காறர்
வீரப்பரி வாரமெல்லாம் வெகுதிரளாய்ச் சூழ்ந்துவரக்
கட்டியக் காறர் கனவிறுது கூறிவரப்
பஞ்சவற்னப் பாவ[ர]டை கொஞ்சி மிகவெறிய
ஆலவட்டம் பிடிக்க அதிவீரர் முன்னடக்கச்
சந்திர காவிடால் தளமெல்லாந் தானிலங்கக்
காவிக் குடைபிடிக்கக் கனவிறுது கூறிவரச்
சாம்பிறுணி தூபம் தலமெல்லாங் கமகமென
வெண்சாமரம் வீசி விறுதுசின்னந் தானூத
நடந்தானே வன்னிதுரை நாவலர்கள் கொண்டாட
கடுக்கமுத் தூர்கடந்து காரடந்த குடிகடந்து
வாய்த்ததொரு காவனூர் வழியாகத் தானடக்க
அந்நாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[படையை வகுத்து அரியாண்டிபுரக்கோட்டை, புதுக்குடிக்கோட்டை, போகலூர்க்கோட்டை, தொண்டி, இளையான்குடிக் கோட்டை, இவைகளுக்கு அனுப்புதல்]

மற்றநாள்த் தானும் மன்னன்புலி வன்னிதுரை
மதியா ரழகனையும் மன்னன் குமாரனையும்
சின்ன வூழியவகுப்பு சேர்ந்தபடை யத்தனையும்
அரியாண்டி புரக்கோட்டைக்கு அதிசீக்கிரத்தில் போகச்சொன்னார்
பொத்தை யுடையான் போர்வேந்தன் தன்படையும்
வீசுகொண்டைத் தேவன் வீமன் பெரும்படையும்
புதுக்குடிக் கோட்டைக்குப் போமென்று தாமுரைத்தார்
மதுரைவழி கண்ட மதத்தேவன் தன்படையும்
கறுத்த வுடையான் கன்னன் பெரும்படையும்
ருவுத்தக் கற்தன் நல்லபடைக் காலாளும்
போகலூர்க் கோட்டைக்குப் போமென்று தாமுரைத்தார்
வட்டாணந் தொண்டியிலே வையுந்தன் தானையத்தை
இளையான் குடிக்கோட்டை யெச்சரிக்கை யென்றுரைத்தார்

[வன்னி அரியாண்டிபுரக்கோட்டைக்கு வருதல்: போர் - வன்னியின் வெற்றி]

மற்றநாள்த் தானும் மன்னன்புலி வன்னியவன்
அரியாண்டி புரக்கோட்டையில் அதிசீக்கிரம் போயிறங்கிக்

**455.** 1 மானத்தின்.
**456.** 4 ஈட்டியளாம்.
**457.** 1 அரிவிகட்டி ; 3 ஆற்பரித்து.
**459.** 1 கோடேரி.
**466.** 3 தளமெல்லாம்.
**484.** 1 இளையாங்.

கோட்டை புகுந்து கொத்தளத்தில் மேலேறி
எதிரி படையை யேறிட்டுத் தான்பார்த்து
எங்கே இருந்ததடா இந்தப் பெரும்படைதான்
கோடிக்கு[று] வெள்ளமெனக் கொண்டுவந்து விட்டானே
வீரியங்கள் பேசிவன்னி வித்முடனே ஆர்ப்பரித்துப்
பார்ப்பான் பெரும்படையைப் பார்முரிய வெட்டவென்று
இருந்த படைத்தலைவ ரெல்லாரையும் அழைத்து
அஞ்சாமல்ப் பார்ப்பான் நெஞ்செதிரே வந்தானே
இறங்கின பாளையத்தை பெழுப்பவென்று தான்துணிந்து
கோட்டை திறந்து புறப்பட்டார் மன்னவர்கள்
பார்ப்பான் படைமேலே பாருலகு தானறிய
எறிந்தார் ஏஃறிவாணம் எல்லையற்ற சேனையின்மேல்
சுட்டார் குழல்க்காரர் சொல்லரிய மன்னரைத்தான்
குத்தி விரட்டிக் கூடாரங் கொள்ளையிட்டார்
வேறுபட்டுக் குத்தி விரண்டோடிப் போவாரும்
அய்யோ சிவனேயென்று அலறி விழுவாரும்
குத்துண்டு போர்க்களத்தில் குலவையிட்டு நிற்பாரும்
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
குறைப்பிணமாய் நின்று கூத்தாடி நிற்பாரும்
வேலவனே என்பாரும் விதிவசமோ என்பாரும்
மன்னன்புலி வன்னியவன் வாகாகவே திரும்பி
வெற்றிச்சங் கூதினார் விறுது சடைக்கனவன்
பார்ப்பான் பெரும்படையில் பட்டார்கள் முந்நூறு
மறவர் அறுபதுபேர் மாண்டார்கள் அக்களத்தில்
அந்நாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[கொண்டப்பய்யன் படைத்தலைவர்களைத் திரட்டி அரியாண்டிபுரக் கோட்டையின்வெளியிற் போர்புரிதல் : வன்னியின் வெற்றி]

மற்றநாள்த் தானும் மன்ன[ன்]புலி ராமய்யனும்
இந்தப் படைத்தலைவ ரெல்லோரையும் அழைத்து
அஞ்சாமல்த் தான்மறவன் நெஞ்செதிரே வந்தானே
மாப்பிள்ளைக் கொண்டய்யா மன்னவனே வாருமென்று
திருமலைக் கொண்டப்பையா தீரனே வாருமென்று
சத்துருக்க னய்யனே தார்வேந்தே வாருமென்று
பொன்னம ராயா போர்வேந்தே வாருமென்று
மண்டூருப் பாப்பய்யனே மன்னவனே வாருமென்று

**489.** 2 இருந்துதடா.
**490.** 1 கோடிக்கி.
**496.** 2 தாரந்து; 3 பிறப்பட்டார்.
**502.** 4 விழவாரும்.

நத்தத்தூர் லிங்கய்யனும் நல்ல படையாளும்
கொண்டப்ப நாயக்கன் கூட்டப் பெரும்படையும்
வீரமலை நாயக்க வேந்த[ன்] பெரும்படையும்
எட்டப்ப நாயக்கன் எல்லையற்ற காலாளும்
தொப்பய நாயக்கனும் தோருத சேவகனும்
இறவப்ப நாயக்கன் எதிரில்லா மன்னவனும்
பூச்சி நாயக்கன் போர்வேந்தன் தன்படையும்
முத்தய நாயக்கன் மூவலூர் மன்னவனும்
தென்காஞ்சி மூக்கன் சீவலமாறன் படையும்
முடுகு நாட்டு மூவரையன் தன்படையும்
கோதம ரெட்டி கூட்டப் பெரும்படையும்
குற்றாலத் தேவன் கூட்டப் பெரும்படையும்
தென்மலை வன்னியனும் சேனை பெருந்தளமும்
சின்னணஞ்சாத் தேவன் சேனை பெருந்தளமும்
கட்டபொம்ம நாயக்கன் கனத்தபெருஞ் சேனைகளும்
ஊற்று மலையானும் உகந்தபெருஞ் சேனைகளும்
கீழ்முகத்துத் தும்பிச்சியும் கீர்த்தியுள்ளான் தன்படையும்
மேல்முகத்துத் தும்பிச்சியும் விறுதுபுகழ்க் காலாளும்
ஏழு மடையில் இறவப்பன் தன்படையும்
கழுகு படையான் கதித்தபடைக் காலாளும்
ஒவள நாயக்கனும் உற்றபுகழ்க் காலாளும்
போருக் கதிகாரி பொம்மநாயக்கன் படையும்
அப்பாச்சிக் கவண்டன் ஆன பெருந்தளமும்
ஏழா யிரம்பண்ணை யெதிரிலான் தன்படையும்
கணக்கதி காரி கவண்டன் பெரும்படையும்
இரவும் பகலு மிருந்துபொரு சேவகரும்
நரிக்கு விருந்தாக்கும் நல்லசிறு பொம்மணனும்
முட்டிவெட்டிச் சூறையிடும் முத்தப்பநாய்க்கன் படையும்
இருந்து பறந்துவெட்டும் இலுப்பையூர்க் காமாட்சியையும்
பழனியில்ச் சின்னயனும் பார்வேந்தன் தன்படையும்
ஆய்க்குடிக் கொண்டையனும் அவன்படைக ளத்தனையும்
விறுப்பாச்சி நாயக்கனும் வேந்தன் பெரும்படையும்
கன்னிவாடி நாயக்கனும் கதித்தபடைக் காலாளும்

**523.** 3 எல்லையத்த.
**524.** 4 சேவுகனும்.
**528** 3 சிவிலிமாறன்.
**530.** 2 றட்டி.
**531.** 1 குத்தாலத்.
**535.** 1 ஊத்து.
**540.** 3 உத்தபுகழ்க்.
**543.** 1-2 யேளா இரம்பண்ணை.
**545.** 4 சேவுகரும்.
**546.** 1 நரிக்கி.
**547.** 2 சூரையிட்டு.
**549.** 1 பளனிஇல்.

லிங்கம நாயக்கன் நீதியுள்ளான் தன்படையும்
பெத்தண நாயக்கன் பெருஞ்சேனை யத்தனையும்
வாலப்ப நாயக்கன் வலுவுள்ளான் தன்படையும்
வெங்கம நாயக்கன் விறுதுபுகழ் காலாளும்
தென்னம ஞுடு சேனை பெருந்தளமும்
வீசுங்க ஞுடு விருதுபுகழ்க் காலாளும்
செல்வப்பொட்டி நாயக்கன் சேனை பெருந்தளமும்
திருமலைப் பூச்சியனும் சேனைபடை யத்தனையும்
சொக்கலிங்க நாயக்கன் சொல்த்தவறான் தன்படையும்
விசுவப்ப நாயக்கன் வேந்தன்படை யத்தனையும்
மணஊரு நாயக்கன் மன்னன் பெருந்தளமும்
வேலப்ப நாயக்கன் வேந்தன்படை யத்தனையும்
மருதப்பத் தேவன் மன்னன்படை யத்தனையும்
கோடாங்கி ரெட்டி கொலைகார நத்தனையும்
முனைச்சமரில் நின்றுபொரும், மூங்கிலணைப் பூசாரி
பட்டத்து நாயக்கன் பரிவார மத்தனையும்
தென்னம ஞுடு சேனை பெருந்தளமும்
இருந்து பறந்துவெட்டும் இலுப்பையூர்க் காமாட்சி
வங்கார முத்தய்யன் வலுவுரைத்தான் தன்படையும்
அரியலூ ராரும் அவர்படையும் அத்தனையும்
மறுஞூத்து நாயக்கன் மன்னன் பெருந்தளமும்
வால சமுத்திரத்தில் மன்னன்படை யத்தனையும்
குன்னத்தூர் ரெட்டி குமாரன்படை யத்தனையும்
நாஞ்சிஞுட்டுத் துரையும் நல்லபடை யத்தனையும்
திருநெல் வேலி சேர்ந்தபடை யத்தனையும்
மறுஞூத்து நாயக்கன் மன்னன் பெருந்தளமும்
மலையாள ராசாவும் மன்னன் பெரும்படையும்
கொளும்பினில் ராசாவும் கூட்டப் பெரும்படையும்
ஏழா யிரம்பண்ணை யெதிரிலான் தன்படையும்
ஈரோடு தன்னில் எண்ணவொண்ணுக் கொங்குமன்னர்
நல்லமநாயக்கன் படையும் நாகமன் தன்படையும்
ஊற்று மலையானும் உகற்தமுடன் பூவணனும்
கறட்டுமலை நாயக்கன் கன்ன[ப்]பெருந்தளமும்
கச்சைகட்டி நாயக்கன் கனத்த பெருந்தளமும்
காங்கய ஞுடு கன்னப் பெருந்தளமும்
மூங்கிலணைப் பூசாரி முனைச்சமரில் மன்னரெல்லாம்
காமாட்சி நாயக்கன் கன்னப் பெரும்படையும்

**566.** 3-4 குலைகாரநத்தனையும்.
**570.** 2 பரந்துவெட்டும்.
**583.** 3 நாகமதன்.
**584.** 3 ஞுகற்தமுடன்.
**588.** 1 மூங்கில்முனைப்.
**589.** 3 கன்னம்.

காமய நாயக்கன் கதித்தபடைக் காலாளும்
நாகம நாயக்கனும் நல்லபடைக் காலாளும்
போருக் கதிகாரி பொம்மயன் தன்படையும்
சேரலாரை வென்ற செங்கமலத் தாபிள்ளையும்
சிலுப்பொட்டி நாயக்கனும் சேனைவெள்ள மத்தனையும்
கோதம ரெட்டி கூட்டப் பெரும்படையும்
மன்மது கானும் வாய்த்த புரவிகளும்
ஆசிறு பேய்க்கும் அஞ்சாப் புரவிகளும்
உச்சிமிய் யாவும் உகந்த பெருந்தளமும்
சவ்வாசு கானும் தன்புரவி யத்தனையும்
வாய்மூச கான்தளமும் வாய்த்த புரவிகளும்
வாவுகான் தன்படையும் வாய்த்த கரிகளுடன்
சின்ன ராவுத்தர் சேர்ந்த புரவிகளும்
முசேகான் குதிரையும் முத்து முதலியரும்
காதுறு சாயபு கன்னன் புரவிகளும்
தானுதாய் ராவுத்தன் தன்புரவி யத்தனையும்
மீரு சாயபும் வேந்தன் பெரும்படையும்
அதிரி சாயபும் அடர்ந்துவருஞ் சேனைகளும்
மகமது சாயபு மன்னன் புரவிகளும்
கானு சாயபு கரித்த புரவிகளும்
படேகான் கிலுசும் வாய்த்த புரவிகளும்
மன்மதுகான் கிலுசும் வாய்த்த புரவிகளும்
மிசறுகான் தன்பரியும் வெகுமையாய்த் தானெழுந்து
எல்லோரும் வந்து இயல்பாகத் தானெழுந்து
உபையதள மெல்லாம் ஒருமிச்சுத் தான்திரண்டு
இன்றைக்கு லெக்காக எதிர்த்த மறவனையும்
சென்று பிடிக்கவென்று சீறிவடி வாளெடுத்து
மாப்பிள்ளை கொண்டய்யன் மதயானை போல்ச்சீறிப்
பாளையக் காறர் பலபேரைத் தானழைத்துப்
பதினெட்டுக் கையாகப் பாங்குடனே தான்பிரித்து
எட்டப்ப நாயக்கன் எதிரில்லான் தன்படையும்
இறவப்ப நாயக்கன் எல்லையற்ற காலாளும்
பூச்சிய நாயக்கன் போர்வேந்தன் தன்படையும்
கட்டப்பொம்ம நாயக்கன் கற்னன் பெரும்படையும்
நேரே பொருகையிலே நெருங்கிச் சமர்பொருதார்

**593.** 3 சிங்கமலற்.
**595.** 1-2 கோதை மறுட்டி.
**598.** 3 உகற்ந்த.
**608.** 4 புரவியளும்.
**617.** 3 மதையானை.
**621.** 1 ஏறப்ப.

காமாட்சி நாயக்கன் கற்னன் பெருந்தளமும்
தென்காஞ்சி மூக்கன் சீவிலிமா றன்படையும்
முடுகு நாட்டு மூவரையன் தன்படையும்
முத்தய நாயக்கன் மூவலூர் மன்னவனும்
கோதம ரெட்டி கூட்டப் பெரும்படையும்
குன்னத்தூர் ரெட்டி குமாரன் பெரும்படையும்
தென்மலை வன்னியனும் சேனை பெருந்தளமும்
முட்டிவெட்டிச் சூறைகொள்ளும் முத்தயநாய்க்கன் படையும்
நரிக்கு விருந்தாக்கும் நல்லசிறு பொம்மணனும்
கணக்கதி காரக் கவண்டன் பெரும்படையும்
கொப்பக் கவண்டன் குறிக்கவண்டன் மெய்க்கவண்டன்
சின்னணஞ்சாத் தேவன் சேனை பெருந்தளமும்
சிலுப்பெட்டி நாயக்கன் சேனைவெள்ள மத்தனையும்
சின்னம நாயக்கன் சேனை பெருந்தளமும்
வாலப்ப நாயக்கன் வலுவுள்ளான் தன்படையும்
கோலக் கொண்டய்யன் கூட்டப் பெரும்படையும்
ஏழு மடையான் எரிசின்னன் தன்படையும்
ஈரோடு தன்னில் எண்ணவொண்ணுக் கொங்குமன்னர்
காங்கய னாட்டில் கதித்த முனைக்கவண்டன்
தளவாயி னயக்கன் தார்வேந்தன் தன்படையும்
நத்தத்து லிங்கய்யனும் நல்லபெருங் காலாளும்
நேரே பொருகையிலே நெருங்கிச் சமர்பொருதார்
இந்தவகை யெல்லாம் எல்லோருந் தான்துணிந்து
கோட்டை தனைவளைந்து கூடாரந் தானடித்தார்
கோட்டையில்க் குள்ளிருந்து குறும்படித்த மறவருந்தான்
சும்மா இருந்தால் சிரிப்பா ருலகிலுள்ளோர்
என்றுசொல்லி மறவர் எல்லோருங் கச்சைகட்டி
பா[ர்]ப்பான் பெரும்படைதான் பாரமோ என்றுசொல்லி
வந்தெதி[ர்]த்தார் மன்னர் வலுவறிய வேணுமென்று
அரியாண்டிபுரக் கோட்டைவிட்டு அன்பாய் வெளியி[ல்]வந்து
அஞ்சுகையாய்த் தான்பிரித்து அடர்ந்து பொருகவென்று
கறுத்த வுடையான் கன்னன் ஒருகையிலே
வீசுகொண்[டை]டத் தேவன் வீமன் ஒருகையிலே
பொத்தை யுடையான் போர்வேந்தன் ஒருகையிலே
மதுரைவழி கண்ட மதத்தேவன் ஒருகையிலே
ருவுத்தக் கற்தன் நல்லபடை ஒருகையிலே

**627.** 1 முடுகுகு.
**633.** 1 நரிக்கி.
**640.** 2 கொடையான்.
**659.** 1 மதுரைவளி.
**660.** 1-2 ராவுத்தர் கூத்தன்.

அஞ்சுகையாய்த் தான்பிரித்து அடர்ந்துசமர் பொருகையிலே
எறிந்தா ரெறிவாணம் எல்லையற்ற சேனையின்மேல்
சுட்டார் குழல்க்காரர் சொல்லரிய சேனையின்மேல்
வாளோடே வாள்முரிய மண்டிப் பொருதார்கள்
அம்புவில்க் காரன் ஆர்ப்பரித்துத் தான்பொருதான்
ஆனைகுத்திச் சோர்ந்து அலறி விழுவாரும்
இருபடையு மூண்டு எதிர்த்துச் சமர்பொருதார்
வாண மடிபட்டு மண்மேல் கிடப்பாரும்
குத்துண்டு போர்க்களத்தில் குலவையிட்டு நிற்பாரும்
குறைப்பிணமாய் நின்று கூத்தாடி நிற்பாரும்
வேல்க்குத்துப் பட்டு விரண்டோடிப் போவாரும்
வேலவனே என்பாரும் விதிவசமோ என்பாரும்
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
முட்டிப் பொருதார்கள் மூவுலகுந் தீயெரியக்
கிட்டிப் பொருதார்கள் கீழுலகந் தீயெரிய
வலங்கையிலே நின்றபடை வளைத்துப்போர் செய்தார்கள்
இடங்கையிலே நின்றபடை யெதிர்த்துப்போர் செய்தார்கள்
தேக்கிலையில் நீரதுபோல் தியங்கியே தான்மறவன்
மன்னன் புலிராமன் மறித்தான் மறவரைத்தான்
மன்னன் புலிவன்னி வாகாகத் தான்திரும்பி
எதிர்த்துப்போர் செய்தான் எதிரில்லா வன்னியுந்தான்
பா[ர்]ப்பான் பெரும்படையும் பறந்து குலவையிட்டுக்
குத்தி விரட்டி[க்] கூடாரங் கொள்ளையிட்டு
மதச்சடைக்கன் தான்வளர்த்த வன்னிக்கு வாய்த்ததென்று
ஊடுருவச் சென்றான் உலகங் கிடுகிடென
வெட்டித் துரத்திவன்னி விறுதுகளுந் தான்பேசி
மன்னன்புலி ராமன்படை மட்டில்லாச் சேனைவெள்ளம்
தட்டழிந்து கெட்டதுபோல் தலைகெட்ட நூலதுபோல்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனையின்மேல்
மூவா யிரம்பேர் முழுதுமங்கே தான்மடிந்தார்
மறவர் படையில் மடிந்தார்கள் முந்நூறு
வெற்றிச்சங் கூதி விறுதுகளும் பேசிவந்தான்
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[மறுநாள் ராமப்பய்யனும் சடைக்கனும் ஒருவர்க் கொருவர் வஞ்சினங்கூறி ஓலைவிடுத்தல்]

ஆழிநெடுந் தேரேறி அலைகதிரோன் வந்துதித்தான்

**667.** 2 மூன்று.
**670.** 1 குறைப்பெணமாய்.
**676.** 3 வளத்துப்போர்.
**681.** 1 எதிற்துப்.
**682.** 4 கொலவையிட்டுக்.
**684.** 3 வன்னிக்கி.
**690.** 1 மூவ்வா.
**692.** 1 வெத்திச்சங்.

அன்று முரிந்து அடைந்தார்கள் பாளையத்தில்
மன்னன்புலி ராமன்படை மட்டில்லாச் சேனைவெள்ளம்
மறவனே ஆண்பிள்ளைகாண் மண்டலத்தி லுள்ளோரே
பெண்டுகளோ என்று பெருமூச்சுத் தானெறிந்து
மாப்பிள்ளை கொண்டடப்பய்யன் மகாகோபங் கொண்டெழுந்து
வெங்கிட கிஷ்ணய்யன் வீமனே வாருமென்று
இருந்த படைத்தலைவர் எல்லோரையும் அழைத்து
அஞ்சாமல்த் தான்மறவன் நெஞ்செதிரே வந்தான்காண்
இன்றைக்கு லெக்காக எதிர்த்த மறவனைத்தான்
சென்று பிடித்துத் திசைநாலுங் கொள்ளையிட்டு
கைப்பிடியாய்த் தான்பிடித்துக் கட்டிக்கொடு வாராட்டால்
என்பேரோ ராமன் எடுத்ததுவும் ஆயுதமோ
மற்றநாள்த் தானும் மன்னன்புலி வன்னியவன்
மன்னன் சடைக்கனுக்கு மறுநிருபந் தானெழுதி
ஒற்றன் தனையழைத்து ஓலை தனைக்கொடுத்து
ஒற்ற னவனோடி உற்றதொரு காற்றெனவே
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் முன்னேவைத்து
ஆண்டவனே இப்போ அடியேன்சொல் விண்ணப்பங்கேள்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனைமுன்னே
சென்று புகுந்து திசைநாலுங் கொள்ளையிட்டு
வெட்டித் துரத்தி விறுதுகளுந் தான்பேசி
மன்னன்புலி ராமன்படை மட்டில்லாச் சேனைவெள்ளம்
மூவா யிரம்பேர் முழுதுமங்கே தான்மடிந்தார்
மறவ ரிருநூறு வாகாகப் பட்டார்கள்
மற்றநாள்ப் போலே மறப்போரில் வெற்றிகொண்டோம்
நாலாம்நாள்ப் போரில் ராமனுட தன்படையில்
அஞ்ஞூறு பேர்கள் அங்கே மடிந்தார்கள்
மறவ ரிருநூறு மடிந்தார்கள் அக்களத்தில்
என்றுசொல்லி ஒற்றன் இதமுடனே தானுரைத்தான்
அப்போது சேதுபதி அந்த விசளங்கேட்டு
இந்தவெற்றி போதாதோ என்மருகா வன்னியரே
கூத்தன்மகன் சேதுபதி வார்த்தை குறியாக
நம்மை யெடுக்கவென்று நம்பதியை நோக்கிவந்து
மானு மதுரையிலே வந்தேகி அங்கிருந்து
மண்டலத்தி லுள்ள மகாசேனை அத்தனையும்

**695.** 3 அடர்ந்தார்கள்.
**703.** 3 எதுத்த.
**706.** 4 ஆயிதமோ.
**708.** 4 தானெழுது.
**709.** 1 ஒட்டன்.
**710.** 3-4 உத்ததொரு காத்தெனவே.
**719.** 2-3 போரில் முத்தப்போரில்.
**726.** 3 வாற்தை.

கூட்டிவந்து ராமய்யனும் கூடாரந் தானடித்து
என்னை யெடுக்க எவரால் முடியுமடா
ராமருட பாதம் நமக்குதவி யாயிருக்க
மலையில்வளர் காதலித்தாய் மங்கையுமை தானிருக்க
முக்கோடி தீர்த்தம் முழுதுமங்கே தானிருக்க
வாமஞ் செகநாதர் வாய்த்ததுணை யிங்கிருக்கப்
பா[ர்]ப்பா னொருபொருட்டோ பாருலகில் மன்னவனே
எதிர்த்துவந்த பார்ப்பானை இனிவிடப் போறோமோ
நாளைப் பகல்ப்பொழுதில் நாழியலுக் குள்ளாக
அம்மானை பந்தாடி அலைக்கழிவு பண்ணாட்டால்
என்பேரோ சடைக்கன் எடுத்ததுவும் ஆயுதமோ
பார்ப்பானைக் கொன்றால் பாவம்வந்து சூழுமென்று
பின்குடுமி தன்னில் பேருலகந் தானறியத்
தேங்காயைக் கட்டிச் சிதற அடிப்பேனான்
கண்ணைப் பிடுங்கிக் காட்டிலே ஓட்டிடுவோம்
என்றுசொல்லி ஓலை யெழுதுமென்றார் சடைக்கனுந்தான்
ஓலை யெழுதி ஓடவிட்டார் ராமய்யற்கு
ஒற்ற னவனோடி யுற்றபெருங் காற்றெனவே
கோலா கலராமன் கொலுவி லிருக்கையிலே
ஓலை தனைக்கொடுத்து ஒதுங்கிநின்றான் ஒட்டனுந்தான்
வாசித்துப் பா[ர்]த்து மன்னன்புலி ராமய்யனும்
எரியும் நெருப்பில் எண்ணெய்தனை விட்டாப்போல்
கண்சிவந்து சீறிக் கடுங்கோபங் கொண்டெழுந்து
என்வார்த்தை தன்னை யினிக்கேளுந் தூதுவரே
சதுரகிரி பறுவதத்தைத் தான்பார்த்து நாய்குலைத்தால்
சேதமுண்டோ என்று சிரித்தான் புலிராமன
சடைக்கனுட பெண்டி[ன்] தாலி தனையறுத்து
அர[ண்]மனை தோறும் ஆசார வாசலெல்லாம்
எருக்குங் குறுக்கும் இனிவிரைப்பே னென்றுசொன்னார்
தூதுவனைத் தானழைத்துத் துங்கமுடி ராமய்யனும்
சொன்னதொரு வார்த்தைதனைச் சொல்லடா தூதுவனே
அப்போது தூதுவனும் அவ்விசளங் தான்கேட்டு
ஓடினான் தூதுவனும் உற்றபெருங் காற்றெனவே
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் முன்னேவந்து
ஓலை தனைக்கொடுத்து ஒதுங்கிநின்றான் தூதுவனும்

**732.** 4 யாயிருக்கும்.
**734.** 2 தீற்தம்.
**738.** 3 நாளிகலுக்.
**739.** 3 அலக்களிவு.
**740.** 4 ஆயிதமோ.
**742.** 1 பின்குடும்பி.
**749.** 3 ஒதிங்கிநின்றான்.
**751.** 3 எண்ணைதனை.
**764.** 3 ஒதிங்கிநின்றான்.

வாசித்துப் பார்த்து மதம்பொழிந்து கொக்கரித்து
என்மருகா வன்னி யிவ்விசளங் கேள்க்கில்லையோ
பாளையக் காறர் படைத்தலைவரை யழைத்துப்
பார்ப்பான் நகைத்துப் பகிடிபண்ணி ஓலைவிட்டான்
சும்மா இருந்தால் சிரிப்பா ருலகிலுள்ளோர்

[வன்னி போகலூர்வெளியிற் போரிடுதல் : அரியாண்டிபுரக் கோட்டையார் உதவுதல் : வன்னியின் வெற்றி]

மதச்சடைக்கன் தான்வள[ர்]த்த வன்னிக்கு வாய்த்ததென்று
பொத்தை யுடையான் போர்வேந்தன் ஒருகையிலே
வீசுகொண்[ை]டத் தேவன் வீமன் ஒருகையிலே
கறுத்த வுடையான் கன்னன் ஒருகையிலே
மதுரைவழி கண்ட மதத்தேவன் ஒருகையிலே
றுவுத்தக் கற்தன் நல்லபடை யொருகையிலே
மதச்சடைக்கன் தான்வள[ர்]த்த வன்னி யொருகையிலே
அறுகையாய்த் தான்பிரித்து அடர்ந்துபோர் செய்யவென்று
போகலூர் வெளியில்ப் புறப்பட்டா ரெல்லோரும்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனைவெள்ளம்
பெண்டுகளோ வென்று பெருமூச்சுத் தானெறிந்து
மாப்பிள்ளைக் கொண்டப்பன் மன்னன் மிகச்சினந்து
வெங்கிட கிஷ்ணய்யன் வெகுமையாய்த் தானெழுந்து
மண்டூருப் பாப்பயனும் மகாகோபங் கொண்டெழுந்து
சத்துருக் கையன் தார்வேந்தன் தான்சினந்து
பாளையக் காறர் படைத்தலைவ ரெல்லோரும்
கச்சைகட்டி வேலெடுத்துக் கனத்தகுழல்த் தானெடுத்துப்
போகலூர் வெளியில்ப் போருக்கு வந்தார்கள்
இருவர்படை மூண்டு எதிர்ந்துபோர் செய்தார்கள்
வன்னி யொருபுறமாய் மாற்கமாய் வந்துநின்று
மாபோகி யென்னுமொரு வான்பரிமேல்த் தானேறி
ஊடுருவச் சென்றான் உலகங் கிடுகிடென
இடசாரி வலசாரி யெய்யாமல் ஊடறுத்தான்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனைவெள்ளம்
தட்டழிந்து கெட்டதுகாண் தலைகெட்ட நூலதுபோல்
மாப்பிள்ளை கொண்டப்பய்யன் மதயானை போல்ச்சீறி
எதிர்த்த மறவனை யினிவிடப் போறோமோ
என்றுசொல்லி அய்யன் எல்லாரையுஞ் சினந்து

**770.** 4 வாய்த்துதென்று.
**775.** 1-2 ராவுத்தக் கூத்தன்.
**778.** 3 பிறப்பட்டா.
**783.** 1 மண்ணூறு.
**788.** 2 மூன்று.

தொட்டிய கம்பளத்தார் துடிகாரரையு மழைத்துப்
பல்க்கடித்துச் சீறும்விசை பாருங் கிடுகிடென
எல்லோருந் தான்திரண்டு ஏகினர்காண் அம்மானை
மறவர் படைமேலே மண்டிப் பொருதார்கள்
மறவர்வெருண் டோடினதை வன்னியவன் தான்பார்த்துப்
புலியை நரிபாய்ந்து போகுமோ என்றுசொல்லி
வலையில் அகப்பட்ட மான்போலே தான்மறவர்
தேக்கிலையில் அகப்பட்ட தீர்த்தம்போல் தான்மறவர்
அம்பு[பட்]டுச் சோர்ந்து அலறி விழுவாரும்
வாண மடிபட்டு மண்மேல்க் கிடப்பாரும்
குத்துண்டு போர்க்களத்தில் குலவையிட்டு நிற்பாரும்
உண்டைபட்டுச் சோர்ந்து உருண்டு கிடப்பாரும்
வேல்க்குத்துப் பட்டு வெருண்டோடிப் போவாரும்
வேலவனே என்பாரும் விதிவசமோ என்பாரும்
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
குறைப்பிணமாய் நின்று கூத்தாடி நிற்பாரும்
வன்னி யவர்துணிந்து மண்டிப்போர் செய்தார்காண்
அரியாண்டி புரத்தார் அதிசீக்கிரத்தில் வந்துதவி
கா[ர]டந்தகுடிக் கோட்டையார் கடுகித்தான் வந்தார்கள்
எல்லோரும் வந்து இனிவிடப் போறோமோ
என்றுசொல்லி மறவர் எதிர்ந்துபோர் செய்தார்கள்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனைவெள்ளம்
கட்டவிழ்த்த மான்போலே கதறியே ஓடலுற்றார்
எண்ணு யெக்கடா என்றே ஒளிப்பாரும்
அக்கடா ஒச்சையென்று அரண்டுதா மோடுவாரும்
காடித கொடுக்கு காலன்போல் வந்தானே
என்செய்வோ மென்று ஏங்கி முகம்வாடி
உண்டைபட்டுச் சோர்ந்து உருண்டு கிடப்பாரும்
வேல்க்குத்துப் பட்டு வெருண்டோடிப் போவாரும்
வாண மடிபட்டு மண்மேல்க் கிடப்பாரும்
குத்துண்டு போர்க்களத்தில்க் குலவையிட்டு நிற்பாரும்
அம்புபட்டுச் சோர்ந்து அலறி விழுவாரும்
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
குறைப்பிணமாய் நின்று கூத்தாடி நிற்பாரும்
வேலவனே யென்பாரும் விதிவசமோ என்பாரும்

**805.** 3 தீற்தம்போல்.
**818.** 3 எதுர்ந்துபோர்.
**820.** 1 கற்றவிள்த்த.
**822.** 3 அறுண்டுதிறு ; 3-4 அரண்டுதிரும போடுவாரும்.
**824.** 1 என்ஞ்செய்வோ.
**830.** 1 காலத்று ; 3 ஙகயத்று.
**831.** 1 குறைப்பெணமாய்.

அய்யோ சிவனேயென்று அலறி விழுவாரும்
அந்திரத்தில்த் தேவர்கள் அலங்காரம் பா[ர்]த்துநிற்க
இந்த வுலகில் எவருடைய தன்போரோ
வாலியுட போரோ மாயனுட தன்போரோ
என்றுதான் சொல்லி யெல்லோரும் பா[ர்]த்திருக்க
வெட்டி விறுதறுத்தான் விறுதுபுகழ் வன்னியுந்தான்
குதிரை யிருநூறு குண்டுபட்டுத் தான்விழுந்து
ஆனையுமோர் பத்து அம்புடனே தான்சோர்ந்து
கூடாரங் கொள்ளையிட்டுக் குடல்பிடுங்கி மாலையிட்டு
விறுப்பாட்சி நாயக்கனும் விறுதுசொல்லி வெட்டிவந்தான்
காமாட்சி நாயக்கனைக் கழுத்தை யறுக்கலுற்றான்
தொண்டம நாயக்கனைத் தோள்சரிய வெட்டலுற்றான்
வெங்கம நாயக்கனை வெட்டிப் பிளந்தெறிந்தான்
பாளயக் காறரைத்தான் பறந்து கழுத்தறுத்தான்
ஆறுபாளை யக்காறர் அடங்கா அரசரைத்தான்
தலையறுத்துக் கொள்ளையிட்டு தாரைசின்னந் தான்முழங்க
வெற்றிகொண்டு வன்னி வீரியங்கள் பேசிவந்தான்
கோட்டை புகுந்தான் கோடையிடி வன்னியுந்தான்
மன்னன்புலி ராமன்படை மட்டில்லாச் சேனைவெள்ளம்
அன்று முறிந்து அடைந்தார்கள் பாளயத்தில்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனையிலே
மூவா யிரம்பேர் முழுதுமங்கே தான்மடிந்தார்
மறவருட தன்படையும் மடிந்தார்க ளஞ்ஞூறு
அந்தநாள் சென்று அலைகதிரோன் தான்மறைந்தான்

[படைவீரர்களுக்குப் பரிசளித்து வன்னி சேதுக்கரையிற் சடைக்கனிடஞ் செல்லுதல் : வழியில் அவன் வருதல் : அவனாற் புகழப்பெறுதல்]

மற்றநாள்த் தானும் மன்னன்புலி வன்னியுந்தான்
வெற்றிகொண்ட மன்னரைத்தான் விரையவே தானழைத்துப்
பூஷணங்க ளெல்லாம் பூட்டி யலங்கரித்துப்
பச்ச[ை] வடங்கொடுத்துப் பாங்கா யமுதளித்துக்
கெந்தபொடி சந்தனமும் கெறுவிதமாய்த் தான்பூசி
அடைக்காயும் வெள்ளிலையும் அன்புடனே தான்கொடுத்துக்
கோட்டை பதனமென்று கோலாகல வன்னியுந்தான்
சேதுக்கரை வாழும் தீரனிடம் போகவென்று

**840.** 3 அன்புடனே.
**846.** 3 பரந்து.
**847.** 4 தரசரைத்தான்.
**849.** 1 வெத்திகொண்டு.
**854.** 3 முளுதுமங்கே.
**858.** 1 வெத்திகொண்ட ; 4 தானளைத்து.
**861.** 2 சந்தணமும்.
**862.** 4 தான்குடுத்துக்.

ஏறினான் தண்டிகைமேல் எல்லையற்ற சேனைமுன்னே
கட்டியக் காரர் கனவிருது கூறிவர
வெண்சா மரம்வீசி விருது பலமுழங்கப்
பேரிகை டம்மானம் பிறகே தொனிமுழங்கச்
சந்திர காவிடால் தளமெலாம் தானிலங்க
நடந்தான்காண் வன்னியுந்தான் நல்லமுத்து மாலைகொஞ்ச
அத்தியுத்திக் கோட்டையிலே அம்மா ளருகேவந்தான்
வந்துகண்டு தெண்டனிட்டான் வாள்வீரன் வன்னியுந்தான்
ஏந்தி யெடுத்துஇரு கண்ணோடே தானணைத்து
ஆயிரம் ஆலாத்தி அடுக்கடுக்காய்த் தானெடுத்துத்
திட்டிக் கிடாய்வெட்டி தீரனவன் வன்னியற்கு
வேண்டும் வரிசையெல்லாம் விதவிதமாய்த் தான்கொடுத்துச்
சேனை படைத்தலைவர் சேர இருந்தாலும்
கோடி திரவியங்கள் கொள்ளையிட்டுப் போனாலும்
இந்தவெற்றி போதாதோ என்மருகா வன்னி யென்றாள்
கேட்ட படைத்தலைவர் கெடிகலங்கிப் போவார்கள்
இனியிளப்ப மில்லை யென்மருகா வன்னியென்றாள்
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[அரியாண்டிபுரக்கோட்டையின் முற்றுகை: மறவர் தப்பியோடிக் காரடர்ந்தகுடியைக் கடந்து செல்லுதல்: அவர்களைத் துரத்திச்சென்று ராமப்பய்யன்படை வைகையாற்றங்கரையிற் கூடாரமடித்தல்]

மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமன்படை
அரியாண்டி புரக்கோட்டையை அடுத்து வளைந்துகொண்டார்
கோட்டையிற் குள்ளிருந்து குறும்படித்த மறவருந்தான்
இனியிருந்தால் மோசமென்று எல்லோருங் கிலேசமுற்றுப்
பொழுது புகுந்தாப்போல்ப் போகவென்று தான்துணிந்து
கச்சைகட்டி யெல்லோருங் கனத்தவெடி தானெடுத்துக்
கா[ர]டந்த குடிவிடியக் கடுகியே ஓடிவந்தார்
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமன்படை
போனான் மறவனென்று பொருமி மிகச்சினந்து
வண்ட மறவன் மதிமயங்கிப் போனானோ
காடிதைக் கொடுக்குமகன் காணாமல் ஓடுவனோ
வண்ட மறக்கொடுக்கை வளைந்து பிடிக்கவென்று
தொடர்ந்து பிடிக்கவென்று சொல்லரிய மன்னரெல்லாம்
கூடாரந் தானெடுத்து[க்] கொல்லிட்டுத் தானடந்தார்

865. 3 எல்லையத்த.
868. 2 டம்மாணம்.
871. 2 கோட்டைஇலே; 4 ளறுகைவந்தான்.
885. 1 கோட்டையுக்.
895. 1 துடந்து.
896. 3 கொலிலிட்டுத்.

கா[ர]டந்த குடிக்கோட்டை கடந்துமிகக் கொக்கரித்து
வாழை யடர்ந்திருக்கும் வைகை நதிகடந்து
ஆற்றங் கரைதனிலே அடித்தானே கூடாரம்
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[ராமப்பய்யன்படை பாம்பாற்றங்கரையிற் கூடாரமடித்தல்: அத்தியுத்திக் கோட்டையினின்றும் சடைக்கன் வந்து பொருது காயப்படுதல்: வன்னி பொருது வெற்றிகொள்ளுதல்]

மற்றநாள் தானும் மன்னன்புலி ராமன்படை
அத்தியுத்திக் கோட்டையிலே அவனிருப்ப தறியாமல்
பாம்பாற்றங் கரைதனிலே பாங்காகப் போயிறங்கிக்
கூடாரந் தானடித்தான் கோலாகல ராமன்படை
அந்த விசளம் அறிந்து சடைக்கனுந்தான்
கடவை மறித்துக் கலந்துபோர் செய்தான்காண்
பாதை மறித்துப் பாங்காகக் கொள்ளையிட்டான்
இருவர்படை மூண்டு எரித்துப் பரித்தார்கள்
அப்போ சடைக்கன் ஆர்ப்பரித்துக் கொக்கரித்து
நாடு கலக்கியெனும் நல்லதொரு வான்பரிமேல்
ஏறிச் சடைக்கன் எல்லையற்ற சேனைமுன்னே
ஊடுருவச் சென்றான் உலகங் கிடுகிடென
வாளோடு வாள்முரிய மண்டிப்போர் செய்யலுற்றார்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனைவெள்ளம்
வந்து வளைந்துகொண்டார் மதச்சடைக்கன் சேனையின்மேல்
கோல[க்] கொண்[டை]யான் கூட்டப் புரவிகளும்
ஆயிரம் புரவி ஆர்ப்பரித்துத் தான்பொருதார்
பட்டாணி வாளெடுத்துப் பருந்துபோலே பாய்ந்து
ஊடுழக்க வெட்டினான் உல[க]ங் கிடுகிடென
தீரன் சடைக்கனையும் திறமாக வெட்டலுற்றார்
காயமது பட்டுக் கலங்கியே சடைக்கனுந்தான்
என்மருகா வன்னி யினிவந்து கூடுமென்றான்
அப்போது வன்னி அவ்விசளந் தான்கேட்டுப்
புலியை நரிபாய்ந்து போகுமோ வென்றுசொல்லி
மீசை முறுக்கி விறுதுகள் தான்பேசி
வெட்டின பட்டாணியை விறுதுசொலித் தான்பிளந்தான்
பெட்டியு மூடியுமாய்ப் பிளந்தெறிந்தான் வன்னியுந்தான்

**898.** 1-2 வாளைபடந்திருக்கும்.
**899.** 1 ஆத்தாங்.
**901.** 1-2 மத்தநாள்ச்சென்று.
**903.** 1 பாம்பாத்தங்; 4 போஇறங்கிக்.
**916.** 4 புரவியளும்.
**918.** 3 பருந்துபோலே.
**925.** 1 வீசி.
**927.** 1 பொட்டியு; 3 புளந்தெறிந்தான்.

இடசாரி வலசாரி யெதிர்த்துப் பொருதலுற்றார்
முந்நூறு பட்டாணி முழுதுமங்கே தான்மடிந்தார்
அய்யாயிரம் பேர் அக்களத்திலே மடிந்தார்
கூடாரங் கொள்ளையிட்டுக் குடல்பிடுங்கி மாலையிட்டுப்
பட்ட படுகளத்தைப் பார்க்கப்பயந் தோடுவராம்
மாலவாண்டு கொடுக்கு வஞ்சனையாய் வெட்டுவனே
என்றுசொல்லி ராமன்படை யேங்கி முகம்வாடி
ஒன்றோடே ஒன்று உருண்டு கிடப்பாரும்
கழுகு பருந்து காகம்விருந் துண்டிடவே
மன்னன்புலி ராமன்படை மட்டில்லாச் சேனைவெள்ளம்
தட்டழிந்து கெட்டுத் தறுகாம லோடிவிட்டார்
விதிவசமோ என்று வெறிகொண்டு ஓடலுற்றார்
மாமனுட மச்சினன்தான் மாண்டு கிடப்பாரும்
செகநாதம் போனாலும் சேரப் பிழைப்போமோ
என்று புலம்பி யேமாந்து போவாரும்
அன்று முரிந்து அடைந்தார்கள் பாளையத்தில்

[சடைக்கன்போருட்டு வன்னி வருந்துதல்]

மற்றநாள்த் தானு மதச்சடைக்கன் வன்னியுந்தான்
அம்மான் முகம்பார்த்து அழுது மனங்கலங்கிக்
காயமது கட்டிக் கலங்கி முகம்பா[ர்]த்துக்
கோடி திரவியங்கள் கொள்ளைகொண்டு போனாலும்
விறுது சடைக்கனையும் வெட்டுவனே பட்டாணி
கோட்டை விலைப் போனாலும் கொற்றவர்கள் மாண்டாலும்
ஆனை குதிரைபடை அளவற்று மாண்டாலும்
ஊழி முடிந்தாலும் உகாந்தமாய்ப் போனாலும்
நன்னகரி கொள்ளையிட்டு நாடழிந்து போனாலும்
விறுது சடைக்கனுக்கு வேதனையுந் தான்வருமோ
என்று புலம்பிவன்னி யெழுந்திருந்து போகலுற்றார்

[சடைக்கனும் வன்னியும் பாம்பாற்றங்கரையிற் படகேறி
இராமேச்சுரந்தீவுக்குப் போதல்]

மற்றநாள்த் தானும் மதச்சடைக்கன் வன்னியுந்தான்
ராமநாத சுவாமி நல்லதுணை யென்றுசொல்லி
அம்மானே நீருமிப்போ ஆனைபரி யேறுமென்றார்

**938.** 4 லோட்டிவிட்டார்.
**942.** 3 யேமறந்து.
**944.** 1 மத்தநாள்த்.
**949.** 3 கொத்தவர்கள்.
**950.** 3 அளவத்து.
**951.** 1 உளளய்.
**953.** 3 வேதினையுந்.

அத்தி[யுத்தி]க் கோட்டைவிட்டு ஆன பெருந்தளத்தான்
பாம்பாற்றங் கரைதனிலே பாங்குடனே வந்திறங்கிச்
சோங்கும் மறுமாவும் சோடினையாய்ப் பாய்விரித்துப்
படைத்தலைவ ரெல்லோரும் படையிலே யேறுமென்றார்
தண்டிகை பல்லாக்குச் சகலமும் ஏற்றலுற்றார்
ஆனை குதிரை அடங்கலுந்தான் ஏற்றுமென்றார்
பொக்கிஷங்கள் கூடாரம் பொருந்தியே யேற்றுமென்றார்
எல்லோரையு மனுப்பி யெதிரில்லா வன்னியுந்தான்
பெண்டு[கள்]நாச்சியெனும் பெரியதொரு வான்பரியும்
நாடு கலக்கியெனும் நல்லதொரு வான்பரியும்
தோணியிலே தானேறத் தோணுதில்லை வான்பரிதான்
என்செய்வோ மென்றுவன்னி ஏங்கி முகம்வாடி
நானேறும் வான்பரியை ராமனோ ஏறுவன்காண்
கண்ணைப் பிடுங்கிக் காட்டிலே ஓட்டுமென்றார்
அப்போ படைத்தலைவர் அருகேநின்று என்சொலுவார்
கட்டியே வான்பரியைக் கப்பலிலே ஏற்றுமென்றார்
கப்பலிலே யேற்றிக் கரைசேர்த்தார் வான்பரியைக்
கப்பலிலே தானேறிக் க[ன]த்த சடைக்கனுந்தான்
ராமநாத சுவாமி நல்லதுணை யென்றுசொல்லி
உன்பாதம் நம்பிவந்தேன் உலகளந்த மாயவனே
மன்னன் புலிவன்னி மகாதுக்கப் பட்டுநின்று
என்செய்வோ மென்றுவன்னி யிருந்து கிலேசமுடன்

**[அத்தியுத்திக் கோட்டையில் ராமப்பய்யன் இருபதுநாள் தங்குதல்]**

போனான் மறவனென்று பொருமி மிகச்சினந்து
எங்கேதான் போனாலும் இனிவிடப் போறோமோ
கடலேறிப் போனமென்று கனவிறுது கூறினனும்
வீரவாள் கைப்பிடித்து வீரியங்கள் பேசினனும்
என்வலுவும் அவன்வலுவும் இனியல்லோ பார்க்கவேணும்
என்றுசொல்லி அய்யன் இருகண் மிகச்சிவக்க
அப்போ படைத்தலைவர் அருகேநின்று என்சொல்லுவார்
சேதுக் கரைவாழும் தீரன் அரசிருப்பும்
அத்தியுத்திக் கோட்டை அவனிருந்து போனதல்லோ
பள்ளியறை மாளிகையும் பலகணியு மெத்தவுண்டாம்
படைத்தலைவர் சூழ்ந்திருக்கும் பன்னக சாலையுண்டு
என்று படைத்தலைவர் எல்லோருந் தாமுரைத்தார்
அப்போது ராமய்யனும் அந்த விசளங்கேட்டு

**967.** 4 வான்பரியின். **984.** 4 பார்க்கவென்று.
**980.** 3 பொறுமி.

அத்தியுத்திக் கோட்டை அர[ண்]மனையில் வந்திருந்தார்
இருந்தானே ராமய்யனும் இருபதுநாள் அர[ண்]மனையில்

[ராயர் காகிதமும் கர்த்தர் காகிதமும்.]

கோலாகல ராமன் கொலுவி லிருக்கையிலே
மதுரை தனிலிருந்து வந்தானே ஒற்றனுந்தான்
ராயருட காயிதமும் நலமுடனே தானெழுதி
முகிலருடன் பாச்சா முப்பதினா யிரங்குதிரை
கணவாயை வந்து கட்டிக்கொண்டா ரென்றுசொல்லிக்
கோலக்கொண்டை யான்குதிரைக் கூட்டப் பெருந்தளமும்
ராயருட சீமையெல்லாம் நாலுதிக்குங் கொள்ளையிட்டு
விசையா புரமும் வேலூருங் கொள்ளையிட்டுக்
கணவாய்[க]ள் கோட்டையெல்லாம் கட்டிக்கொண்டா னென்று
இங்குவரப் பயணமா யிருக்கிறா னென்றுசொல்லி [சொல்லி
ராயருட காயிதமும் நமக்குவந்த தென்றுசொல்லி
மன்னன்புலி ராமனையும் வரவழைக்க வேணுமென்று
கர்த்தனுட காயிதமும் கடுகியே தான்கொடுத்துக்
காயிதத்தைக் கொண்டு கடுகியே ஓடிவந்தான்
மன்னன்புலி ராமய்யனை வந்துகண்டான் ஒற்றனுந்தான்
காயிதத்தைக் கொடுத்துக் கைகட்டி நிற்கலுற்றான்

[ராமப்பய்யன் மதுரை வந்து அங்கிருந்து புறப்பட்டுச்சென்று ராயரைக்கண்டு துலுக்கர்படையை வெற்றிகொண்டு மீளுதல்: வரும்வழியில் கள்ளரை அடக்குதல்: வானரவீரமதுரைக்கு வருதல்]

வாசித்துப் பார்த்து மன்னன்புலி ராமயனும்
துலுக்காண மொருபொருட்டாய்ச் சொல்லி அனுப்பினரோ
துலுக்கர் படையெல்லாந் தூளிபடவே துரத்திக்
குதிரைத் தளத்தையெல்லாம் கொள்ளையிட வேணுமென்று
மாப்பிள்ளை கொண்டபப்பய்யன் மன்னன் தனையழைத்து
வெங்கிட கிஷ்ணய்யன் வீமன் தனையழைத்து
மண்டூருப் பாப்பய்யனே வாருமென்று தானழைத்துப்
பாளையக் காறர் பலபேரைத் தானழைத்து
எல்லோரையு மழைத்து இதமாகப் புத்திசொல்லி
இன்றுமுத லெட்டாநாள் இங்கே வருவேனென்று
ஆற்றங் கரையும் ஆன துறைமுகமும்

996. 4 ஒட்டனுந்தான்.
1004. 3 யிருக்குறு.
1005. 3 நமக்குவந்து.
1010. 4 நிக்கலுற்றான்.
1014. 4 வேணுமென்று சொல்லி.
1017. 1 மட்டூருப்.
1019. 3 இதவாகப்.

புகழ்பெரிய போகலூர்க் கோட்டை பதனமென்று
என்றுசொல்லி ராமய்யனும் ஏறினான் தண்டிகைமேல்
மன்னர் படைசூழ மந்திரிமார் சூழ்ந்துவர
ஆனை குதிரை ஆர்ப்பரித்து முன்னடக்கப்
பேரிகை டம்மானம் பிறகே முழங்கிவர
வெண்சா மரைவீச விருது பலமுழங்கக்
கட்டியக் காறர் கனவிருது கூறிவரக்
கவிவாணர் கொண்டாடக் காரியப்பேர் முன்னடக்கப்
பதினெட்டு மேளவகை பண்பாய் முழங்கிவர
ஆனைமேல்ப் பேரிகை அதிர்ந்து முழங்கிவர
வந்தே யிறங்கினார் மானா மதுரையிலே
கங்குல் விடிந்து கதிரோன் எழுந்த பின்பு
தேவர்கள் போற்றிசெயுந் திருப்பூவணங் கடந்து
மதுரைத்தெரு வீதியிலே வந்தார்காண் ராமய்யனும்
அங்நேரந் தன்னில் அர[ண்]மனையில் வந்திருந்து
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
மன்னன் திரு மலையேந்திரனை வந்துகண்டு சந்தித்து
ஆண்டவனே இப்போ அழைத்த பணிவிடையேன்
என்வார்த்தை தன்னை யினிக்கேளும் ராமா நீ
கோலக்கொண்டை யானும் குதிரைப் பெருந்தளமும்
கணவாய்[க]ள் கோட்டையெல்லாம் கட்டிக்கொண்டா ரென்று
விசையா புரமும் வேலூருங் கொள்ளையிட்டு [சொல்லி
இங்குவரப் பயணமா யிருக்கிறா னென்றுசொல்லி
ராய ரதுக்கு நமக்கெழுதி வந்ததுகாண்
அதுகண்டு நாமள் [அழை]ப்பித்தோம் ராமய்யனே
இதுவோசில பாரமென்று எண்ணி யுரைப்பார்கள்
குதிரைத் தளமெல்லாங் கொள்ளையிட்டு வாறேனய்யா
வெட்டித் துரத்தி விருதுகளும் தான்பறித்துக்
கணவாய்[க]ள் கோட்டையெல்லாம் கலங்கவே தானடித்து
ஆறு கடக்க அலைகுலையத் தான்துரத்தி
வெட்டித் துரத்தி வேலூரு கைப்பிடித்து
ஆயிரங் குதிரை அன்பாகத் தான்சேர்த்து
வாறேனய்யா என்றுசொன்னான் மன்னன்புலி ராமய்யனும்
ஆயிரங் குதிரைக்குவா யமுதுகூட்டச் சொன்னான்காண்
மன்னன்திரு மலையேந்திரன் மனமகிழ்ந்து கொண்டாடிக்
கன்னன்புலி ராமய்யனுங் கைகட்டி வாய்புதைத்துப்

**1035.** 2 வீதிஇலே.
**1036.** 1 அன்னேரங்.
**1053.** 4 தான்சேர்ந்து.

போய்வாறே னய்யா பொருந்திவிடை தாருமென்றான்
நின்றனுப்பிக் கொண்டு நீதியுடன் கையேந்திப்
போய்வாராய் ராமாவென்று பொருந்தி விடைகொடுத்தார்
நடந்தான் புலிராமன் நல்லமுத்து மாலைகொஞ்சத்
துவரிமான் தன்னில்வந்தான் துங்கமுடி ராமய்யனும்
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
சோழவந்தான் தன்னில் சூழ்ந்தடித்தான் கூடாரம்
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
வடமதுரை தன்னில் வண்மையுடன் சென்றிறங்கித்
திண்டுக்கல்லு கடந்து தேக்கமலை தன்னில்வந்து
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
மணப்பாறை தன்னில் மன்னவனுஞ் சென்றிறங்கி
இரட்டை மலைவழியாய்க் கடந்தார்கள் எல்லோரும்
திருச்சிறுப் பள்ளிகடந்து சீரங்கந் தனிலிறங்கி
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
சமையபுரங் கண்ணனூர் தன்னிலே வந்திறங்கி
ஊட்டத்தூர் தன்னில் ஒருநொடியிற் போயிறங்கி
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
வாலி[ெ]க[ா]ண் டாபுரத்தில் வந்திருந்தா ரெல்லோரும்
கங்குல் விடிந்து கதிரோன் எழுந்தபின்பு
ஆயிழையாள் வீற்றிருக்கும் ஆரணியுந் தான்கடந்து
வேலூரு தன்னில் விரையவே வந்திறங்கி
வெங்களூர் தன்னில் விரையவே சென்றிறங்கிக்
கங்குல் விடிந்து கதிரோன் எழுந்ததற்பின்
ராயருட சமுகந்தன்னை நன்றாக வந்துகண்டு
ஆண்டவனே இப்போ அழைத்த பணிவிடையேன்
ராமப்பய்யன் உரைகேட்டு ராயருந்தான் ஏதுசொல்வார்
துலுக்கர் பெரும்படைதான் தொலையாத வான்பரியும்
கணவாய் வழியில்வந்து கடல்போலே வந்ததுகாண்
சீமை யழித்துத் தீக்கொளுத்தி விட்டார்காண்
அதுகண்டு நாமும் அழைப்பித்தோம் ராமய்யனே
மன்ன னுரைத்ததெல்லாம் மனமகிழ்ந்து கேட்டுநின்று
ஆண்டவனே யிப்போ அடியேன்சொல் விண்ணப்பங்கேள்
துலுக்கர் படையைமெய்ப்பாய்ச் சொன்னீரே ஆண்டவனே
இதுவோசில பாரமென்று எழுந்திருந்தான் ராமயனும்
குதிரைத் தளத்தைவென்று குஞ்சரமுங் கொள்ளைகொண்டு
வெட்டி விரட்டி விறுதுகளும் தான்பறித்து

**1078.** 1 ஆயிளையான்.
**1085.** 3 துலையாத.
**1086.** 4 வந்துதுகாண்.

வெற்றிகொண்டு வாறேனென்று விண்ணப்பஞ் செப்பலுற்றான்
அடைக்காயும் வெள்ளிலையும் அன்புடனே தான்கொடுத்து
வெற்றிகொண்டு வாவென்று விருதுகளும் தான்கொடுத்துப்
போய்வாரு மென்று பொருந்தி மனமகிழ்ந்தார்
நடந்தான் புலிராமன் நல்லபெருஞ் சேனையுடன்
வெங்களூ[ர்] தன்னில் விடுதியாய் வந்திருந்தார்
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
இக்கரைவெங்கிட கிஷ்ணய்யருக்கு எழுதினார் ஓலைதனை
ஓலைதனை வாங்கி ஓடினான் ஒற்றனுந்தான்
ஓலை தனைக்கொடுத்து ஒதுங்கிநின்றான் ஒற்றனுந்தான்
வாசித்துப் பார்த்து மனமகிழ்ந்து கொண்டாடி
மன்னன்புலி ராமய்யனை வந்துகண்டான் அந்நேரம்
துலுக்கர் பெரும்படையும் தொலையாத வான்பரியும்
கணவாய் [தனில்] வந்து கட்டிக்கொண்டா ரென்றுசொல்லி
ராய ரதுக்கு நமக்கோலை வரவிடுத்தார்
துலுக்கர் பெரும்படையைத் தூளிபடவே துரத்தி
ஆறு கடக்க அலைகுலையத் தான்துரத்தி
இக்கரைவெங்கிட கிஷ்ணய்யர் எழுந்திரு மென்றுசொல்லி
எல்லோரும் போ[ே]ய யெதிர்த்துப்போர் செய்தார்கள்
மன்னன் புலிராமன் மண்டிப்போர் செய்யலுற்றார்
இக்கரைவெங்கிட கிஷ்ணய்யன் எதிர்த்துத் துரத்திவிட்டார்
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனையுந்தான்
துலுக்கர் பெரும்படையைச் சூறையிட்டுத் தான்விரட்டி
ஆறு கடக்க அலைகுலையத் தான்துரத்தி
வெட்டி விருதறுத்தான் வேந்தன்புலி ராமய்யனும்
வெற்றிகொண்டு ராமய்யனும் வீரியங்கள் பேசிவந்தார்
ஆறாயிரங் குதிரை அன்பாகத் தான்மடிந்து
அறுபது குஞ்சரமும் அன்பது ஒட்டகமும்
ஆயிரங் குதிரையும் அன்பாகத் தான்சேர்த்துப்
பிடித்து அனுப்பினார் பேர்போன ராமய்யனும்
வெங்கிட கிஷ்ணய்யனும் வீமனே வாருமென்று
கணவாய் பதனமென்று கற்னன்புலி ராமய்யனும்
தன்தண்டந் தான்வைத்த[ா]ன் தார்வேந்தன் ராமய்யனும்
வேண்டும் வரிசைகளும் வெற்றிகொண்ட குஞ்சரமும்
வெற்றிகொண்ட ராணுவுக்கு வெகுவரிசை தான்கொடுத்து

**1097.** 4 தான்குடுத்துப்.
**1102.** 3 எழுதினற்.
**1103.** 4 ஒட்டனுந்தான்.
**1104.** 4 ஒட்டனுந்தான்.
**1107.** 3 துலையாத.
**1112.** 3 எழுந்திரியு.
**1122.** 1 அறுவது.
**1128.** 2 வரிசையளும்.

ராயருட சமுகத்தில் நன்மையுடன் வந்துகண்டார்
வந்துகண்ட ராமய்யனை மார்போடே தானணைத்து
வெற்றிகொண்ட ராமய்யனுக்கு வெகுவரிசை பண்ணிவைத்துப்
பூஷணங்க ளுள்ளதெல்லாம் பூட்டி யலங்கரித்தார்
என்னருகே ராமய்யனே இருமென்று தானுரைத்தார்
அவ்வார்த்தை கேட்டு அன்புடனே ராமய்யனும்
கச்சித்திருமலை யேந்திரனைக் காணாமல் நானிருந்தேன்
கண்கள்புகை யாகுமையா கற்தனே யென்றுரைத்தார்
எங்கே யிருந்தாலும் எப்போதும் நான்வருவேன்
வந்துதவி பண்ணுவிப்பேன் மன்னவர்கள் மெச்சிடவே
வருஷ மொருதரந்தான் வந்துபோ மென்றுரைத்தார்
மனமகிழ்ந்து ராயரையும் மன்னன்புலி ராமய்யனும்
நின்றனுப்பிக் கொண்டு நீதியுடன் கைதொழுது
நடந்தான் புலிராமன் நல்லபெருஞ் சேனையுடன்
ஆயிர[ம்] வான்பரியும் அறுபது குஞ்சரமும்
எண்பது ஒட்டகமும் எதிரில்லாச் சேனைகளும்
அய்யனுட பாளையத்தில் அதிவிரசாய் வந்ததுகாண்
வெங்களூர் தன்னில் விடுதியாய் வந்திறங்கி
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
வேலூ[ை]ர விட்டு விசையா புரத்தில்வந்து
ஆனைகுந்தி தான்கடந்து அதிவீர ராமய்யனும்
ஊட்டத்தூர் தன்னில் ஒருநொடியில் வந்தார்காண்
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
வாலிகொண் டாபுரத்தில் வந்தே யிறங்கலுற்றார்
மற்றநாள்த் தானும் மதயானை ராமய்யனும்
காட்சி கொடுக்கும் கண்ணனூர் தன்னில்வந்தார்
மற்றநாள்த் தானும்அதி மதியுடனே ராமப்யனும்
தென்னவர்கள் கொண்டாடும் சீரங்கந் தன்னில்வந்தார்
ஸ்ரீரா[ம] ரங்கருக்குச் சிறப்பு மிகக்கொடுத்தார்
மற்றநாள்த் தானும் மதிதீரன் ராமய்யனும்
திருச்சிறுப் பள்ளித் தெருவில் வருகையிலே
இவருந்தான் ஆரென்று இயல்பான பெண்களெல்லாம்
மன்மதன்காண் என்பாரும் மதிமந்திரிகாண் என்பாரும்
ராசனிவன் என்பாரும் ராமய்யன்காண் என்பாரும்
துலுக்கர்துரை மக்களைத்தான் துரத்திவந்த சேவகன்காண்

**1132.** 4 பண்ணிவித்துப்.
**1140.** 2 மொருதிரந்தான்.
**1144.** 3 அறுவது.
**1146.** 4 வந்துதுகாண்.
**1155.** 1 காச்சி.
**1160.** 1 திருச்சினப்.
**1164.** 4 சேவுகன்காண்.

மயலான பெண்களெல்லா மதிளெட்டிப் பார்ப்பாரும்
இப்படியே பார்த்துநின்றார் ஏந்திழைமா ரெல்லோரும்
மற்றநாள்த் தானும் மகாவீரன் ராமய்யனும்
மணப்பாறை தன்னில் வந்தே யிறங்கினர்காண்
கங்குல் விடிந்து கதிரோன் எழுந்தபின்பு
தேக்க மலைகடந்து திண்டுக்கல் தான்கடந்து
சோழவந்தான் தன்னில் சூழ்ந்தடித்தான் கூடாரம்
கங்குல் விடிந்து கதிரோன் உதித்தபின்பு
துவரிமான் தன்னில்வந்தார் துங்கமுடி ராமய்யனும்
பிள்ளைய பாளையத்தில்ப் போயே யிறங்கினர்காண்
வேந்தன்புலி ராமய்யனும் வெற்றிகொண்டு வந்தானென்று
மன்னன்திரு மலையேந்திரன் மனமகிழ்ந்து கொண்டாடிக்
கற்ன[ன்]புலி ராமய்யற்கு கனகஸ்நானஞ் சொரிய
வயித்திஅய்யன் தன்னை வரவழைக்கச் சொன்னார்காண்
இப்போதே ராமய்யனை யிங்குவர அழையுமென்றார்
சொன்ன வுடனே தோற்றமுள்ள வயித்திஅய்யன்
மன்னவரும் மந்திரியும் வாய்த்த வயித்திஅய்யன்
அந்நேரந் தன்னில் அதிவீர மாய்நடந்து
வந்துகண்டு ராமய்யனை வாகாய் மிகத்தழுவிக்
கற்தனென்னும் ராசன் கச்சித்திரு மலையேந்திரன்
கனகதானஞ் சொரியக் கடுகி அழைக்கச்சொன்னார்
சொன்ன வுடனே தோற்றமுள்ள ராமய்யனும்
என்னவெற்றி கண்டேன் எனக்குக் கனகஞ்சொரியச்
சேது மறவனைத்தான் சென்று பிடித்துவந்தால்
கனக முடனேஅப்போ கனகஸ்நானம் பெறலாம்
என்றுசொல்லி ராமய்யனும் எழுந்திருந்து போகலுற்றார்
குஞ்சரமும் வான்பரியும் கோடேறி முன்னடக்கச்
செந்தூள் மிகப்பறக்கச் செங்கதிரோன் தான்மறைய
தேவர்கள் போற்றிசெயுந் திருப்பூ வணத்தில்வந்தார்
கங்குல் விடிந்து கதிரோன் எழுந்தபின்பு
வாய்த்த மடப்புறத்தார் வந்துகண்டா ரந்நேரம்
ஆண்டவனே இப்போ அடியார்கள்சொல் விண்ணப்பங்கேள்
கள்ளர் உபத்திரவமும் காவலனே ஆற்றாமல்
மாடுகன்று ஆடு வாய்த்தபணங் காசுமுதல்

**1166.** 2 பார்த்துநின்ற.
**1173.** 1 தொவரிமான்.
**1186.** 3 தோத்தமுள்ள.
**1189.** 3 கனகஸ்தானம்.
**1191.** 3 கோடேரி.
**1193.** 2 போத்திசெயும்; 3-4 திருப்புவனத்தில் வந்தார்.
**1195.** 2 மடப்பரத்தார்.
**1197.** 4 ஆத்தாமல்.
**1198.** 1 மாடுகண்ணு.

சீலைத்துணி மங்கிலியம் சேரப் பறிகொடுத்தோம்
என்றுசொன்ன போதே இருகண் மிகச்சிவந்து
மத்தஞ் சிறுகுடியில் மன்னவனுஞ் சென்றிறங்கி
நாடழித்துத் தீக்கொளுத்தி நன்னகரி பாழாக்கி
வெட்டிச் சிறைபிடித்து விரட்டியே தான்துரத்தி
இப்படியே அய்யன் ஏற்பாய் அழிக்கையிலே
மத்தஞ் சிறுகுடியார் மதுரையிலே போய்விழுந்து
கற்தனெனும் ராஜன் கச்சித்திருமலை யேந்திரற்கு
அய்யன் நடத்தினதை அன்பா யுரைக்கலுற்றார்
அவரு[ரை]த்த தைக்கேட்டு அன்பாய்த்திரு மலையேந்திரன்
கள்ளர்வண்டர் தங்களையும் கருவறுக்க வேண்டாங்காண்
கள்ளர்பத்து நாடென்று கனமா யிருக்கட்டுங்காண்
என்றுசொல்லி ராமய்யற்கு எழுதிவிட்டார் ஓலைதனை
வாசித்துப் பார்த்து மன்னன்புலி ராமய்யனும்
சிறுகுடி விட்டகன்றார் தீரன்புலி ராமய்யனும்
அந்நேரந் தன்னில் அலைகதிரோன் போய்மறைந்தான்
கங்குல் விடிந்து கதிரோன் எழுந்தபின்பு
தேவர்கள் போற்றிசெய்யும் திருப்பூ வணத்தில்வந்தார்
மற்றநாள்த் தானும் மதிதீரன் ராமய்யனும்
ராஜ கெம்பீரன் நல்லவழி தான்கடந்து
கிளியினங்கள் பாடும் கிறுங்காத [அ]ரண்கடந்து
வானர வீர மதுரைதனில் வந்திறங்கி

**[போகலூர்க்கோட்டை முற்றுகை : ராமப்பய்யன் படையின் வெற்றி : அழகனையும் குமாரனையும் பிடித்துச் சித்திரவதை செய்தல்]**

மற்றநாள்த் தானும் மதபோசன் ராமய்யனும்
போகலூர்க் கோட்டை வளைந்திருக்கு மன்னவரை
செஞ்சித் துருக்கமல்ல ஸ்ரீரங்கங் கோட்டையல்ல
மண்கோட்டை தன்னை வளைந்திருக்குஞ் சேவகரே
இத்தனைநாள் இக்கோட்டை வாங்கா திருந்தீர்களோ
நாளைப் பகல்நாலு நாழியனுக் குள்ளாக
கோட்டைதனை வாங்காட்டால் கொன்றிடுவே னுங்களையும்
வைகைக் கரைநீளம் வாகாய்க் கழுவில்வைப்பேன்
என்றுசொல்லி ஓலை யெழுதிவிட்டார் ராணுவுக்கு

**1201.** 2 சீருகுகுடியார்.
**1212.** 2 பாற்து.
**1218.** 2 கெம்பீரம்.
**1219.** 1 கிளியெனங்கள் ; 3-4 கிருங்காதரன்கட,ந்து.
**1222.** 4 மன்னவிரை.
**1223.** 2 துருவமல்ல.
**1224.** 4 சேவுகரே.
**1225.** 4 திருந்தியளே.
**1226.** 3 நாழிகளுக்.

வாசித்துப் பா[ர்]த்து வயிறெரிந்து மன்னவர்கள்
அங்கேபோய்ச் ச[ா]கிறது இங்கே மடிவோமென்று
நாலுதிக்கும் ஏணிவைத்து ராணுவத்தா ரெல்லோரும்
கோட்டையுங் கொத்தளமும் கொம்மை யிடித்தார்கள்
குஞ்சரத்தை விட்டுக் கோட்டை தகர்த்தார்கள்
கோட்டை தனைப்பிடித்தார் கொடுங்கோபங் கொண்டெழுந்து
கோட்டையில்க் குள்ளிருந்து குறும்படித்த மறவருந்தான்
வெட்டி விரட்டவென்று வீரியங்கள் தான்பேசிக்
குமார னழகனும் கூட்டப் பெரும்படையும்
குத்தி விரட்டிக் குலவைவிட்டு ஊழியத்தார்
மன்னன்புலி ராமன்படை மட்டில்லாச் சேனைவெள்ளம்
குமார னழகனையுங் கூட்டப்படை யத்தனையும்
கைப்பிடியாய்த் தான்பிடித்துக் கட்டி யிறுக்கலுற்றார்
வெற்றிகொண்டு அய்யன்படை வீரியங்கள் தான்பேசி
மதியா ரழகனையும் மன்னன் குமாரனையும்
கொண்டுவந்து விட்டார்கள் கோலாகல ராமன்முன்னே
பெண்ணைச் சிறைப்பிடித்து ஆணை அரிந்துவெட்டி
அஞ்ஞூறு பெண்சிறையும் அந்நேரங் கூட்டிவந்தார்
மெய்க்காவ லாக விடுதிவிட்டு வைக்கச்சொன்னார்
குமார னழகனையும் கூப்பிட்டு முன்னேவிட்டு
என்னோடே நீயும் எதிர்த்துப்போர் செய்வாயோடா
என்றுசொல்லி அய்யன் இருகண் நெருப்பெழவே
காமுட்டிச் சாத்தனைக் கடுக அழைக்கச்சொன்னார்
கட்டி யடித்தார்கள் கனகோபங் கொண்டெழுந்து
தச்சனை யழைக்கச்சொன்னார் தார்வேந்தன் ராமய்யனும்
கூட்டிவந்து விட்டார்கள் கோலாகலன் கொலுவில்
மதியா ரழகனையும் மன்னன் குமாரனையும்
குப்புறவே தான்கிடத்திக் குறிமன்னர் பா[ர்]த்திருக்க
முதுகுத்தோல் தன்னை முறைமுறையாய்ச் செதுக்கச்சொன்னார்
அந்தப் படியே ஆனதொரு ஆசாரி
தோலை யுரித்தான் துடித்துத் துடித்துவிழச்
செதுக்கின ஆசாரி தியங்கியங்கே தான்விழுந்தான்
மதியா ரழகனையும் மன்னன் குமாரனையும்
கூட்டிவரச் சொன்னான் கோலாகல ராமன்
கூட்டிவந்து விட்டார்கள் கோலாகலன் கொலுவில்

**1230.** 3 வயரெரிந்து.
**1238.** 2 னளகனும்.
**1239.** 4 உளளியத்தார்.
**1241.** 2 னளகனையும்.
**1247.** 3 அன்னேரங்.
**1250.** 3 எதித்துப்போர்.
**1251.** 4 நெருப்பளளே.
**1257.** 1 குப்பறவே.

மூட்டுமூட் டாக மொழியெலும்பை வாங்கச்சொன்னார்
அந்தப் படியே ஆனதொரு ஆசாரி
மூட்டுமூட் டாக மொழியெலும்பைத் தான்தறித்தார்
தறிச்ச வுடலையெல்லாம் தான்வாரிக் கூடையிலே
மதியா ரழகன்தேவி மன்ன[ன்] குமாரன்தேவி
கூட்டிவரச் சொன்னான் கோலாகல ராமய்யனும்
கூட்டிவந்து விட்டார் கோலாகலன் கொலுவில்
இருவர் தலையிலேயும் ஏற்றுமென்றார் கூடைதனைப்
பாளையத்தைச் சுற்றிப் பறையடித்து வரச்சொன்னார்காண்
படைத்தலைவ ரைப்பார்த்துப் பாருமென்றா ரென்கீற்தி
மதியா ரழகன் மனையாட்டி தன்னையுந்தான்
குமார னழகனுட தேவியைக் கூட்டிவந்து
கபாடக்காறரை விட்டுக் கையைப் பிடிக்கச்சொன்னார்
பறையன்பிடிப் பானோவென்று பார்த்தந்தப் பெண்கொடியாள்
விடுத்தா ளவளுயிரை விண்ணுலகம் போய்ச்சேர்ந்தாள்
மன்னன்புலி ராமய்யனுக்கு வந்துசொன்ன ரந்நேரம்
அவ்வார்த்தை கேட்டு அய்யனுந்தான் அப்போது
வாய்த்ததொரு பெண்கொடியை மனமகிழ்ந்து கொண்டாடிப்
பச்சை வடங்கொடுத்துப் பாங்குடனே அடக்கச்சொன்னார்
அந்தப் படியே ஆனதொரு பெண்கொடியை
எடுத்தடக்கச் சொன்னார்கள் எல்லோருங் கொண்டாட
அந்நேரந் தன்னில் அலைகதிரோன் போய்மறைந்தான்

[ராமப்பய்யன் படை ஆற்றங்கரைக் கோட்டையிலும் வேதாளையிலும் தங்கிப் பின் பாம்பாற்றங்கரையில் இறங்குதல்]

ஆழிநெடுந் தேரேறி அலைகதிரோன் வந்துதித்தான்
போனான் மறவனென்று பொருமி மிகச்சினந்து
எங்கேதான் போனாலும் இனிவிடப் போறேனோ
கடல்கடந்து போனாலும் கடலைத் தூளைப்பேனென்றார்
மன்னன் புலிராமன் மதம்பொழிந்து கொக்கரித்துக்
கடல்கடந்து தீவுதனில் காணாமல் போனானென்று
ஆற்றங்கரைக் கோட்டைக்கு அருகே முடுகிவந்து
கூடாரந் தானடித்தார் கொற்றவர்க ளெல்லோரும்
ஏடாரு மார்பன் ஏகாந்த மாயிருந்தான்
அந்நேரந் தன்னில் அலைகதிரோன் போய்மறைந்தான்

**1265.** 3 மொளியெலும்பை.
**1272.** 3 மெடுத்துமென்றார்.
**1273.** 2 சுத்திப்.
**1279.** 2 ளவளுஇரை.
**1284.** 4 பெண்ங்கொடியை.
**1288.** 3 பொறுமி.
**1293.** 1 ஆத்தங்கரைக்.
**1294.** 2 தானடித்தான்.

கங்குல் விடிந்து கதிரோன் எழுந்தபின்பு
கூடாரந் தான்பிடுங்கிக் கொற்றவர்க ளெல்லோரும்
வேதாளை தன்னில்வந்து விரைந்தடித்தார் கூடாரம்
மன்னன்புலி ராமய்யனும் வாகாய்க் கொலுவிருந்தார்
மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
பாம்பாற்றங் கரைதனிலே பார்வேந்தன் ராமயனும்
வந்தே இறங்கினர் மன்னன்படை யத்தனையும்

[திருவணை யடைத்தல்: அரசர்கள், தாசிகள், செட்டிகள், பரதேசிகள் கல்லெடுத்தல்]

அந்நேரந் தன்னில் அதிவீர ராமய்யனும்
ஓடத்துறை தோணித்துறை உகந்த கெடித்தலங்காண்
பாம்பன் துறைக்கோட்டை பார்த்துப் புலிராமன்
இந்தபிலங் கண்டல்லோ எதிர்த்தான் மறவனுந்தான்
வாய்த்த துறைமுகத்தில் வந்துநின்று ராமய்யனும்
அய்யோத்தி ராமர் அடைத்த திருவணைதான்
ஏதடா என்றான் எல்லோருங் கெடிகலங்கி
இந்தத் திருவணைதான் என்றார்க ளெல்லோரும்
திருவணையைத் தானடைக்கத் தீரன்புலி ராமய்யனும்
செப்பமா யெல்லோரும் சேரவிங்கே வாருமென்று
ராசாதி ராசரெல்லாம் நாட்டமுடன் வந்தார்கள்
பாளையக் காறர் படைத்தலைவரே கேளும்
திருவணையைத் தானடைக்கத் திருமால்போல் ராமய்யனும்
நல்ல திருவணையை நாமடைக்க வேணுமென்று
நாள்நட் சேத்திரம் நன்றாகத் தான்பார்த்துத்
தேங்கா யுடைத்தார்கள் தென்னவர்கள் மன்னர்முன்னே
கல்லெடுங்கோ என்று கரியமால் ராமய்யனும்
அரசன்மக்கள் ராசாக்கள் ஆனபடை மன்னரெல்லாம்
ருவுத்தர் பாடி நல்ல பெரும்படையும்
மல்லையர்கள் பொந்திலியர் மன்னர் பெரும்படையும்
எல்லோருங் கூடி இருகைகொட்டித் தான்சிரித்து
எல்லையற்ற சேனைதளம் எல்லோருந் தான்கூடி
மலைமுறிந்து வீழ்ந்தாலும் மண்ணிலுள்ளோர் வந்தாலும்
ஆரால் முடியுமடா ஆளச் சமுத்திரத்தை
காவேரி யாறுமல்ல கைவாய்க்கால் தானுமல்ல
பூவேரி தானுமல்ல புனனீர் மடுவுமல்ல

**1298.** 2 தான்பிடிங்கிக்.
**1305.** 3-4 உகந்தே கெடித்தலுகாண்.
**1323.** 1 மல்லயர்கள்.
**1325.** 1 எல்லையத்த.
**1329.** 3 பொணணீர்.

ஆழச் சமுத்திரத்தை அடைக்கவென்று தான்துணிந்து
இந்நாட்டில்க் கண்டதில்லை இவ்வுலகில்க் கேட்டதில்லை
பிழைத்த பிழையெல்லாம் பிழையாச்சே மன்னவரே
பா[ர்]ப்பான்பேய் கொண்டான்காண் பார்வேந்தே மன்னவரே
என்றுசொல்லி மன்னரெல்லாம் ஏங்கி முகம்வாடி
நின்ற இடமெல்லாம் நினைந்துநினைந்தே யுருகிச்
சேர்ந்த இடமெல்லாம் சேரக் கிலேசப்பட்டு
என்று சலித்து எல்லோரும் வாய்வறண்டு
நின்றுமெள்ளப் பார்த்து நெடியமால் ராமய்யனும்
தார்கொண்ட ராமனப்போ தலைப்பாகில்க் கல்லைவைத்துச்
சீர்கொண்டு தானடந்தார் செங்கண்மால் ராமய்யனும்
எல்லோரும் நின்றவர்கள் இதுபுதுமை யென்றுசொல்லி
அரசர்மக்க ளான அதிவீர ரெல்லோரும்
ராவுத்த பாடி நல்லபடை வீரரெல்லாம்
மல்லையர்கள் பொந்திலியர் மன்னர்படை வீரரெல்லாம்
துலுக்கர் பரிவாரம் தோருத சேவகரும்
உபையதள ராணுவெல்லாம் ஒருமிக்கச் சேகரமாய்
எல்லோரும் சேகரமாய் எல்லையற்ற மன்னரெல்லாம்
ராமனே கல்ச்சுமந்தால் நாமெடுக்க லாகாதோ
என்றுசொல்லி மன்னரெல்லாம் எல்லோருந் தான்கூடி
ஏல மிகப்பாடி யெடுத்தார்கள் கல்த்தனையும்
ஆளுக்கொரு கல்லு அச்சணமே தானெடுத்தார்
தாளில் வணங்காத தார்வேந்த ராசாக்கள்
வேளுக்கு மொப்பாய் விசாரமிட்டு நின்றார்கள்
அப்போது ராமய்யனும் அங்கவரைத் தான்பார்த்து
என்னுடைய பூண்நூலுக் குங்கள்நூல் ஏற்றமோதான்
அப்போது ராசாக்கள் அரிகரி யென்றுசொல்லித்
திருவணைக்குக் கல்லுத் திறமாகத் தானெடுத்தார்
ராசாக்கள் கல்ச்சுமந்தால் நாமிருக்க லாகாது
என்றுசொல்லி மன்ன ரெல்லோருங் கல்ச்சுமந்தார்
ராசாக்கள் கல்ச்சுமந்து நடந்து வருகையிலே
வேசை மகளொருத்தி விதமாகத் தான்பா[ர்]த்து
நீண்ட புகைச்சுருட்டும் நெற்றியிலே நாமமுமாய்ப்
பூண்ட சரப்பணியும் பூண்நூல்த் தலைப்பாகும்
உல்லாச வல்லவெட்டும் ஒருகைச் சுருளுமெங்கே
பக்கச்சமு தாடுமெங்கே பாரித்த வாங்குமெங்கே
கவிகரத்துக் கத்தி யெங்கே கன்னரே ராசாவே

**1345.** 4 சேவுகரும்.
**1355.** 4 ஏத்தமோதான்.
**1363.** 4 தலப்பாகும்.

கல்லேற்றி விட்டாரோ கன்னன்புலி ராமய்யனும்
சொல்லிச் சிரித்தார்கள் துங்கமுடித் தாசியர்கள்
வேசையர்கள் தான்சிரிக்க விட்டீரே யென்றுசொல்லி
அம்புபட்ட மான்போலே அவதிவந்த தென்றுசொல்லி
வெம்பி மனந்தளர்ந்து வேசித்துக் கண்சிவந்து
மன்னன்புலி ராமய்யனை வந்துகண்டு ராசாக்கள்
வேசை சிரிக்க விட்டீரே மன்னவரே
கத்தியிலே பாய்வோமென்றார் கன்னன்புலி ராசாக்கள்
அவ்வார்த்தை கேட்டு அதிவீர ராமய்யனும்
ராசாக்க ளெல்லோர்க்கும் நல்வசனந் தானுரைத்து
அடைக்காயும் வெள்ளிலையும் அன்புடனே தான்கொடுத்துப்
பச்சை வடங்கொடுத்தார் படைத்தலைவர் கொண்டாடப்
பாளையத்தி லுள்ள பரஸ்திரிக ளத்தனையும்
கூட்டிவரச் சொன்னார் கோலாகல ராமய்யனும்
ஏழாயிரம் வேசை இயல்பாகக் கூட்டிவந்தார்
ஆளுக்கு ஏழுகல்லு அடவாக எடுக்கச்சொன்னார்
ஏலயே லம்பாடி எடுத்தார்கள் வேசையர்கள்
ஒருத்தி கெடுத்தாளே உலகிலுள்ள மாதரைத்தான்
என்றுசொல்லி வேசையர்க ளெல்லோருங் கிலேசமுடன்
வேசையர்க ளெல்லோரும் விடுதிவந்து சே[ர்]ந்தார்கள்
அப்போது செட்டிமகன் அவளை வழிமறித்துச்
சிங்கி யடித்துச் சிரித்தார்காண் முன்னைநின்று
பச்சைமஞ்சள் பூச்சும் பாங்கானகை வீச்சுமெங்கே
கடைவீதி தன்னில் கடுகி நடப்பீர்களே
கையில்வளை கலகலெ[னக்]கால்மோதிரங் கள[க]ளெ[ன]
வங்கணக் காரருடன் வலுப்பேசிச் சிரிப்பீரே
கொங்கைகள் குலுங்கக் கூடைமண்ணைத் தானெடுத்துக்
கோபுரக் கழுதைகள்போல் கொண்டுவந்து போட்டீர்களே
மாப்பிள்ளை மாரைக்கண்டால் வலுப்பேசி நிற்பீர்களே
செட்டி சிரிக்கச் சிரிப்பா[ர்]க் குடம்பெடுத்தோம்
என்றுசொல்லி வேசைமகள் எல்லோரும் விடுதிவந்து

**1367.** 1 கல்லேத்தி.
**1370.** 3 அவதிவந்து.
**1371.** 2 மனந்தளன்று.
**1377.** 4 தான்குடுத்துப்.
**1378.** 1 பட்சை.
**1379.** 3 பலஷ்திரிக.
**1381.** 1 ஏளாஇரம்.
**1387.** 2 செட்டிமகள்.
**1390.** 3 கடிகி ; 4 நடப்பியளே.
**1392.** 4 சிரிப்பியரே.
**1394.** 2 கள்தையள்போல் ; 4 போட்டியளே.
**1395.** 4 நிப்பியளே.

மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யன்முன்
தாசிக ளெல்லோரும் தலைப்பட்டார் நீலிகள்போல்
[கல்ச்சு]மந்தோ மென்றுசெட்டி காறி மிகவுமிந்தான்
வேசையர்கள் சொன்னபின்பு விருதுபுகழ் ராமய்யனும்
பாளையத்தி லுள்ள பலசரக்குச் செட்டிமுதல்
கூட்டிவரச் சொன்னான் கோலாகல ராமய்யனும்
கூட்டிவந்து விட்டார்கள் கோலாகலன் கொலுவில்
செட்டிக ளெண்ணாயிரம்பேர் சேரவே வந்தார்கள்
மன்னன்புலி ராமய்யனும் வணிகர் குலத்தாரே
தாசிகள் கல்ச்சுமந்தால் தான்சிரிக்கக் காரியமேன்
திருமா லடைத்த திருவணையைத் தானடைக்க
ஆளுக்குப் பத்துக்கல்லு அடவாக எடுங்கோளென்றார்
ஏலேலம் பாடி யெடுத்தார்கள் செட்டியெல்லாம்
செட்டியர்கள் கல்ச்சுமக்க சிற்றாண்டிப் பயலொருவன்
சிங்கி யடித்துச் சிரித்தான்காண் செட்டிகளைப்
பிச்சைக்கு வந்தாலும் பின்னேவா யென்பீர்களே
அப்பச்சி யென்றாலும் அரைக்காசும் ஈயீர்களே
சிற்றப்பா வென்றாலும் செருப்பா லடிப்பீர்களே
சாகிறோம் என்றாலும் சாப்பாடும் போடீர்களே
காசுகணக் கிட்டதெல்லாம் கைமேல்ப் பலித்ததென்று
பண்ணிய பாவம் பலித்ததே செட்டிகளே
புத்திகெட்ட ஆண்டிசொல்லப் பூராயச் செட்டிகளும்
வெற்றியுள்ள ராமய்யன்முன் விழுந்தாரே செட்டிகளும்
மணங்கெட்டுப் போனோமே மன்னவனே அய்யாவே
நாவிதான் போ[து]மோ நாங்களெல்லாஞ் சாவோமோ
ஆண்டிப்பயல் சொன்னதெல்லாம் அறுக்குதே யெங்களுக்கு
வேசையர்கள் சொன்னதெல்லாம் வேகுதே யெங்களுக்கு
ஆண்டவனே பூமியிலே அரைச்சணமுந் தறுகோமென்றார்
வணிகர் குலத்தாரை வாருங்கோ என்றுசொல்லி
அடைக்காயும் வெள்ளிலையும் அன்பாகத் தான்கொடுத்துப்
பாளையக் காறர் பலபேரைத் தானழைத்து
அய்யோத்தி ராமர் அடைத்த திருவணைக்குக்

**1399.** 1 தாசிய ; 4 நீலியள்போல்.
**1407.** 1 தாசியள்.
**1411.** 3 சித்தாண்டிப்.
**1412.** 4 செட்டியளைப்.
**1413.** 1 பிச்சைக்கி ; 4 யெம்பியளே.
**1414.** 4 ஈயியளே.
**1415.** 1 சித்தப்பா ; 4 லடிப்பியளே.
**1416.** 1 சாகுறோம் ; 4 போடியளே.
**1417.** 4 பலித்துதென்று.
**1418.** 4 செட்டியளே.
**1429.** 4 திருவணைக்கிக்.

கல்ச்சுமக்க வேணுமென்றார் கன்னன்புலி ராமய்யனும்
வானரங்கள் கூடி மலைபிடுங்கி வந்தாப்போல்
அன்றுமுதல் மன்னவரும் அரசர்மக்கள் தான்கூடிக்
கொண்டுவந்து கல்க்குவித்தார் குன்று மலைபோலே
பாளையத்தி லுள்ள பரதேசி யத்தனையும்
கூட்டிவா என்றார் கோலாகல ராமய்யனும்
கூட்டிவந்து விட்டார்கள் கோலாகலன் கொலுவில்
அய்யோத்தி ராமர் அடைத்த திருவணைக்குக்
கூடைமண்ணை வெட்டிக் கொட்டுங்கோ திருவணைக்கு
அந்தப் படியே அவர்களெல்லாம் மண்சுமந்தார்
திருவணையில் ராமய்யனும் திறமாக வந்திருந்து
அய்யோத்தி ராமர் அடைத்த திருவணைமேல்
கல்லை யெடுக்கச்சொன்னார் கரியமால் ராமய்யனும்
கல்லைப் பரப்பிக் கனத்த திருவணைமேல்
வாளைகுதி பாயும் வறுக்கை திறுக்கையுடன்
ஊராமீன் வாளைமீன் உற்றபுகழ் நெய்த்தலையும்
ஓங்கு திமிதியுடன் உள்ளான் சுறாமீனும்
பிள்ளைகொல்லி நெய்மீனும் பெருங்குதிப்புச் சாளையுடன்
சுறாமீன் பனைமீன் துலங்கு கடல்க்கறும்பை
மடவைச் சுறாமீனும் வங்கு நெத்தவுளுவை
ஆனைமீன் குதிரைமீன் அணைமேலே தவ்விவிழச்
சமுத்திரத்து மீனெல்லாம் தாண்டிக் குதித்துவிழ
வாளை குதிபாய மன்னவனும் பார்த்திருந்தான்
திருவணையைத் தானடைத்தான் தீரன்புலி ராமய்யனும்
இலங்கை முழுதாண்ட ராவணன்காண் என்பாரும்
சந்திரரும் சூரியருந் தானவரு மெச்சிடவே
இந்திரன்போல் ராமய்யனும் ஏழாநாள்த் தானடைத்தார்
ஆயன் கடலை அன்றே அடைக்கையிலே
பூலோக ராமன் புகழ்ச்சடைக்கனைப் பிடிக்கத்
திருவணையைத் தானடைத்தான் தீரன்புலி ராமய்யனும்

[திருவணையில் வன்னி போர்புரிந்து வெல்லுதல்]

சடைக்கன் மருகன்வன்னி தானிந்தச் சொல்க்கேட்டு
அய்யோத்தி ராமர் அடைத்த திருவணைமேல்
திறமா யடைத்துச் செலுத்துவனோ ராமனுந்தான்
பா[ர்]ப்பான் படைப்போரும் பாருலகில் நம்போரும்
இருவருட போரும் இனித்தெரியு மன்னவனே

**1431.** 3 மலைபிடிங்கி.
**1433.** 2 கல்க்குமித்தார்.
**1446.** 2 திமிதிமுடன்.
**1462.** 1 திரமா.

பெண்டுக ணாச்சியெனும் பெரியதொரு கப்பலைத்தான்
கொண்டுவரச் சொன்னான் கோடையிடி வன்னியவன்
பா[ர்]ப்பானைப் பா[ர்]த்துப் பல்க்கடித்துப் பாசைசொல்லித்
தீரன் புலிவன்னி திறமுடனே வந்துநின்று
ராமர் லெட்சுமணர் நல்ல பெருங்குழலைக்
கப்பலிலே தானேற்றிக் கடுகியே கொண்டுவந்தார்
திருவணையைத் தான்முடுகிச் சென்றே பொருதனர்காண்
சுட்டார் குழல்க்காரர் துங்கமுடி மன்னரையும்
எறிந்தா ரெறிவாணம் எல்லையற்ற சேனையின்மேல்
வாண மடிபட்டு மயங்கிக் கடலில்விழ
உண்டைபட்டுச் சோர்ந்து உருண்டு கடலில்விழப்
பட்டார்கள் ராமன்படை பாற்கடலில்த் தானிறைந்தார்
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
அய்யோ சிவனேயென்று அலறி மிகமயங்கி
ஆனைவிட்டுச் சேனைவிட்டு ஆற்றாம லோடுவாரும்
வேசையர்கள் செட்டியர்கள் வெருண்டு வெருண்டோடப்
பாளையத்தி லுள்ள படைத்தலைவ ரெல்லோரும்
வன்னி யுடகோபங் கண்டு மயங்குவ[ா]ரும்
பாளையங்க ளெல்லாம் பலதிக்குந் தானோடி
நிற்தூளி யாக்கி நின்றானே வன்னியுந்தான்
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

**[ராமப்பய்யன் பரங்கிகளை வரவழைத்து ஒப்பந்தம் பேசியபின், அவர்கள் இராமேச்சுரத்தீவை முற்றுகையிடுதல்]**

ஆழிநெடுந் தேரேறி அலைகதிரோன் வந்துதித்தான்
மற்றநாள் சென்று மன்னன்புலி ராமய்யனும்
மாப்பிள்ளை கொண்டப்பய்யன் வாருமென்று தானழைத்துப்
பாளையக் காறர் பலபேரைத் தானழைத்துத்
திருவணையிற் சென்றுசண்டை தீப்பறந்து போச்சுதென்று
தீவி லிருந்துகொண்டு சேர இறக்கடித்தார்
எதிர்த்துப்போர் செய்தவனை யினிவிடப் போறேனோ
வாய்மதங்கள் பேசி வன்னியே வெற்றிகொண்டான்
பாற்கடலி னூடே படைபொருத வந்தானோ
அன்று அவன்வலுவு கண்டீர்களோ மன்னவனே
இன்றைக்கு என்வலுவு எல்லோரும் பாருமென்று
மாப்பிள்ளை கொண்டப்பய்யனே வாருமென்று தானழைத்து

**1470.** 2 தானேத்திக்.
**1471.** 4 பொருதினர்காண்.
**1477.** 1 காலத்து; 3 கையத்து.
**1479.** 3 ஆத்தாம.
**1495.** 3 கண்டியளோ.

ஈழத்து ராசாவுக்கு எழுதுமென்றார் காயிதத்தைச்
சிங்களத்துப் பரங்கிகளைச் சேர அழையுமென்றார்
கொளும்புப் பரங்கிகளைக் கூட அழையுமென்றார்
மன்னா[ர்ப்] பரங்கிகளை வாகா யழையுமென்றார்
கண்டிப் பரங்கிகளைக் கடுக அழையுமென்றார்
தீவு[ப்] பரங்கிகளைச் சேர அழையுமென்றார்
கொச்சிப் பரங்கிகளைக் கூட அழையுமென்றார்
இலங்கைப் பரங்கிகளை இங்கு அழையுமென்றார்
துலுக்காணத் துள்ள சோங்கு மறுமாவும்
தோணிப் படவிலுள்ள சோங்கு பரங்கியெல்லாம்
எல்லாப் பரங்கிகளை[யும்] இங்கே அழையுமென்றார்
அந்தப் படிக்கு அனுப்பினார் காகிதமும்
வாசித்துப் பார்த்து மனமகிழ்ந்து கொண்டாடி
எல்லோரும் வந்து இறங்கினார் பாளையத்தில்
சோங்கு மறுமாவுஞ் சோகுடனே பாளையமும்
கப்பலுஞ் சோங்குங் கடுகியே பாய்விரித்தார்
அட்ட சமுத்திரத்தில் அலைகடலில்க் கப்பல்விட்டு
ராமநாத சுவாமி நல்ல பெருந்தீவை
வந்து வளைந்து மலங்கப்போர் செய்தார்கள்
தீவுப் பரங்கிகளுஞ் சென்றே வளைந்தார்கள்
நாலுதிக்குங் கப்பல்விட்டு நாடிச் சமர்பொருதார்
பரங்கியர் தானாபதி பாங்குடனே அப்போது
மன்னன்புலி ராமனையும் வந்துகண்டா ரந்நேரம்
அப்போது ராமய்யன் அன்பாய் மனமகிழ்ந்து
பரங்கியர்கள் தானாபதிக்குப் பச்சைவடந் தான்கொடுத்தார்
ஆண்டவனே இப்போ அடியேன்சொல் விண்ணப்பங்கேள்
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் கெட்டியென்றான்
எங்களுட கப்பலென்றால் இந்தவழி போகவொட்டான்
தீவுப் பரங்கியர்கள் சேர நடுங்குவர்காண்
கப்பமுங் கட்டிக் கைதொழுது நிற்பார்கள்
இடுக்கப்பட்டு நாங்கள் இருந்தோம் பெருந்தீவில்
எங்க ளிடுக்கம் இனித்தீரும் ஆண்டவனே
என்றுசொல்ல அப்போது எதிரில்லா ராமயனும்
தீவி லொளித்திருக்குந் தீரன் சடைக்கனைத்தான்
சென்று பிடித்துவந்தால்த் தீவுதனை யுங்களுக்கு

**1499.** 2 பரங்கியளைச்.
**1509.** 2 படிக்கி.
**1514.** 3 அலகடலில்க்.
**1517.** 2 பரங்கியளுஞ்.
**1522.** 2 தானாபதிதனக்குப்.
**1525.** 1 யெங்களுட.
**1526.** 3 சேற.
**1530.** 1. என்றுசொல்லி.

அறுதியாய்த் தந்து ஆதரித்துக் கொள்வோமென்றார்
பரங்கிகள் தானுபதிக்குப் பாங்காய் வெகுமதியும்
பாக்கு மிளகு பலசம்பாரங் கொடுத்து
வரிசை மிகக்கொடுத்தார் வாய்த்த பரங்கியர்க்கு
பரங்கி[த்]தானுபதியும் பாங்குடனே தீவில்ச் சென்றான்
மன்னன் புலிராமன் வாகா யுரைத்ததெல்லாம்
பரங்கியர்க்குச் சொன்னபின்பு பாங்காய் மனமகிழ்ந்து
அந்தச் சணமே அதிவேகத் துடன்வந்து
கப்பலுஞ் சோங்கு[ம்] கடுகவே பாய்விரித்து
அட்ட சமுத்திரத்தில் அலைகடலில்க் கப்பல்விட்டு
ஏழு சமுத்திரத்தில் இடமறவே பாய்விரித்துப்
பரங்கிக ளெல்லோரும் பாசை சொல்லிப் பல்க்கடித்து
ராமநாத சுவாமி நல்ல பெருந்தீவை
வந்து வளைந்துகொண்டார் வா[ய்]த்த பரங்கியர்கள்

[வன்னி பரங்கியர்களோடு கப்பற்போர்செய்து வெல்லுதல்]

சடைக்கன் மருகன்வன்னி தானிந்தச் சேதிகேட்டுப்
பார்ப்பார்சொல்க் கேட்டுப் பரங்கி படையெடுத்து
வந்தானே பரங்கியென்று வாதுசொல்லிப் பல்க்கடித்துப்
பரங்கியும் பாப்பானும் பாரமோ என்று சொல்லி
வீரியங்கள் பேசிவன்னி வீரவாள் கைப்பிடித்து
என்வலுவும் அவன்வலுவும் இனிஅறிய வேணுமென்று
ஏறியே கப்பல் எல்லையற்ற படையை யெல்லாம்
குப்புறவே தள்ளிக் குடலைப் பிடுங்காட்டால்
என்பெயரோ வன்னி யெடுத்ததுவும் ஆயுதமோ
மதச்சடைக்கன் தான்வளர்த்த வன்னிக்கு வந்தெதிரே
நாடு கலக்கியென்ற நல்லதொரு கப்பலையும்
கொண்டுவரச் சொன்னான் கோடையிடி வன்னியுந்தான்
ராமர் லெட்சுமண ரென்ற பெருங்குழலைக்
கப்பலிலே தானேற்றிக் கடுகியே பாய்விரித்து
அஞ்சு படவும் அடவாகப் பாய்விரித்து
ஏறினான் கப்பலிலே எதிர்த்து விரட்டவென்று
தீவுப் பரங்கிகள்மேல்ச் சினந்தே மிகப் பொருதார்
கொளும்புப் பரங்கிகளைக் குப்புறவே தான்கவிழ்த்து

**1534.** 1 பரங்கியள்; 4 வெகுமிதியும்.
**1539.** 1 பறங்கியற்குச்.
**1553.** 4 படைவையெல்லாம்.
**1554.** 1 குப்பறவே.
**1556.** 3 வன்னிக்கி.
**1559.** 3 ரென்று.
**1562.** 3 எதுற்து.

மன்னார்ப் பரங்கிகளை மருண்டோடத் தான்விரட்டிக்
கண்டிப் பரங்கிகளைக் கலங்கவே தான்விரட்டி
ஆறு படவும் அடவுடனே தான்பிடித்தான்
படவி லிருந்த பரங்கிகளைத் தான்பிடித்துத்
துலுக்கா ணத்துச் சோங்கு மறுமாவும்
எதிர்த்துவந்த பரங்கியர்க ளெல்லோரும் போயொளித்தார்
வன்னியுட போரைக் கண்டு மன்னரெல்லாங் கொண்டாடி
வன்னியுட அதட்டு வானங் குமுறுதுபோல்
தட்டழிந்து கெட்டுத் தலைகெட்டுப் போராடினர்கள்
கண் ணுக்கு மெட்டாமல் கருங்கடலி லோடினர்காண்
வெற்றிகொண்டு வன்னி வீரியங்கள் பேசிவந்தான்
தெத்துப் பதனமென்று திரும்பினான் வன்னியுந்தான்
மன்னன் புலிவன்னி மாமணையும் வந்துகண்டு
வெட்டி ய[ரிந்து] சூறை யிட்டுவந்தேன் ஆண்டவனே
ஆறு படவும் அடவுடனே தான்பிடித்துப்
படவி லிருந்த பரங்கிகளைக் கொன்றுழக்கிப்
பரங்கிகள் கூட்டமெல்லாம் பாற்கடலில்ப் போய்விழுந்தார்
வன்னி யுரைக்க மதச்சடைக்கன் மனமகிழ்ந்து
பூரித் திருபுறமும் பொன்னுருக்கி விட்டாப்போல்
திட்டிக் கிடாய்வெட்டித் தீரன்புலி வன்னியற்கு
முந்நூறு ஆலாத்தி முறைமுறையாய்த் தானெடுத்தார்
என்மருகா வன்னியரே இந்தவெற்றி போதாதோ
ராமநாத சுவாமி நமக்குத் துணையிருக்கப்
பா[ர்]ப்பா னொருபொருட்டோ பார்வேந்தே மன்னவரே
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[பரங்கியரையும் ராமப்பய்யன்படையையும் வன்னி வெல்லுதல்]

கங்குல் விடிந்து கதிரோன் எழுந்தபின்பு
முரிந்த பரங்கியெல்லாம் மூற்கமாய்த் தான்கூடிப்
பால்க்கடலிற் குள்ளே பரங்கியெல்லாந் தான்கூடித்
துலுக்கா ணத்துச் சோங்கு மறுமாவும்
கண்டிப் பரங்கி யெல்லாங் கனகோபங் கொண்டெழுந்து
கொளும்புப் பரங்கியெல்லாம் கோவித்துக் கண்சிவந்து
சிங்களத்துப் பரங்கியெல்லாம் சினந்து மிகவெழுந்து
தூத்துக்குடிப் பரங்கி சோனகர்ப் பட்டணமும்

1565. 1 மன்னர்ப்.
1570. 1 எதுத்து வந்த.
1572. 3 மானங்.
1575. 1 வெத்திகொண்டு.
1578. 2 ய...சூறை.
1583. 3 பொன்முரிக்கி
1591. 1 முறிந்த.
1596. 4 மிகவெளுந்து.
1597. 3 சொனனகராப்.

இருக்கும் பரங்கியர்க ளெல்லோருந் தான்கூடி
ராமநாத சுவாமி நல்ல பெருந்தீவை
வந்து வளைந்தார்கள் வாய்த்த பரங்கியெல்லாம்
தெத்திலே அய்யன்படை சினந்துபோர் செய்தார்கள்
படவில்ப் பரங்கியெல்லாம் பறந்துபோர் செய்தார்கள்
வந்துதிறை கொள்ளவென்று வந்தார் பரங்கியெல்லாம்
தீவை வளைந்துகொண்டு திறமாகப் பொருதனர்காண்
மறவர் படையெல்லாம் மண்டிப் பொருதார்கள்
தேக்கிலையில் நீரதுபோல் தியங்கி மறவரெல்லாம்
நின்று மயங்கி நெடுமூச்சுக் கொண்டார்கள்
வலையி லகப்பட்ட மான்போலே தான்மறவர்
என்செய்வோ மென்று எதிர்க்கத்திற மில்லாமல்
அந்த விசளம் அறிந்து சடைக்கனுந்தான்
என்மருகா வன்னியரே இனிவந்து கூடுமென்றார்
ஆண்டவனே யிப்போது [பாரும்] அடியேனையுந்தான்
பா[ர்]ப்பானும் பரங்கியுமே பாரமோ என்தனக்கு
அன்றிலங்கை தன்னில் அனுமா ரழித்தாப்போல்
வென்று பரங்கியர்கள் விண்ணு[ல]கில் தான்பார்த்து
வெட்டித் துரத்தி விரட்டிவிட வல்[ல]வன்காண்
வெற்றிகொண்டு வாரேனென்று மேடைமேல்த் தானேறிச்
சற்றுஞ் சலியாமல் சங்கரனைத் தான்தொழுது
வெங்கண் சிவந்துவன்னி வீரவாள் கைப்பிடித்து
ஏவினன் வான்பரியை யெதிர்த்தவரை வெல்லவென்று
மாப்பிள்ளை கொண்டப்பய்யனே வாருமென்று தானழைத்து
வெங்கிட கிஷ்ணய்யா வீமனே வாருமென்று
சத்துருக் கையனே தார்வேந்தே வாருமென்று
பொன்னம ராயா போர்வேந்தே வாருமென்று
மன்னவர்கள் கொண்டாடும் மண்டூருப் பாப்பய்யனும்
பட்டத்து நாய[க்க]னும் பரிவார மத்தனையும்
தார்வேந்தர் கொண்டாடும் சாமி நாயக்கனும்
நத்தத்து லிங்கய்யனும் நல்லபடைக் காலாளும்
திருமலைப் பூச்சியனும் சேர்ந்தபடை யத்தனையும்
விறுது சொல்லி வெட்டிவரும் வெங்க[ம] நாயக்கனும்
போர்க்களத்தில் நின்று பொ[ரு]ம் பொம்ம[ய] நாயக்கனும்
கூத்தன்மகன் சேதுபதி வாய்த்தபடை யத்தனையும்

**1604.** 4 பொறுதினர்காண்.
**1608.** 2 லகப்பட்டு.
**1609.** 3 எதுக்கத்திற.
**1611.** 1 என்மறுகா.
**1614.** 1 அண்ணிலங்கை.
**1615.** 4 தான்பாற்து.
**1618.** 1 சத்துஞ் ; 3 சங்கறனைத்.
**1629.** 3 சேற்ந்தபடை.

தோவாளைத் தொண்டு துரைமக்க ளத்தனையும்
பாண்டியர்கள் மெச்சும் பாவூரு மன்னவரும்
விறுதணிந்து வெட்டிவரும் வெட்டூர்புரந் தளவாயும்
தென்காஞ்சி மூக்கன் சேர்ந்தபடை யத்தனையும்
கோட்டாற்று ரெட்டி குமாரன் பெருந்தளமும்
பாளையக் காறர் படைத்தலைவ ரெல்லோரும்
வேளையத்தில் வென்றுவரும் வீரப்பரி வாரங்களும்
பெண்டுகளோ வென்று பெருமூச்சுத் தானெறிந்து
நாளைப் பகல்ப்பொழுது நாழியலுக் குள்ளாகத்
தீவைப் பிடியாட்டால் சேரவே கொன்றுழக்கி
இன்று மறவனைத்தான் சென்றே பிடியாட்டால்
வைப்பேன் கடற்கரையில் வாகாய்க் கழுவுதனில்
வெட்டினான் பரங்கிகள் வேந்தனைத் தான்துணித்தான்
இருபடையு மூண்டு எதிர்த்துப்போர் செய்தார்கள்
கோவித்து வெட்டினான் கொடுங்கால வன்னியுந்தான்
தெத்திலே வந்து திறமாக வந்தான்காண்
பரங்கி பெரும்படையைப் பார்த்து நீருரைத்தீர்
என்றுசொன்ன போதே எதிரில்லா வன்னியுந்தான்
வாதுப்போர் செய்யும் மறவன் வலுக்காரன்
பரங்கிக ளெல்லாரும் பாசைசொல்லிப் பல்க்கடித்து
எதிர்த்துப்போர் செய்தார்கள் மறவர்படை யெல்லோரும்
பரங்கிகள் தன்போரைப் பார்த்து[த்]தா னும்பணிந்து
ராமநாத சாமி நல்லதுணை யென்றுசொல்லி
நாடு கலக்கியெனும் நல்லதோர் வான்பரியைக்
கொண்டுவரச் சொன்னான் கோடையிடி வன்னியுந்தான்
ஏறினான் வான்பரிமேல் எதிரில்லா வன்னியுந்தான்
பேரிகை டம்மானம் பிறகே தொனிமுழங்கப்
பட்டார் பரங்கியெல்லாம் பருந்து கழுகாயத்
தப்பின பரங்கியெல்லாஞ் சமுத்திரத்தில்ப் போய்விழுந்தார்
கண்டிப் பரங்கியெல்லாங் கப்பலிலே யேறினர்காண்
கப்பலிலே பார்த்துக் கவி[ெ]லனவே சுட்டார்கள்
கடலிலே கப்பல் கவிழ்ந்ததுகாண் அம்மானை
தெத்திலே வன்னி திறமாகப் பொரு[து]விட்டுச்
செயங்கொண்டு வன்னியுந்தான் சே[ர்]ந்தான்காண் அம்மானை
அந்நேரந் தன்னில் அலைகதிரோன் போய்மறைந்தான்

**1633.** 1 தோவாளத்.
**1637.** 1 கோட்டத்து.
**1641.** 3 நாளிகலுக்.
**1644.** 2 கடைக்கரையில்; 4 களுவுதனில்.
**1654.** 4 னம்பணிந்து.
**1656.** 2 கலக்கியிடும்.
**1659.** 2 டம்மாணம்.
**1665.** 2 வென்னித்.

[மீண்டுங் கப்பற்போர் : சடைக்கனைப் பிடிக்க முயற்சி :
வன்னியின் வெற்றி]

மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
மறவனே ஆண்பிள்ளேகாண் மண்டலத்தி னுள்ளோரில்
என்றுசொன்ன போதே எல்லோருங் கெடிகலங்கி
மாப்பிள்ளே கொண்டப்பய்யன் மன்னவனும் அப்போது
கப்பலுஞ் சோங்கு[ங்] கடுகவே தானழைத்தார்
அஞ்ஞூறு கப்பல் அருகாகப் பாய்விரித்து
எள்ளளவு மில்லாமல் இடமறவே பாய்விரித்து
மாப்பிள்ளே கொண்டப்பய்யன் மன்ன னுடன்படையும்
வெங்கிட கிஷ்ணப்பய்யன் வீம னுடன்படையும்
சத்துருக் கய்யன் தாடாளன் தன்படையும்
பொன்னம ராயன் போர்வேந்தன் தன்படையும்
மன்னவர்கள் கொண்டாடும் மண்டூருப் பாப்பய்யனும்
விறுது சொல்லி வெட்டிவரும் வெங்கமநாயக்கன் படையும்
போர்க்களத்தில் நின்றபட்ட[ப்] பொறும்பூட்டு ராசாவும்
தார்வேந்தர் கொண்டாடும் சாமயநாயக்கன் தன்படையும்
பட்டத்து நாயக்கன் பார்வேந்தன் தன்படையும்
நத்தத்து லிங்கயனும் நல்லபடைக் காலாளும்
திருமலேப் பூச்சியனும் சேர்ந்தபடை யத்தனேயும்
பாண்டியர்கள் மெச்சும் பாவூரு மன்னவரும்
தோவாளேத் தொண்டு துரைமக்கள் தன்படையும்
கூத்தன்மகன் சேதுபதி வாய்த்தபடை யத்தனேயும்
எல்லோரும் வாருமென்று எதிரில்லா ராமய்யனும்
கப்பலிலே ஏறுமென்முர் கன்னன்புலி ராமய்யனும்
பாய்கடலி னூடே பாய்மரத்தைத் தான்விரித்துத்
தீவைச் சா[ர்]ந்துகொண்டு திறமாகப் பொருதனர்காண்
[தெத்தி] லேயுஞ் சண்டை தீப்பறந்து போகுதய்யா
ஒற்ற னவனேடி உற்றபெருங் காற்றெனவே
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் முன்னேவந்து
மன்னன்புலி ராமன்படை மட்டில்லாச் சேனேவெள்ளம்
பாற்கடலி னூடே பறந்து படவுவிட்டுத்
தீவைப் பிடிக்கச்சொன்னன் தீரன்புலி ராமய்யனும்
பரங்கிக ளெல்லோரும் பாசைசொல்லிப் பாய்விரித்து
ராமனுட படையும் நாலுதிக்குங் கப்பலின்மேல்
துணிந்துபோர் செய்தார்கள் சூதான தீவுதன்னில்

1687. 1 தோவாளத்.
1690. 1 கப்பலுலே.
1692. 4 பொருதினர்காண்.
1694. 1 ஒட்ட.
1697. 3 பரந்து.
1699. 4 வாய்விரித்து.

வளைந்து பிடிக்கவென்று வந்துபோர் செய்தார்கள்
கண்டு பயந்துவந்தேன் கர்த்தனே யென்றுரைத்தான்
மன்னன் சடைக்கன் மகாகோபங் கொண்டெழுந்து
வானத்தைத் தீயெரிக்கும் வன்னியரே வாருமென்று
என்மருகா வன்னியரே இப்புதுமை கேள்க்கிலேயோ
ஒற்றனுந்தான் ஓடிவந்தான் உற்றபெருங் காற்றெனவே
ராமன் படையெல்லாம் நடுக்கடலில்ப் பாய்விரித்து
ராமநாத சுவாமி நல்ல பெருந்தீவை
வளைந்து பிடிக்க வந்தபோர மன்னன்சொன்னான்
நம்மைப் பிடிக்கச்சொல்லி நாலுதிக்கும் பாய்விரித்துச்
சுற்றி வளைந்துகொண்டான் சூதான தீவுதனைத்
தெத்திலேயுஞ் சண்டை தீப்பறந்து போகுதென்றான்
மாமனுந்தான் சொல்ல மன்னன்புலி வன்னியுந்தான்
பா[ர்]ப்பான் பெரும்படையைப் பாரமென்று சொன்னீரே
ஆற்றாமல் பா[ர்]ப்பான் அலையுறான் ஐயாவே
வெட்டித் துரத்தி விரட்டிவிட்டு வாறேனையா
பரங்கிய ரெல்லோரும் பாரமோ என் தனக்குப்
பாற்கடலி னூடே பறந்து படைவை விட்டு
எதிர்த்த பரங்கிகளை யினிவிடத்தான் போறேனோ
அம்மானே நீர்தான் அளப்பொன்றும் எண்ணாதே
கிலேசங்கள் வேண்டாங்காண் கீற்திகொண்ட மன்னவனே
ராமநாத சுவாமி நல்ல துணையிருக்க
மலைவளர் காதலித்தாய் மங்கையுமை தானிருக்க
சேதுவந்த மாகாளி தேவியுமை தானிருக்க
கால வயிரவனும் காத்துநம்மைத் தானிருக்க
முக்கோடி தீர்த்த முழுதுமங்கே தானிருக்க
என்னை யெடுக்க எவரால் முடியுமய்யா
என்றுசொல்லி வன்னி யெதிர்த்தவரைத் துரத்த
வீசை முறுக்கி விருது பலபேசி
படைத்தலைவர் தம்மைப் பாங்காகத் தானழைத்து
எதிர்த்துவந்த பா[ர்]ப்பானை யினிவிடவே போகாது
வெட்டித் துரத்தி விருது பறிப்பேனென்று
வென்றரசு கொண்ட வீமனே வாருமென்று
வீசு கொண்[ை]டத் தேவா வீமனே வாருமென்று
தார்வேந்தர் கொண்டாடும் தர்மனேநீர் வாருமென்று

**1707.** 1 ஒட்டனுந்தான்.
**1712.** 1 சுத்தி.
**1713.** 4 போகுதென்றால்.
**1716.** 1 ஆத்தாமல்.
**1718.** 4 யெந்தனுக்கு.
**1727.** 2 தீற்த.
**1731.** 2 தன்னைப்.

குங்குமத் தேவா குமரனே வாருமென்று
கூட்டுக்கால் வெட்டிவரும் கொலைகார மூடனையும்
மன்னனைப்போல் நின்றுபொரும் வாகான கூத்தனையும்
கன்னன் கலியாணி காவலனார் தன்படையும்
பொத்தை யுடையானே போர்வேந்தே வாருமென்று
கறுத்த வுடையானே கன்னனே வாருமென்று
ருவுத்தக் கற்தா ரணவீரா வாருமென்று
மன்னவரைக் காத்தனையும் வாகாகத் தானழைத்துப்
பா[ர்]ப்பான் படைபோக்கிப் படவேறி வந்தானும்
வந்துதிரை கொள்ளவென்று வந்ததுகாண் ராமன்படை
பா[ர்]ப்பான் படைப்போரும் பாருலகில் நம்போரும்
இருவருட போரும் இனித்தெரியு மென்று சொல்லி
மதியா ரழகனையும் மன்னன் குமாரனையும்
கொன்றபழி வாங்குமென்று கொற்றவர்க்குத் தாமுரைக்கச்
செங்கண் மிகச்சிவந்து சீறிவடி வாளெடுத்து
நாடு கலக்கியெனும் நல்லதொரு வான்பரியைக்
கொண்டுவரச் சொன்னார்காண் கோலமுள்ள வன்னியுந்தான்
பரியை அலங்கரித்துப் பண்பாக வேதானும்
கொண்டுவந்து விட்டார்கள் கோலாகலன் கொலுவில்
வான்பரியைப் பார்த்து வன்னி மனமகிழ்ந்து
மன்னவரும் வன்னியரும் வாருமென்று தானடந்தார்
செந்தூள் மிகப்பறக்கச் செங்கதிரோன் தான்மறைக்கப்
படைத்தலைவ ரெல்லோரும் பாசைசொல்லிப் பல்க்கடித்துத்
தெத்திலே சென்றார்கள் திறமாக மன்ன ரெல்லாம்
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் தன்மருகன்
மன்னன் புலிராமன் மட்டுப்படாச் சேனையின்மேல்
ஊடுருவப் பாய்ந்தான் உலகங் கிடுகிடெனச்
சென்று பொருதான் சேனைவெள்ளத் துக்குமுன்னே
முட்டிப் பொருதான் மூவுலகுந் தானதிர
வளைந்து பொருதான் வாள்வீரன் வன்னியுந்தான்
நெருங்கிப் பொருதான் நெடிய அனுமனைப்போல்
மன்னன்புலி ராமன்படை மண்டிப் பொருதார்கள்
இருபடையு மூண்டு எதிர்த்துப் பொருதார்கள்
அப்போது ராமய்யனும் ஆறாயிரம் பேரைக்

**1738.** 3 குலைகார.
**1739.** 2 நின்றுபொறும்.
**1741.** 2 யுடையானை.
**1743.** 1-2 ருவத்தக்கூத்தா.
**1746.** 3 வந்துதுகாண்.
**1749.** 1-2 மதையாரளகனையும்.
**1751.** 3 சீரவடி.
**1760.** 1 தெத்துலே; 3 திரமாக
**1767.** 2 பொறுதான்; 4 அனுமலைப்போல்.

கொன்றுதான் அந்தக் கொலைக்களத்தில் நிற்கலுற்றான்
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் தன்படைதான்
போர்க்களம் விட்டுப் புறங்காட்டி ஓடியதே
மறவர்முறிந் தோடினதை வன்னியவன் தான்பார்த்து
வீசை முறுக்கி வெகுண்டு சினத்துடனே
புலியை நரிபாய்ந்து போகுதோ வென்றுசொல்லி
மன்னன் புலிராமன் மகாசேனை தன்மேலே
ஏவினன் வான்பரியை யெல்லையற்ற சேனையின்மேல்
வெட்டினன் வன்னி வேந்தர்களைத் தான்துணித்தான்
பட்டார்கள் ராமன்படை பருந்துகழு காய்ந்திடவே
காலற்று வீழ்வாரும் கையற்று வீழ்வாரும்
துண்டதுண்ட மாகத் துணிபட்டு வீழ்வாரும்
சென்னி யற்று வீழ்வாரும் தெறிபட்டு வீழ்வாரும்
குறைப்பிணமாய் நின்று கூத்தாடி நிற்பாரும்
அய்யோ சிவனேயென்று அலறியே வீழ்வாரும்
வாண மடிபட்டு மண்மேல்க் கிடப்பாரும்
குத்துண்டு போர்க்களத்தில் குலவையிட்டு நிற்பாரும்
அம்புபட்டுச் சோர்ந்து அலறியே வீழ்வாரும்
வேலவனே யென்பாரும் விதிவசமோ என்பாரும்
மெய்துணித்து வீழ்வாரும் மெய்ம்மயங்கி வீழ்வாரும்
பட்ட படுகளத்தைப் பார்க்கப்பயந் தோடுவாரும்
மன்னன்புலி ராமன்படை வாகாய்முறிந் தோடியதே
கட்டறுத்த மான்போலே கலங்கியே சேனைவெள்ளம்
தட்டழிந்து கெட்டதுகாண் தலைகெட்ட நூலதுபோல்
பிடித்த முகத்தைவிட்டுப் பின்காட்டி ஓடியதே
கடலிலே போய்விழுந்து கப்பலிலே தானேறி
அணைக்கரையைத் தான்கடந்து ஆற்றாம லோடியதே
எழுபதுபேர் பட்டார்கள் எண்ணவொண்ணா ராசாக்கள்
ஆயிரம் பேர்கள் அக்களத்திலே மடிந்தார்
பட்டத்து நாயக்கனும் பாங்காய் வடுகர்மெத்த
தொட்டிய கம்பளத்தார் துடிகாரப் பட்டமார்கள்
பட்டார்கள் அக்களத்தில்ப் பாராசர் கொண்டாட
படவி லிருந்த பரங்கிகள் எல்லோரும்
கடலைக் கடந்து காணாமல் ஓடியதே
வன்னியுட போரைக்கண்டு மறுதீவி லோடியதே
வன்னியுட பீரங்கி வானங் குமுறுதல்போல்

**1771.** 3 குலைக்களத்தில்.
**1778.** 3 யெல்லையத்த.
**1780.** 3 பரந்துகளும்.
**1781.** 4 வீள்வாரும்.
**1796.** 3 கப்பலுலே.
**1798.** 1 எழுவதுபேர்.
**1801.** 1 கொட்டிய.
**1806.** 3 மானங்.

கோடையிடி போல்க்குமுறிக் கொடிய படையெல்லாம்
சுட்டுக் கவிழ்த்தான் துங்கமுடி வன்னியுந்தான்
வெற்றிகொண்டு வன்னி வீரவாள் கைப்பிடித்துத்
தெத்துப் பதனமென்று திரும்பினான் வன்னியுந்தான்
அம்மா னிடத்தில்வந்தான் அதிவீர வன்னியுந்தான்
வெற்றிகொண்டு வந்தேன் வீரனே உன்னருளால்
மன்னன் சடைக்கன் மனமகிழ்ந்து கொண்டாடிப்
பூரித் திருபுயமும் பொன்னுருக்கி விட்டாப்போல்
இந்தவெற்றி போதாதோ என்மருகா வன்னியரே
திட்டிக் கிடாய்வெட்டித் திறமாகத் திட்டிசுற்றி
ஆலாத்தி தானெடுத்தார் அன்பாகப் பெண்களெல்லாம்
அர[ண்]மனையில்ப் போய்ப்புகுந்தான் அதிவீரன் வன்னியுந்தான்
அங்கேரந் தன்னில் அலைகதிரோன் போய்மறைந்தான்

[ராமப்பய்யன் சபதமும் போரும்]

கங்குல் விடிந்து கதிரோ னெழுந்தபின்பு
மன்னன் புலிராமன் மகாகோபங் கொண்டெழுந்து
இன்று மறவனைத்தான் இதமாய்ப் பிடியாட்டால்
படைத்தலைவர் தங்களைத்தான் பாரகழு வேற்றிடுவேன்
வன்னி யெனும்மறவன் மதியாமல் வெட்டுவனே
எலியாய்ப் பிறந்துவன்னி இராவணன் ஆனானே
என்னை வணங்காமல் எதிர்த்துப்போர் செய்தானே
என்படைகள் சேனையெல்லாம் இவனுக் கிரையாச்சே
இப்படை எழுபத்திரண்டில் இவனொருவ னானானே
துலுக்கப் படையை யெல்லாந் துரத்திவெட்டி வந்தானே
என்சீவ னுள்ளமட்டும் இவனைவிடப் போறேனோ
மறக்கருவை[த்] தானறுக்க மாட்டாமல்ப் போனே[ெ]னன்றால்
மார்பிலிடும் பூணூல் மாட்டுவடந் தானல்லோ
[கெ]னபடைகள் பட்டபழி கேளாமல்ப் போவேனோ
தீவிலே வைத்துச் சேர மடியவைப்பேன்
சடைக்கன்வன்னி யைப்பிடித்துச் சதையை அரியாட்டால்
என்பேரோ ராமன் எடுத்ததுவும் ஆயுதமோ
வன்னிக்கு நானிளைத்தால் மறுமன்னர் சிரித்திடுவார்
மறவர்க்கு நானிளைத்தால் மன்னவர்க்கும் ஏறுதே
சொக்கலிங்க மீனாட்சி துணையென்று நம்பிவந்தேன்

**1808.** 1-2 சுட்டுத் தவிள்த்தான்.
**1809, 1812.** 1 வெத்திகொண்டு.
**1822.** 3 இதவாய்ப்.
**1828.** 1-2 டெபடை யெளுவத்திரெண்டில்.
**1832.** 2 பூணல்.
**1833** 2 பட்டபளி.
**1837, 1838.** 2 நானெளைத்தால்.

என்றுசொல்லி ராமய்யனும் எல்லோரையும் அழைத்துத்
தீவை வளைந்துகொண்டு சினந்துபொரச் சொன்னான்காண்
தெத்திலே வந்து திறமாய்ப் பொருதுமென்றார்
திருவணையில் சண்டை செய்யுங்கோ என்றுசொல்லி
கப்பலுஞ் சோங்குங் கடுகவே வரவழைத்துப்
பாற்கடலி னூடே பறந்துபோர் செய்தார்கள்
மாப்பிள்ளை கொண்டப்பய்யன் மதிமயக்கம் போனீர்களோ
வெங்கிட கிஷ்ணய்யா வெகுமயக்கம் கொண்டீர்களோ
சத்துருக் கய்யா சதிமயக்கங் கொண்டீர்களோ
பொன்னம ராயா போர்மயக்கங் கொண்டீர்களோ
மண்டுருப் பாப்பய்யனே மதிமயக்கங் கொண்டீர்களோ
தொட்டிய கம்பளத்தார் துணிந்துபோர் செய்யிலையோ
வடுகதுரை மக்களெல்லாம் வாய்வறண்டு போனீர்களோ
எல்லோரையு மழைத்து இதமாகப் புத்திசொல்லித்
தீவை அடைத்துக்கொண்டு சென்றுபோர் செய்யாட்டால்
பாங்காய்க் கடல்க்கரையில் பாரக்கழு வேற்றிடுவேன்
வெட்டி யரிந்து வெயில்க்காயப் போட்டிடுவேன்
என்பேரில்க் குற்றமில்லை ஏழைமதி போனவர்கள்
அன்று லங்கைதன்னை அனுமான் அழித்தாப்போல்
தீவிலுள்ள மறக்குலத்தைச் சேரவதை பண்ணுமென்றார்

[வன்னிக்கு வதூரி]

அந்த விசளம் அறிந்து சடைக்கனுந்தான்
பாளையக் காறர் படைத்தலைவர் தம்மையெல்லாம்
வாவென்று தானழைத்து வரிசைமிகக் கொடுத்து
என்மருகா வன்னியரே ஏனிருந்தா யிந்நேரம்
என்னை யறியாமல் என்னுடம்பு நோகுதய்யா
[எள்]ப்போட்டால் எள்ப்பொரியும் என்தன் உடம்புதனில்
மாபாவி ராமன் வஞ்சனைகள் செய்தானே
என்மருகன் வன்னியற்கு இந்தவிதி வந்ததென்ன
கண்ணுன தம்பியற்குக் கா[ய்]ச்சல்வரக் காரியமேன்
கேட்டவுடன் சடைக்கன் கெடிகலங்கித் தான்பயந்[தா]ன்
இடிவிழுந்தாப் போலே ஏங்கிச் சடைக்கனுந்தான்
ராமநாத சுவாமி நல்லதுணை யென்றிருந்தேன்

**1840.** 4 அளைத்துத்.
**1846.** 4 போனியளோ.
**1847-50.** 4 கொண்டியளோ.
**1850.** 1 மண்டுரு.
**1852.** 4 போனியளோ.
**1853.** 3 இதவாகப்.
**1857.** 2 குத்தமில்லை.
**1858.** 4 அளித்தாப்போல்.
**1861.** 4 தன்னையெல்லாம்.

காட்டிக் கொடுத்துக் கடக்கப்போய் விட்டீரோ
காட்டிக் கொடுக்காதே கடக்கப்போய் நில்லாதே
மன்னாட்டுத் தாருமய்யா மாயவரே உன்பாதம்
நம்பிவந்தே னுன்பாதம் நடுக்கடலில்த் தள்ளாதே
உன்பாதந் தஞ்சமென்று உன்னைநம்பி வந்தேனே
பா[ர்]ப்பானே தன்னவனாய்ப் பையஅங்கே சென்றீரோ
நின்று மயங்கி நெடுமூச்சுத் தானெறிந்து
சன்னதியில்த் தீர்த்தம் தான்வாங்கித் தான்கொடுத்தார்
ராமருக்கும் அம்மனுக்கும் நன்றாகத் தானேர்ந்து
சிறப்பு மிகக்கொடுத்தார் தீரன் சடைக்கனுக்கு
மற்றநாள்த் தானும் வன்னி யவர்தமக்கு
மேலே வசூரி விசிறியதே அம்மானை
மாயவரை நம்புவரோ மண்டலத்தி லுள்ளோர்கள்
துற்கை பிடாரி சூலி கபாலியம்மா
சேதுவந்த காளிக்குச் சிறப்பு மிகக்கொடுத்தார்
என்மருகன் வன்னியற்கு ராமனிவ னாகவந்தான்
பா[ர்]ப்பானால் வந்தவினை பாங்காய்ப் பலித்ததுகாண்
வன்னிதனைக் கொல்லவென்று வாகாய் நினைவெடுத்து
யாகம் வளர்த்தான் ஆனதொரு வன்னியற்குக்
கொல்லவென்று பா[ர்]ப்பான் கூற்றுவனாய்த் தான்பிறந்து
என்றுசொல்லிச் சடைக்கன் இடைந்து பரதவித்தார்
சடைக்கனுட தேவி தாழ்குழலாள் வந்துநின்று
என்மருகன் வன்னியற்கு இந்தவினை வந்ததென்ன
என்றுசொல்லித் தானழுது இருந்தாளே கொம்பனையாள்

[சடைக்கன் யாகஞ் செய்வித்தல் : ராமப்பய்யனுக்குப் பிளவை]

வஞ்சனை செய்த மாபாவி ராமனுக்கு
வேதியரைத் தானழைத்து வெகுமதிகள் தான்கொடுத்து
யாகம் வள[ர்]க்கச் சொன்னார் நல்ல சடைக்கனுந்தான்
யாகம் வள[ர்]த்த நாலாம்நாள் ராமனுக்கு
முதுகில்ப் பிளவை மூடவலுக் கொண்டதுகாண்
காலில்ப் பிளவைவந்து கடுகிவலுக் கொண்டதுகாண்
[வா]ய்த்த பிளவை வலுக்கொண்டு வந்ததுகாண்
[வ]ாகாய் எழும்பி மன்னவனைத் தானுடக்கி
உள்ளிருக்கும் நோவை ஒருவருக்குஞ் சொல்லாமல்

**1878.** 4 தான்யெரிந்து.
**1889.** 4 நினவெடுத்து.
**1892.** 3 நிடைந்து.
**1893.** 3 தார்குழலாள்.
**1897.** 3-4 வெகுமதியள் தான்குடுத்து.
**1900.** 3 மூடவெலுக்.
**1901.** 4 கொண்டுதுகாண்.
**1903.** 4 தானொடக்கி.

மன்னன்புலி ராமய்யனை வாகாய் உட்க்கியதே
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[பாம்பன்துறைவாடியிற் போர்: வன்னியின் வெற்றி]

மற்றநாள்த் தானும் மன்னன்புலி ராமய்யனும்
கோவித்துக் கண்சிவந்து கடுங்கோபங் கொண்டெழுந்து
சஞ்சலப் பட்டிருந்த தளமெல்லாந் தானழைத்துப்
பாம்பன்துறை வாடியிலே பாரிட்ட சண்டையிட்டார்
பாற்கடலி னூடே பறந்துபோர் பண்ணச்சொன்னார்
தெத்திலே சண்டை தீப்பறந்து போகுதென்றார்
அந்நேரந் தன்னில் அதிவீரன் சடைக்கன்தளம்
கூத்தன் தளவாயும் கோமான் மறவருமாய்ச்
சாத்திய வல்லையங்கள் தானெடுத்து ஓடுவராம்
ஓடியங்கே தானும் உலம்பல்பண்ணும் அந்நேரம்
சோபமுடன் கிடந்த தோறாத வன்னியற்குப்
பாம்பன்துறை வாடியிலே பாரிட்ட சண்டையென்றார்
ஆவலுடன் வன்னி ஆர்ப்பரித்துத் தானெழுந்து
என்சீவ னிருக்கையிலே எதிர்த்துப்போர் செய்தானே
பா[ர்]ப்பானும் பரங்கியும் பாரமோ என்தனக்கு
ஆள்த்திறங்க ளறியாமல் ஆண்மைசெய்தான் பா[ர்]ப்பானும்
நாடு கலக்கியெனும் நல்லதொரு வான்பரியைக்
கொண்டுவரச் சொன்னார் கோடையிடி வன்னியுந்தான்
முத்தாலே மூக்குத்தி முகப்பட்டுந் தானணிந்து
நாலுகால் வீரதண்டை நற்கீதந் தான்பாடத்
தங்கக் கலணைவைத்துச் சதிராக விறுதுகட்டிக்
கொண்டுவந்து விட்டார்கள் கோடையிடி வன்னிமுன்னே
வான்பரியைப் பார்த்து மனமகிழ்ந்து கொண்டாடி
என்னை எடுத்து இதமாக வையுமென்றார்
கல்லணை மேலே கயிறுகொண்டு தானிறுக்கி
ஆபரண மெல்லாம் அன்பாகத் தானணிந்து
சிங்காணி வில்லம்பு சீராவுந் தான்சேர்த்துப்
பட்டாவுங் கைப்பூட்டிப் பாங்குடனே தான்நடந்தார்
கொற்றக் குடைபிடிக்கக் கொற்றவர்கள் முன்னடக்கக்
காவிக் குடைபிடிக்க கன்னன்துரை வன்னியற்கு
நீலக் குடைபிடிக்க நிசான்காரர் முன்னடக்கப்

**1911.** 1-3 பார்க்கடலினூடே பரந்துபோர்.
**1917.** 3 தோராத.
**1921.** 4 எந்தனக்கு.
**1927.** 4 விருந்துகட்டிக்.
**1931.** 3 கயறுகொண்டு.
**1935.** 3 கொத்தவர்கள்.

பஞ்சவற்னக் குடைகள் பக்கத்தில்ச் சூழ்ந்துவர
வெண்சா மரைவீச விறுது பலமுழங்கப்
பதினெட்டு மேளவகை பண்பாகத் தான்முழங்கப்
பேரிகை டம்மானம் பிறகே தொனிமுழங்க
அம்புவில்லுக் காறர் அருகே சிறந்துவர
அருவிகட்டி வல்லையங்கள் ஆர்ப்பரித்து முன்னடக்க
வான்பரிசைக் காறர் வாகாக முன்னடக்க
வெள்ளிகட்டித் துப்பாக்கி விதம்விதமாய்ச் சூழ்ந்துவரக்
குப்பக் குழல்க்காறர் குலவையிட்டுச் சூழ்ந்துவரப்
பாளையக் காறர் படைத்தலைவர் சூழ்ந்துவரக்
கட்டியக் காறர் கனவிறுது கூறிவரப்
பட்டத்துக் குஞ்சரமும் பாங்காக முன்னடக்க
வெற்றிகொள்ள வேணுமென்று வேலவரைக் கைதொழுது
சற்றுஞ் சலியாமல்ச் சங்கரனைக் கைதொழுது
ராமநாத சுவாமி நல்லதுணை யென்றுசொல்லி
நடந்தார்காண் வன்னித்துரை நாவலர்கள் கொண்டாட
நோவோடே போகாதே முகுந்தனே என்மருகா
என்றுசொன்ன அம்மானை யேறிட்டுத் தான்பார்த்துத்
தெத்திலே வந்தான்காண் தீரன்புலி வன்னியுந்தான்
தெத்தில் இருந்தபடை சேரவே வந்துகண்டார்
வந்துகண்டு தெண்டனிட்டார் வாள்வீரன் வன்னியுந்தான்
எல்லோரும் வந்து இதமுடனே ஆர்ப்பரித்து
மன்னன் புலிராமன் மட்டில்லாச் சேனையின்மேல்
எறிந்தார் எறிவாணம் எல்லையற்ற சேனையின்மேல்
ராமன்படை யத்தனையும் நடுங்கி மிகப்பயந்து
காலனிவ னென்று கலங்கியே ராமன்படை
வன்னியுட கையாலே மன்னவர்கள் மடியவென்று
சொற்பனங்கள் கண்டு துணுக்கென் றெழுந்திருந்தான்
கூகை குழறிடவே கூப்பிட்டு ஓரிகளும்
காகங் கதறிடவே கரிக்கைகன்னி யந்திடவே
இடதுதோள் துடித்திடவே இரு[நா]சி மூடிடவே
அடர்ந்தே கதிரோனை அரவம்வந்து தீண்டதுபோல்
சொற்பனங்கள் கண்டார் துங்கமுடி ராமன்படை
அங்நேரங் தன்னில் ஆனதொரு வன்னியற்கு

**1938.** 2 குடையள்; 4 சூள்ந்துவர.
**1939.** 1 வெஞ்சா.
**1943.** 1 அரிவிகட்டி.
**1946.** 2 குளல்க்காரர்.
**1950.** 1 வெத்திகொள்ள.
**1951.** 1 சத்துஞ்.
**1955.** 3 யேரிட்டுத்.
**1961.** 3 யெல்லையத்த.
**1966.** 2 குளறிடவே.
**1967.** 2 கதரிடவே.

வாகாய்க் கெருடன்வந்து வட்டமிட்டுச் சுற்றியதே
கண்டுதான் வன்னி கண்குளிரத் தான்பார்த்து
மன்னன் புலிராமன் மகாசேனை யில்ப்புகுந்து
ஆனைத் திரளில் ஆளிசிங்கம் புகுந்தாப்போல்
ஊடுருவச் சென்றான் உலகங் கிடுகிடென
வெட்டினான் வன்னி வேந்தர்களைத் தான்துணித்தான்
சுட்டார் குழல்க்காறர் சொல்லரிய மன்னரைத்தான்
வாணப் பொதியுடனே வங்கார ஈட்டிகளும்
சுட்டார் குழல்க்காறர் சொல்லரிய மன்னரெல்லாம்
எறிந்தார் எறிவாணம் எல்லையற்ற சேனையிலே
தீரன் புலிராமன் சேனைவெள்ள மத்தனையும்
கூகூ வெனவே கோடேறியே பொருதார்
அப்போது வன்னியனும் அந்த விசளங்கேட்டு
ஏறினான் வான்பரிமேல் எல்லையற்ற சேனைமுன்னே
ஊடுருவச் சென்றான் உலகங் கிடுகிடென
வந்து வளைந்துகொண்டார் மகாராமன் தன்படையை
இடசாரி வலசாரி எதிர்த்துப் பொருதலுற்றார்
அப்போது வன்னியனும் ஆர்ப்பரித்துக் கொக்கரித்து
முன்கை கடித்து முகத்தில்ரத்தஞ் சிந்திவிழ
மீசை முறுக்கி விறுது பலபேசி
வாளோடே வாள்முறிய மண்டிப் பொருதலுற்றார்
விருப்பாச்சி நாயக்கனை விறுதுசொல்லி வெட்டலுற்றார்
பொம்மண நாயக்கனையும் பிளந்தா னிருகூறாய்
தொட்டய நாயக்கனையும் தோளைப் பிளந்திறைத்தான்
அந்திரத்தில்த் தேவர்களும் அலங்காரம் பார்த்திருக்க
இந்த வுலகில் எவருடைய தன்போரோ
வாலியுட போரும் மாயனுட தன்போரும்
என்றுசொல்லித் தேவர்களும் எல்லோரும் பா[ர்]த்திருந்தார்
வெட்டினான் வன்னியனும் விறுதுகள் அந்தி[ட]வே
மாப்பிள்ளை கொண்டப்பய்யன் மதம்பொழிந்து வந்தெனவே
அன்று பாளையக்காறர் அடங்கா முடியரசர்
விறுதுசொல்லும் வேந்தரையும் வேணபோரி லேதடிந்து
பொட்டியும் மூடியுமாய்ப் பிளந்தெறிந்தான் வன்னியுந்தான்
உண்டைபட்டுச் சோர்ந்து உருண்டு கிடப்பாரும்
வாண மடித்து மண்மேல்க் கிடப்பாரும்

**1975.** 4 பூந்தாப்போல்.
**1978, 1980.** 2 குளல்க்காறர்.
**1981.** 2 எரிவாணம்.
**1983.** 3 கொடையேறியே.
**1993.** 2 ஞயக்கனை.
**1994.** 3-4 புளந்தானிருகூறாய்.
**1995.** 4 பிழந்திரைந்தான்.
**2003.** 4 லேதடித்து.

குத்துண்டு போர்க்களத்தில் குலவையிட்டு நிற்பாரும்
ஆனைகுத்திச் சோர்ந்து அலறி[யே] வீழ்வாரும்
காகம் பருந்து கழுகுமிருந் துண்டிடவே
வெட்டி விழுந்தறுத்து விறுதுபுகழ் வன்னியுந்தான்
மன்னன்புலி ராமன் மட்டுப்படாச் சேனைவெள்ளம்
ஆறு யிரம்பேரும் அத்தலத்திலே மடிந்தார்
குதிரை அன்பதுதான் கோடேறி யேற்றடித்தார்
அஞ்சானைக் கூடாரம் ஆற்பரித்துக் கொள்ளையிட்டு
வெட்டித் துரத்தி விறுதுகளும் தான்பிடித்து
மன்னன்புலி ராமன் மட்டுப்படாச் சேனைவெள்ளம்
லெக்கா யிருந்ததுகாண் உலகிலுள்ளோர் கொண்டாட
வெற்றிச் சங்கூதி விறுதுகளும் தான்பரித்துத்
தீரனவன் வன்னியனுந் திறமாகவே நிறுத்தி
வீரியங்கள் பேசி மிகவுடனே ஆற்பரித்துப்
பட்டத்து யானைமேல்ப் பாங்கான அவுதாவை
வேண்டிய ஆபரணம் விதமுடனே தான்பூட்டிக்
கொம்புக்கத்தி யுடனே குறுநெற்றி லட்சுமியும்
வீசுசலி கட்டி விதமானப் போதவையும்
நாலுகால் வீரதண்டை நவமணி யாபரணம்
வேண்டு வரிசை விதமுடனே தான்பூட்டி
ஏறினான் யானையின்மேல் எல்லையற்ற சேனைமுன்னே
தேவர்க ளெல்லோருந் திடுக்கிட்டுப் பா[ர்]த்திருக்கப்
பஞ்சவற்னப் பாவாடை கொஞ்சி மிகவெறியக்
கட்டியக் காறர் கனவிறுது கூறிவரக்
கொற்றக் குடைபிடிக்கக் கோடிதளஞ் சூழ்ந்துவரச்
சங்கீத மேளஞ் சமுத்திரம்போலே முழங்கப்
பேரிகை டம்மானம் பிறகே தொனிமுழங்க
நடந்தானே வன்னியனும் நல்லமுத்து மாலைசிந்தச்
சேதுக் கரைவாழுந் தீரனையும் வந்துகண்டான்

[சடைக்கனைக்கண்டு வன்னி உறுதிமொழி கூறல்]

வந்துகண்ட வன்னியனை வாரி யெடுத்துமெள்ள
ஏந்தி யெடுத்து இருகண்ணோடே தானணைத்துத்
திட்டிக்கிடாய் சுற்றித் தீரனவ் வன்னியற்குப்
பள்ளியறை மாளிகையில் பாங்காகக் கூட்டி[வ]ந்து

**2009.** 2-3 பராந்து களுகுமிருந்.
**2013.** 4 யேத்தடித்தார்.
**2017.** 1-2 வொக்கா யிருந்துதுகாண்.
**2023.** 3 குறுநெத்தி.
**2029.** 4 மிகவெரியக்.
**2031.** 1 கொத்தக்.
**2032.** 4 முளங்கப்.
**2033.** 4 தொனிமுளங்க.
**2035.** 2 கரைவாளுந்.

வெங்கீரை விட்டு விரித்தார்கள் பட்டாவை
அப்போது வன்னியனும் அம்மான் முகம் பா[ர்]த்துக்
கட்டி[ன]கச்சை அவிழ்க்கு முன்னே யென்சொல்லுவார்
என்வார்த்தை தன்னை யினிக்கேளு மன்னவனே
படைத்தலைவ ரத்தனையும் பாங்காக நம்பாதே
ஆனை குதிரை அடங்கலும் நம்பாதே
உற்றார் உறமுறையார் ஒன்றும்நீர் நம்பாதே
தெய்வத்தை நம்பாதே தீர்க்கமுடன் சொல்லுகிறேன்
மன்னன்புலி ராமனுக்கு வாகாக ஓலைதன்னைக்
கண்டு வணங்கக் காகிதமுந் தானெழுது
அவன்தமயன் வயித்தியனார் அவர்மேலே ஆணையிட்டு
நம்பிக்கை யோலை நமக்குவர வேணுமென்றே
கோடித் திரவியங்கள் கொண்டுபோய்த் தான்கொடுத்துக்
கண்டு வணங்கிக் கலங்காமல்த் தாமிருங்காண்

[வன்னியின் மரணம்]

என்றுசொல்லி வன்னியனும் இதமுடனே தானுரைத்து
மெய்க்கலக்க மாக மறுகுதென்றான் வன்னியனும்
கட்டின கச்சை அவிழானே வன்னியனும்
மெத்தைதனில்ச் சாய்ந்தான் மெய்க்கலக்க மாகவேதான்
ஏமனும் வந்து எதிர்க்கவர மாட்டாமல்
கிட்ட வரப்பயந்து கெடிகலங்கிப் போய்விடுமாம்
தீரனவன் வன்னியனுஞ் சிவலோகந் தான்சேர்ந்தான்

[சடைக்கன் முதலியோர் புலம்பல் : வன்னியின் தேவி தீப்பாய்தல்]

அப்போது சேதுபதி அடித்துமிக விழுந்தழுது
நின்று மயங்கி நெடுமூச்சுத் தானெறிந்து
என்மருகா வன்னியனே யென்னைக் கெடுத்தாயே
இந்திர செயித்து என்றிருந்தேன் என்மருகா
காட்டிக் கொடுத்துக் கடக்கப்போய் நின்றாயோ
நாளைப் படைப்போரில் நலமுடனே ஆர்பொருவார்
நேற்றுப் படைப்போரில் நிசான கொடிகளைத்தான்

**2042.** 2 அவுக்கு.
**2046.** 1-2 உத்தார் உரைமுரையார்.
**2047.** 3 தீற்கமுடன்.
**2048.** 1 மன்னபுலி.
**2050.** 3 அவர்மேலே.
**2052.** 2 திறிவியங்கள்.
**2056.** 3 அவிளானே.
**2058.** 3 எதுக்கவர.
**2059.** 3 கிடிகலங்கிப்.
**2061.** 4 விளுந்தளுது.
**2065.** 2 குடுத்துக்.
**2066.** 4 ஆர்பொறுவார்.

வான்பரியின் மேலே[ற்]றி மண்டிப் பொருகையிலே
படைத்தலைவர் கண்ணுக்குப் பாங்காய்ப் பலித்ததுவோ
தேவர்கள் கண்ணுந் திறமாய்ப் பலித்ததுபோல்
மன்னன்புலி ராமன் வஞ்சனைகள் செய்தது போல்
பட்டத்து யானையின்மேல் பாங்காகத் தானேறி
ஆபரண மாலையிட்டு அலங்கரித்துத் தான்வரையில்
இருதோளும் பூரித்து இதமுடனே நான்பா[ர்]த்துப்
பா[ர்]த்தகண்ணு மிப்போ பாங்காய்ப் பலித்ததுகாண்
என்னைக் கெடுத்தாயே என்மருகா வன்னியனே
முகத்தி லறைஞ்சழுது மூச்செறிந்து தான்சடைக்கன்
சடைக்கனுட தேவி தாழ்குழலாள் வந்துநின்று
மாருச் சதையை வாரி யெறியலுற்றாள்
கல்க்கட்டு மோதிரங்கள் கழல அறையலுற்றாள்
முத்துமணி யற்றுவிழ முட்டிப் புரண்டழுதாள்
என்மருகா வன்னியனே என்னை யெடுத்தாயே
சேதுக் கரைவாழும் தீரன்துணை யென்றிருந்தோம்
வான்பரியின் மேலேறி வரும்போது பா[ர்]த்திருந்து
என்மகளும் நானும் இருதோளும் பூரித்து
முகத்தி லறைந்தழுது மூச்செறிந்து தான்[ச]டைக்கன்
சடைக்க னுடதேவி தாழ்குழலாள் வந்துநின்று
திட்டிக்கிடா யாலாத்தி திறமா யெடுப்போமோ
என்மகளோ உன்னையிழந் திருப்பாளோ பூமியிலே
பூமி தனிலிருக்கப் பொறுக்குமோ என்மருகா
நாளைப் ப[டை]டப்போரில் நல்ல சமர்க்களத்தில்
ஆர்போர் பொருவார்காண் அதிவீர ராமருடன்
சீனிச் சரப்பளியும் சிங்காரமுத்துத் தாழ்வடமும்
மார்பில்ப் புரண்டசைய மாரிபோலே முழங்க
வீதிவரக் காண்பேனே வேந்தனே யென்மருகா
என்மருகா வன்னியனே இந்தவிதி வந்ததென்ன
என்று சொல்லி மாமியரும் ஏங்கி யழலுற்றார்
படைத்தலைவ ரெல்லோரும் பாங்காகத் தானலறி
எல்லோரையு ம[டை]ழத்து எதிரில்லாச் சேதுபதி
வன்னியுட தேவி மனதில்க் கிலேசமுற்று
நீராடிக் குழல்முடித்து நீலவற்னப் பட்டுடுத்திக்

**2068.** 4 பொறுகய்யிலே.
**2073.** 1 ஆவரண.
**2078.** 3 தார்குழலாள்.
**2081.** 4 பெரண்டழுதாள்.
**2084.** 1 வான்பரியும்.
**2087.** 3 தார்குழலாள்.
**2089.** 2 ஒன்னையிளம்.
**2093.** 4 தாவிடமும்.
**2094.** 2 பிரண்டசைய.
**2097.** 4 யளுகலுற்றார்.

கொட்டு முழக்குடனே குதித்தாளே அக்கினியில்
துக்கந் தெளிந்தார்கள் தோருத வாசகற்கு
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்

[ராமப்பய்யன்கொலு : வன்னியின் மரணச்செய்தி]

மற்றநாள்க் கூடி மன்னன்புலி ராமயனும்
கொலுவி லிருக்கையிலே கொக்கரித்துத் தூதுவர்கள்
ஓடிவந்து ராமருடன் ஒதுங்கியே வாய்புதைத்து
வன்னி யிறந்தானென மகிழ்ச்சியுடன் சொல்லுவராம்
குலுங்க நகைத்துக் கொற்றவரைத் தான்பார்த்து
வன்னியு மாண்டானென மன்னவரே கேட்டீர்களோ
என்றுசொல்லி ராமய்யனும் இருபுயமும் தான்குலுங்க
நகைத்து இருக்கையில் நன்றாகவே தூ[ளை]த

[சடைக்கன் தூது : ராமப்பய்யன் உறுதிகொடுத்தல் : சடைக்கன் பணிதல்]

சடைக்கன் மிக எண்ணித் தாங்குதரிப் பில்லையென்று
மன்னன்புலி ராமய்யனுக்கு வாகாக ஓலைதன்னை
தமையன் வயித்தியனார் தன்மேலே ஆணையிட்டு
நம்பிக்கை யாக நான்வருவே னென்றுசொல்லி
ஓலை தனையெழுதி ஓடவிட்டான் தூதுவனை
ஒற்ற னவனோடி யுற்றபெருங் காற்றெனவே
கோலாகல ராமன் கொலுவி லிருக்கையிலே
ஓலை தனைக்கொடுத்து ஒதுங்கிநின்றான் தூதுவனும்
வாசித்துப் பார்த்து மன்னன்புலி ராமய்யனும்
பூரித் திருபுறமும் பொன்னுருக்கி விட்டாப்போல்
வந்தவொரு தூதுவற்கு வரிசை மிகக்கொடுத்து
ராமய்யர் தன்னிருபம் நன்றாகவே யெழுதி
ஒற்ற னிடங்கொடுத்து உற்றதா னுபதியும்
இருபேரையு மனுப்பி யேகினர்கா ணம்மானை
வாள்க்கோட்டை ராயன் மதச்சடைக்கன் வந்துகண்டு
வந்த தானுபதியை வரிசை யுடன்அழைத்து
நிருபந் தனையெடுத்து நீட்டினான் தூதுவனும்
வாசித்துக் கண்ணிலொற்றி வாகாகவே சடைக்கன்
இந்த வுறுதி யென்தனக்குப் போதுமென்று
வெள்ளியுடன் பொற்பூவும் விதமுடனே தட்டில்வைத்து

**2103.** 3 தோராத.
**2106.** 3 கொக்கறித்துத்.
**2108.** 3 மகட்சியுடன்.
**2109.** 3 கொட்டவரைத்.
**2110.** 4 கேட்டியளோ.
**2118.** 1 ஓட்ட.
**2120.** 3 ஒதிங்கிநின்றான்.
**2130.** 2 கண்ணிலொத்தி.

ஆபரண மாலையெல்லாம் அன்புடனே தானணிந்து
வேண்டும் வரிசையெல்லாம் விதமுடனே தானெடுத்து
ராமநாத சுவாமி நல்லதுணை யென்றுசொல்லி
ஏறினான் தண்டிகைமேல் எல்லையற்ற சேனைமுன்னே
தானா பதிக்குத் தனித்துமொரு தண்டிகைமேல்
ஏறவே சொல்லி யேகி யிருபேரும்
பாளையக் காறர் பலபேருஞ் சூழ்ந்துவரக்
குப்பைக் குழல்க்காறர் கோடிமன்னர் சூழ்ந்துவர
அருவிகட்டி வல்லையங்கள் அருகே நிறைந்துவரப்
பஞ்சவற்னப் பாவாடை கொஞ்சி மிகவெறியக்
கட்டியக் காறர் கனவிறுது கூறிவரச்
சங்கீத மேளம் சமுத்திரம்போ லேமுழங்கப்
பேரிகை டம்மானம் பிறகே தொனிமுழங்கக்
கோலாகல ராமன் கொலுவிலே வந்திருந்து
தண்டிகை விட்டிறங்கித் தான்வந்து சேதுபதி
வேண்டும் வரிசை விதமுடனே முன்னேவைத்துப்
பூவைக் குவித்துப் புதுமையுடன் தெண்டனிட்டு

[ராமப்பய்யன் பரிகசித்தல் : சடைக்கன் ஆண்மைமொழி : அவனைக்கட்டித் திருமலைநாயக்கர்முன் கொண்டுவருதல்]

அப்போது ராமய்யனும் ஆற்பரித்துக் கோபமதாய்த்
தலைப்பாகை தான்கழற்றித் தட்டிக் குடுமிதனைக்
கட்டின தேங்காயைக் கடுக எடடா சடைக்கா
என்றுபுலி ராமய்யனும் இவ்வசனந் தானுரைத்தான்
தெண்டனிட்ட சேதுபதி திண்ணமுடன் ஏதுரைப்பான்
உந்த னிடத்தில் ஒடு[ங்]கியே வந்தேனென்று
இந்த வசனம் எடுத்துரைத்தாய் மன்னவனே
என்மருகன் வன்னி யிருந்தானே யாமாகில்
தேங்காயைக் கட்டிச் சிதற அடிப்பானே
என்று சடைக்கன் இவ்வசனந் தானுரைக்க
அப்போது ராமய்யனும் ஆற்பரித்துக் கோபமிட்டு
உந்தன் அண்டைக்கலம்போல் ஒருக்காலு மில்லையென்று
என்தன் அடியிணைய யேத்திப் பணியாமல்
இந்த மறவனுக்கு இடும்பே தெனநகைத்துத்
தீரன் சடைக்கனைத்தான் திறமாகக் கட்டுமென்றார்
கட்டுமென்ற போதே காவலர்கள் தான்கூடி

**2136.** 3 எல்லையத்த.
**2141.** 1 அறுவுகட்டி.
**2151.** 2 தான்களத்தித்.
**2163.** 2-3 இடும்பைதன நகைத்து.
**2164.** 3 திரமாகக்,

மற்கட்டாய்க் கட்டி மன்னன் சடைக்கனைத்தான்
குஞ்சரத்தின் மேலேற்றிக் கோலாகல ராமன்
கூடாரந் தான்பிடுங்கிக் கொக்கரித்து ஏதுரைப்பான்
மறவன் சடைக்கன் வந்தானென மனமகிழ்ந்து
பாளையக் காறர் பலபெயர்கள் முன்னடக்க
வெற்றிக் குழல்ச்சுட்டு விறுதுகளுந் தான்கூறிப்
பூமி யதிரப் புகழ்கதிரோன் தான்மறையச்
சங்கீத மேள[ம்] சமுத்திரம்போ லேமுழங்க
வீராணம் நாகசின்னம் வெண்கலக்கொம் பூதிவரப்
பேரிகை டம்மானம் பிறகே தொனிமுழங்க
நடந்துவந்தான் ராமய்யனும் நாகலோக மதிர
மானு மதுரையிலே வந்தடித்தார் கூடாரம்
கூடாரந் தானடித்தான் கொடியபுலி ராமய்யனும்
சடைக்கன் பதனமென்று தலங்காவ லரையெல்லாம்
பதனம் பதனமென்று பறையறைந்தா ரம்மானை
அந்தநாள் சென்று அலைகதிரோன் போய்மறைந்தான்
மற்றநாள் சென்று மன்னன்புலி ராமய்யனும்
தேவர்கள் பூசைபண்ணும் திருப்பூவணத்தில் வந்தார்
திருப்பூவணங் கடந்து தீரன்புலி ராமய்யனும்
கூடல்தனை நோக்கி கொற்றப்புகழ் ராமய்யனும்
பூமி யதிரப் புகழ்க்கதிரோன் தானதிரக்
கச்சித்திருமலை யேந்திரனார் கனகாற்றின மேடைவந்து
சடைக்கனைக்கொண்டு வந்தேனென்று தன்கையை யேந்தலுற்றான்
ராமய்யனைக் கண்டு நலமாகத் தான்மகிழ்ந்து
வாருமென்று சொல்லியபின் மறவனைப்பா[ர்]த் தேதுரைப்பார்

[நாயக்கர் கோபித்தல் : சடைக்கன் மறுமொழி : அவனைச் சிறையிடுதல்]

ஏண்டா சடைக்கா இத்தனையும் உண்டோதான்
என்னை வணங்காமல் என்பாதங் காணமல்
தாட்டிமைக ளாகத் தானிருந்தா யேசடைக்கா
என்றுசொல்லுங் கச்சித் திரருக் கேதுசொல்வான்
ஆண்டவனே யிப்போ அடியேன்சொல் விண்ணப்பங்கேள்
என்மருகன் வன்னி யிருந்தானே யாமாகில்
தேவரீர் பாதந் தெரிசிக்க மாட்டேன்யான்
என்றுசொல்லிச் சேதுபதி திறமுடனே தானுரைக்க
முத்துவீரப்பன் துணைவன் கச்சித்திருமலை யேந்திரருக்குக்

**2167.** 2 மேலேத்திக்.
**2168.** 2 தான்பிடிங்கிக்.
**2174.** 3 வெங்கலக்கொம்.
**2191.** 3 யித்தினையும்.
**2195.** 4 விண்ணப்பங்கேழ்.
**2198.** 3 திரமுடனே.

கோப மிகுந்து கொடிய சடைக்கனைத்தான்
அறைக்கோட்டை தன்னில் அடைத்து விலங்குதைத்துக்
கரையில்லாப் பேரைக் காவல்வையும் என்றுரைத்தார்
மகராசன் சொல்கேட்டு வாகான ராமய்யனும்
அந்தப் படியே அடைத்து விலங்குதைத்துக்
காவலோரை அழைத்துக் காருமென்று வைத்தனராம்

[ராமப்பய்யனுக்குக் கனகாபிஷேகம்]

அப்போது ராமய்யற்கு ஆனதிருமலை யேந்திரனும்
மெய்ப்பாய்க் கனகஸ்நானம் விதமாய்க் கொடுக்கவென்று
ஆபரண மாலை ஆனபீ தாம்பரமும்
முத்துக் கடுக்கன் முன்கைவளை மோதிரமும்
வயிரப் பதக்கம் வாய்த்த சரப்பளியும்
பூட்டி யலங்கரித்துப் போர்மன்னன் ராமய்யனை
வாரணத்தின் மேலேற்றி வாகாய்ப் பவனிவந்தார்
பவனி வரும்போது பாங்கான நாகசுரம்
சங்கீத ராகம் தவில்முரசு தான்முழங்க
எக்காள மூத இடிமுரசு தான்முழங்கப்
பேரிகை மத்தளமும் பேசுங் கிடுபிடியும்
மேளத் தொனிமுழங்க வெண்சாமரம் வீசக்
கட்டியக் காறர் கனவிருது கூறிவர
வரும்பவனி கண்டு மடவார்களெல்லோரும்
ஆலாத்தி யேந்தி அருகே நிறைந்துவரத்
தாலத் திருவிளக்கும் சமையத்தே நின்றிலங்கக்
கோலாகல ராமன் கொலுவீதி தானடக்க
வரும்போது பட்டணத்து மங்கையர்களெல்லோரும்
கண்டு மிகவே காதல் மிகப்பெருகி
மன்மதன்காண் என்பாரும் வாலசிவன் என்பாரும்
வீமன்காண் என்பாரும் விசையன்காண் என்பாரும்
சொல்லுக்கரிச் சந்திரன்காண் துரைராசன் என்பாரும்
மல்லுக் கரிய மகாராசன் என்பாரும்
என்ற மடவார்கள் ஏற்ற கலைசோர
நிற்கிறதைக் கண்டு நீதியுள்ள ராமய்யனும்
கண்டு சிரித்துக் கடுகப் பவனிவந்தார்
விண்டுபுகழ் ராமய்யனும் வேழமதை விட்டிறங்கி

**2200.** 4 சடைக்கனுந்தான்.
**2201.** 1 அரைக்கோட்டை.
**2207.** 2 கனகஸ்தானம்.
**2210.** 2 பதைக்கன்.
**2212.** 4 பவுனிவந்தார்.
**2213.** 4 நாகசரம்.
**2229.** 1 என்று.
**2230.** 1 நிற்குறதைக்.

வருமதுவைக் கண்டு வாகாய்த் திருமலேந்திரரும்
சமுகந் தனில்நிறுத்திச் சந்தோஷ மாயிருந்தார்

[மாயனருளாற் சடைக்கன்விலங்கு தெறித்தல்]

இருக்குந் தறுவாயில் ஏற்ற சடைக்கனுக்கு
மனக்கவலை யாகியதை மாயன் மிகஅறிந்து
சடைக்கனுட இக்கட்டுத் தான்தவிர்க்க வேணுமென்று
அப்போது மாயன் அந்நேரம் வந்துநின்று
காட்சி கொடுத்தார் கன்னன் சடைக்கனுக்குக்
காலில் விலங்கு கலீலென்று தான்தெறித்துப்
போனதுவைக் கண்டு புகழ்ந்து மிகச்சடைக்கன்
மாயனுக்குச் சித்தம் வந்ததுகாண் என்றிருந்தான்
இருக்குந் தறுவாயில் ஏற்றதொரு காவலர்கள்
திருமலை யேந்திரர்முன் திறமாக வந்துநின்று
சடைக்கனுட கால்விலங்கு தான்தெறித்த தென்றுரைத்தான்
என்ற பொழுதே இதமாய் மனமகிழ்ந்து
சடைக்கனுக்கு ராமர் தானுதவி யென்று சொல்லிக்
கூட்டிவரச் சொன்னார் கொடியதொரு ராமய்யர்முன்

[நாயக்கர் சடைக்கனை வரவழைத்துச் சிறப்புச்செய்து அரசுகொடுத்தல்]

அப்போ சடைக்கனைத்தான் அருகே வரவழைத்துக்
கச்சித்திருமலை யேந்திரனர் களிகூரத் தான்மகிழ்ந்து
சடைக்கனைப் பார்த்துத் தானுரைப்பார் அம்மானை
மாயன் கடாட்சம் மகிமையுண்டு உன்தனுக்கு
ஆனதினால் சடைக்கா ஆலோசனை வேண்டாம்
என்தனுரை கேட்டு இதமாக நீரிருங்காண்
இருமென்ற சொல்கேட்டு ஏற்ற சடைக்கனுந்தான்
வணங்கி நமஸ்கரித்து வாகாக ஏதுரைப்பார்
மாதா பிதாநீரே வ[ா]ய்த்த துணை நீரேகாண்
சாமி அடியேன் தாசன்கா ணென்றுரைத்தான்
அந்த மொழிகேட்டு ஆன திருமலையும்
சந்தோஷ மாகியவர் தன்னருகே தானழைத்து
ஆடைவெகு பூஷணமும் அன்பாகத் தான்கொடுத்து
வேந்தன் சடைக்கனுக்கு விறுதுகளுந் தான்கொடுத்து
ராமநாத சுவாமி நல்ல பெருந்தீவில்
சென்றிருங்காண் என்று தீரன் விடைகொடுத்தார்

**2237.** 3 தான்தவிள்க்க.
**2245.** 3 தான்தெறித்து.
**2246.** 3 யிதவாய்.
**2253.** 3 ஆலோசினை.
**2254.** 3 யிதவாக.

[சடைக்கன் மீண்டு அரசுபுரிதல்]

விடைபெற்றுத் தான்சடைக்கன் வேகமுடன் கைதொழுது
சொக்கலிங்கம் மீனாட்சி துணையென்று தான்மறவன்
நின்றனுப்பிக் கொண்டு நீதியுடன் தெண்டனிட்டு
ஏறினான் தண்டிகையில் எல்லையற்ற சேனையுடன்
சேனை தளஞ்சூழச் சென்றேகி யேபோனான்
ராமநாத சுவாமி நல்லபெரும் பட்டணத்தில்
செங்கோல் செலுத்திச் சேவடியைக் கைதொழுது
மாயன் அருளால் மண்டலத்தை ஆண்டிருந்தான்.

[வாழ்த்து]

கேட்டவர்க ளெல்லோருங் கிளைகோத்திரந் தழைக்க
படித்தோர்க ளெல்லோருக்கும் பாக்கியங்கள் உண்டாக
மன்னன்கச்சித் திருமலையேந்திரனார் மண்டலத்தை யாண்டகதை
கேட்டவர்க ளெல்லோருஞ் சிறப்பாக வாழ்ந்திருக்க
வாழி மிகவாழி மங்காமல் வாழியதே
சொக்கலிங்க மீனாட்சி துணைபெற்று வாழியதே
ஈசன் அருள்பெற்று எல்லோரும் வாழியதே.

ராமப்பய்யன் அம்மானை

முற்றும்

## அனுபந்தம்—I.

## TAYLOR'S ORIENTAL HISTORICAL MANUSCRIPTS.

(Vol. II, 24, 26.)

இராசா திருமலைநாயக்கர் மதுரையில் பட்டங்கட்டிக்கொண்டு அவர் தம்பி குமாரமுத்து நாயக்கர் சின்னத்துரையுமாக இராச்சியம் ஆளையில், சீரங்கம் மதுரைமுதல்க்கொண்டு விஷ்ட்டிணுதலங்கள் சிவதலங்களுக்கெல்லாம் தொண்ணூத்தி ஆறு கோபுரம் 'ராயர்கோபுர' மென்று கோபுரமெல்லாம் பெருசாய் ஒரு முகிற்தத்தில் அடிப்போட்டு சிறுது வேலையள் முடித்தார். மதுரையில்த் தெற்பக் குளமும் புதுமண்டபமும் அரமனையுங் கட்டிவைச்சார்.

அப்போது கூத்தன் சேதுபதி குமாரன் தளவாய் சேதுபதி சடைக்கத்தேவ னென்றும் அவருக்கு இரண்டு நாமகறணம். அந்தச் சடைக்கத் தேவனென்கிறவர் அரமனைக்கிப் பணமுங் குடாமல் நிகாரித்து ரெம்பத் துற்மாற்கங்களாய் நடப்பித்துக்கொண்டு வந்தார்கள். அது சமாசாரம் இராசா திருமலை நாயக்கர் கேட்டு அவருக்குத் தாகிதையாய் நிருபம்யெளுதி அனுப்பிவிச்சார்கள். அந்த நிறுபத்தையுந் தள்ளிப்போன மனுசரையு மடித்துக் கோபம் வைத்துத் தளவாய் இராமப்பய்யரையும் சகலதளமும் யெளுபத்திரண்டு பாளையகாரரையும் அனுப்பி இராமனுதபுரத்துவரைக்குஞ் சண்டை பண்ணிக் கோட்டையை விட்டுப்போட்டு சடைக்கத் தேவர் ராமேசுபரத்தில்ப் போயிருந்தார். தளவாயி ராமப்பய்யனவர்கள் பாம்பனாத்துக்கு குறுக்கை அணைகட்டி அதின்பேரில் தளத்தை நடத்தி இராமீசுரத்துக்குப் போய் சண்டைபண்ணி சடைக்கத்தேவனையும் பிடித்துக்கொண்டுவந்து மதுரையில் நிகளபந்தனம் பண்ணி இருந்ததில்ச் சிறுதுனாளக்கிப் பிறகு ராமேசுபரம் பாதைமாற்கங்களில்ச் சில்லறையளாயிருந்துது. அப்படியிருக்கையில் வயிராகியள் லாடசன்னுசியள் வடக்கேயிருந்து இராமேசுர யாத்திரைக்கு வந்து இராசா அரமனைவாசலில் வெகுனாள்வரைக்கும் காத்திருந்து பிருதி பண்ணிவிச்சுச் சேதுபதியை விடச்சொல்லி ரெம்ப வேண்டிக் கொண்டார்கள். ராசாவுக்கு ரெம்பத் தயவுவந்து சடைக்கன் சேதுபதியை விட்டு இனிமேல் புத்தியாய் நடந்துக்கோ வென்று வஷ்த்திர பூசணுதியளும் வெகுமதி கொடுத்து சீமையும் கொடுத்து அனுப்பிவிச்சார்கள்.

---

## அனுபந்தம்—II.

## TAYLOR'S ORIENTAL HISTORICAL MANUSCRIPTS.

### (Vol. II, 176.)

அப்பால் சிறுது நாளைக்குப் பிறகு சேதுபதிபேரில் சண்டைக்குப் போகவேணுமென்று எழுபத்திரண்டு பாளையத்தாரையும் வரவழைச்சுக் கொண்டு தளவாயி ராமப்பய்யரவர்களும் வெகு தளங்களைச் சேகரித்துக் கொண்டு சேதுபதியின் பேரில் போயிறங்கினதில் அவ்விடத்தில் அநேக சண்டை செய்து சேதுபதிக்கு நிர்வாக மில்லாமல் ராமேசுரத்துக்குப் போய் விட்டார். அப்போது ராமேசுரத்துக்குப் போய்ச் சேதுவணையுங் கட்டு விச்சுச் சேதுபதியையுங் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வந்ததில், அப்போது ரெங்கன நாயக்கர் ரொம்பவும் பிரயாசைப்பட்டுச் சேதுபதியைக் கைப்பிடியாய்ச் சிக்கும்படிக்குச் செய்ததினாலே, கர்த்தாக்கள் ரெங்கன நாயக்கரைப் பார்த்து நீ குமாரவர்க்கமானதினாலே அரமனைக் காரியத்தில் ரொம்பவும் பிரயாசைப்படுகிறு யென்று ரொம்பவுஞ் சந்தோஷப்பட்டு உடுகரையுஞ் செய்து ஊருக்குப் போகச்சொல்லி உத்திரவு செய்தார்கள்.

---

## அனுபந்தம்—III

### 516—1916

1 சகாத்தம் தருாசுயஉன் மேல் செல்லா நின்ற கொல்லம்
2 அாயசுளு ஊகூ ணாயநத்து வர்ஷரிது ஆவணிமீ ஙயக௳
3 க்ருஷ்ண பக்ஷத்து வஏகாஊஸியும் ஶு௱ரு வாஸரமும் சுபயோக சுப க
4 ரணமும் பெற்ற புநர்வஸு௱ நக்ஷத்திரத்து நாள் வயித்தியப்ப அய்யருக்கும்
5 இராமப்ப அய்யருக்கும் க்ருஷ்ணப்ப அய்யருக்கும் புண்ணியமா
6 க க்ருஷ்ணப்ப அய்யர் செய்வித்த திருப்பணி ஶு௱ஹமஸ்து

ஊர்: பாப்பாங்குளம்

இடம்: ராமசுவாமி கோயிலின் முன்வாசலில் வலதுபக்கத்தில்
இரண்டாம் பிராகாரத்தில் கீழைச்சுவர்.

### 517—1916

1 சகாத்தம் தருாசுயஉன் மேல் செல்லா நின்
2 ற கொல்லம் அாயருளு விக்கிரம ஸஂ ஆ
3 டிமீ உயங உ பூறுவ பக்ஷத்து பவுற்ணையும்
4 புதவாரமும் சுபயோக சுவகரணமும்
5 பெற்ற ஶ்ராவண நக்ஷத்திரத்து நாள் கிருஷ்ணப்ப அ
6 ய்யர் புண்ணியமாக செய்வித்த திருப்பணி

ஊர்: பாப்பாங்குளம்

இடம்: ராமசுவாமி கோயில் முன்வாசலின் இடது பக்கத்தில்
இரண்டாம் பிராகாரத்தின் கீழைச்சுவர்.

### 519—1916

1 ஶு௱ஹம ஸ்து விக்நேசாய (நம:)
2 சகாத்தம் தருாசுய ன் மேல் செ
3 ல்லா நின்ற கொல்லம் அாயங
4 ளு வெகுதானியஸஂ வைகாசிமீ
5 யரு உ பூறுவ பக்ஷத்து திசமியும்
6 சுக்கிற வாரமும் சுபயோக சுப
7 கரணமும் பெற்ற அத்த நக்ஷத்ரத்
8 து நாள் சுவாமி சிவசயிலனாத சுவ
9 ாமி உளாபூசை அபிஷேக கட்டளை
10 ராத்திரிக் கட்டளைக்கும் திருப்பணி

11 க்குமாக அன்பூர் பூவன் குறிச்சிய
12 ரன் பொதுக்குளத்துக் கீழ்கடை
13 க் கொம்பில் குடியேறியிருக்கி
14 யிருக்கிற பேர்களுக்குக் கல்வெட்டி
15 நாட்டிக் குடுத்தபடி : முள்ளி நாட்டு
16 வடமேல் பிடாகை அன்பூர் ஆழ்
17 வார் குறிச்சி சாலையி (ல்) கிருட்டிணபு
18 ரம் கடையம் உள்ளிட்ட நாட்டவ(ே)ர
19 ரம் நாகைய விசுவனாத நாயக்
20 க(ா)ரய்யன் திருமலை நாயக்க ரய்
21 ய னவர்களுக்குப் புண்ணிய மாகவும்
22 வயித்தி யப்பய்ய ராமப்பய் யரவர்களு
23 க்குப் புண்ணிய மாகவும் கிட்டினப்ப
24 ய் ய ரவர்களுக்குப் புண்ணிய மாகவும்
25 கல்வெட்டி நாட்டிக் குடுத்ததுக்கு
26 எல்லை யாவது கீள் எல்லை காவேரி
27 க் கூத்தன் குளத்தில் நக்கனுக்கு
28 மேக்கு தென்னெல்கை கிழக்கில
29 கரத்துக்கு வடக்கு மேல் எல்லை ம
30 காதேவர் நஞ்சைக்கும் பொதுக்கு
31 ளத்துக்கும் கிழக்கு வட எல்லை கரு
32 ம் பறம வயலுக்கும் பொதுக்குளம்
33 மறுகாலுக்குந் தெற்க்கு ஆக இன்ன
34 ன் கெல்கைக் குள்பட்ட நிலத்தில்
35 யாதொருவர் வீடு கெட்டிக் குடியிரு
36 ந்த பேர்களுக் குண்டான (ஏற்பா)டு
37 காருக்கு நலுபணமும் ( ) ௬ பண
38 மும் தலைச்சிமை மண்வெட்டிக் கா
39 ருக்கு சனத்துக்கு ௬....பணமு....

ஊர் : மேலாம்பூர்

இடம் : குளத்துக்கு அருகிலுள்ள ஒருகல்

521—1916

1 ௲௭௱௨௰௩௫ கார்த்திகை மாஸம் ௨௰௨ ல் இராமப்ப அய்யன் காலத்தில் பரதேச
2 சோறு விளாமல் நடந்துது. சொக்கலிங்க னாயக்கரையன் காலத்தில்

3 . அஞ்சாறு நாள் விழுந்து இருந்தது. அதை இரகுனாதகிரி தவசி சொக்கலி
4 ங்க னாயக்க ரையனோடே போய் சொல்லிப் பரதேசி சோறு கட்டளை இடுவிச்சு
5 கொண்டு வந்தார். இந்தச் சோறு பன்னிரண்டுபடி சோறும் நடக்கும்படி துருவிக்கிநம்
6 பண்ணின பேர்கள் கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற தோஷத்தில் போவாரா
7 கவும்

ஊர் : சிவசைலம்

இடம் : சிவசைலேஸ்வரர் கோயிலின் கோபுரம்.

## அனுபந்தம்—IV ✓

நீட்டு.

1 திருமலை நாயக்கர் படை கொண்டுவந்த ஏதுவாய் அாய-ம் ஆண்டு
2 கார் தரிசு விழுந்து பசானம் பயிர் ஏற்றுவான் காலப் பிற் பாடாழ்கை
3 கொண்டு மணவாரியும் சம்பாவும் அதிக்கிராவியும் விதைச்சு புழுக் கோளாய்ப்போகை
4 கொண்டும் போதரவு இல்லாழ்கை கொண்டும் நாட்டிது நோவு நொம்பிலம் ஒண்டாயி
5 மங்கல முதல் மணக்குடி வரை பெரும்பற்று தளிச்சங்கேதம் உள்ப்பட்ட நாட்டார்
6 கல்குளத்து நாம் இரிக்கின்ற இடத்து வந்து தங்கடம் பறகையில்
7 அாய-ம் ஞூ பிசானம் ஒருபூ மேல்வாரம் வேண்டாமென்று
8 பசான மேல்வாரமாய் அளக்குமாறும் செயிக இது அாய-ம் ஞூ மாசி மாசம்
9 உயஉ-ம் தியதி கல்பித்தமைக்கு இவ்வகைப்படியே மங்கல முதல் மணக்குடி
10 வரை பெரும்பற்றுத்தளி சங்கேதம் உள்ப்பட, பசானம் மேல்வாரமாக அளக்குமாறும் கல்பிச்சு
11 இச்செயிதி சொல்லி நாஞ்சிநாட்டு மங்கலம் முதல் மணக்குடி வரை பெரும் பற்று தளிச்சங்கேதம்
12 உள்ப்பட வடவகை தென்வீதி நாட்டாருக்கு நீட்டு எழுதிவிடுக என்று திருவுள்ள மாய நீட்டு.

(முதலியார் ஓலைகள் 82, பக். 59)

## அனுபந்தம்—V

### தாம்பிரசாசனம்

ஸ்வஸ்திஸ்ரீ ராஜாதிராஜன், ராஜபரமேஸ்வரன், ராஜமார்த்தாண்டன், ராஜகாண்டீபன், ராஜகேசரி, ராஜராமகேசரி மன்னர் மண்டலேஸ்வரன் துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனம் செய்யும் மகுட மன்மத சுகுட சுத்த விருதுஷ்ட்ட நிஷ்ட்டுர கோஷ்ட்ட கோலாகலன், விகுடமிடு மருவலர்கள் மகுடமுடி திருகிவிழ விருதுகங்கணம் கட்டும் வீரப்பிரதாபன், மும்முறசறையும் முத்தமிழ் விநோதன், தவநெறியுள்ளவன், சத்தியவாசகன், சிவநெறிதழைக்க திருநீறுமிட்டவன், சொக்கநாதருக்கு முக்கியகுணவான், கச்சியிலதிபன், உச்சிதபோஜன், அச்சுத அரியின் மெச்சியபாலன், வங்கிநாராயணன், மருவலர்கள் கண்டன்.

ஸ்ரீமது கச்சித் திருமலைநாயக்கரவர்கள் தளவாயாகிய ம-ா-ா-ஸ்ரீ ராமப்பய்யர் அவர்கள் சாலியவாகன சகாப்தம் 1366 கலியுகசகாப்தம் 4578-க்கு மேல் செல்லாநின்ற ஸ்ரீமுகவருஷம் தை-மீ 16-உ பூர்வபக்ஷம் சப்தமியும் ரோகணி நக்ஷத்திரமும் சோமவாரமும் சுபநாமயோகமும் பத்திரவா கரணமும் பெற்ற சுபதினத்தில் தாம்பூரசாசனபட்டயம் பிரப்பிவைத்தபடி தாம்பூரசாசனமாவது:— ஸ்ரீ தெண்டாயுதக் கடவுளாருக்கு அஷ்டபந்தனம் செய்துவைக்கும் முன்னிலைக்கி இந்தஸ்தலம் போகர்வாடையாய் புலிப்பாணி பாத்திர சுவாமியார் பூஜைசெய்து வந்தபடியினாலே இப்போது ராமப்ப அய்யர் அவர்கள் அவர்கையினாலே தீர்த்தப்பிரசாதம் வாங்கக்கூடாதென்று நினைத்து பாளையகாரரும் ராமப்ப அய்யர் அவர்களும் புலிப்பாணி பாத்திர சுவாமிகள் மனது சம்மதப்படுத்தி அவருடைய பூஜை மிருசுக்கு குமாஸ்தாவாக பூசைபரிசாரகத்துக்கும் கொங்குதேசத்திலிருந்து கொடுமுடி சரஸ்வதி அய்யன் 1, மருதூர் தம்பாவையன் 2, நாட்டார அய்யன் கோவில் சுப்பய்யன் 3, கரூர் முத்தய்யன் 4, கடம்பர் கோவில் அகிலாண்டைய்யன் 5 இவர்களை பாளையக்காரர் அவர்கள் வரவழைத்துக் கொடிமுடி சரஸ்வதி அய்யனை குருக்களாகவும், மைத்தநால்வரை பூசைப்பரிசாரகம் நம்பிமார்களாகவும் நியமித்து பூர்வாபூர்வமாய் தெண்டாயுதக்கடவுளாருக்கு பூஜைகள் செய்து கொண்டுவந்த புலிப்பாணி பாத்திர உடையாருக்கு தெண்டாயுதபாணிக் கடவுளாருக்கு அபிஷேகமாகி நம்பிமார்களுக்கு வரப்பட்ட நிர்மால்யம் சொர்ணபுஷ்பங்களில் கால்ப்பங்கு கொடுத்துவரும்படியாயும், மூலஸ்தானமாகிய துர்க்கையம்மன் மரகதலிங்கம் வலம்புரிச்சங்கு முதலாகிய வாலை புவனை திரிபுரைக்கும் பூசனைசெய்துகொண்டு நவராத்திரி பூசையும் செய்து பிரதமை முதல் தசமி வரையில் மூணு பட்டுப்பரிவட்டமும் கட்டிக்கொண்டு தேவதா மரியாதைகளுடன் அம்புபோட்டுக்கொண்டு வருகிறதும் பண்டாரங்கள், இருபத்திநாலுபேர்களும் மாமூல் வழக்கப்படிக்கி திருமஞ்சனம், மாலை சந்தனம், வில்வம்வகையறு பள்ளியறை கட்டியம் ஓதுவார்,

கந்தப்புராணம், திருப்புகழ், திருவலகு, சட்டக்கால், தூபக்கால், பரிவட்டம் துவைக்கிறது, கொல்லச்சேவகம், உபயதிருமஞ்சனம் வகையறு கட்டளை இதுமுதலானதெல்லாம் எண்ணெணைக்கும் மாமூலாய் பண்டாரங்களைப் பணிவிடை செய்துகொண்டுவரும்படியாய் கட்டளையிட்டிருக்கிறோம். பூர்வாபூர்வமாய் இந்தஸ்தலம் புலிப்பாணி பாத்திர உடையாரைச்சார்ந்தது. சிவப்பிராமணாள் ஐந்துபேர்களுக்கும் இது காரணஸ்தலமானபடியால் விருமநம்பி விசயநம்பி வாலநம்பி கோசலநம்பி என்று நாமகரணமிட்டு கொடுமுடி சரஸ்வதி அய்யனை கலசஸ்தாபிதம் தவறுஜபண்டிதர் என்றும் காரணப்பெயரிட்டு காயாசம் பஞ்சகொத்துதாவடமும் கொடுத்து நன்மை தின்மைகளில் புலிப்பாணிபாத்திர உடையார் ஆதீனத்துக்கு நடக்கிற ஆறுகால்பீடம் அபிஷேக மரியாதைகளில் சில மரியாதையும், கொடுமுடிக் குருக்களுக்குக் கொடுத்து சுவாமி காரியங்களில் யாதொரு விச்சின்னம் வராதபடிக்கு புலிப்பாணி பாத்திர உடையாருக்கு முன்பாக பண்டாரங்களையும் நம்பிமார்களையும் வரவழைத்து நம்பிக்கை வாங்கிக்கொடுத்து இவர்களுக்கும் கோவில் வேலைக்காரர்களுக்கும் புலிப்பாணி பாத்திர உடையாரை மேல்விசாரணை செய்துகொண்டுவரும்படிக்கும் சுவாமி நிவேதனம் புண்யாவாசனம் பிறுமணாளக்கொண்டு செய்துவரும்படியாயும், நவறாத்திரி பூஜைக்காக புலிப்பாணி பாத்திர உடையாருக்கு இருபத்திநாலு பொன்னும் பனிரண்டு சலகை நெல்லும் அதற்குவேண்டிய ஜாமான்களும் கோவிலில் இருந்து கொடுத்துவரும்படியும் திட்டம் செய்திருக்கிறோம். மலைக்கோவிலில் அம்மனுக்குச் சாத்துபடிக்கு பரிவட்டமும், ஊர்க்கோவிலில் அம்மனுக்குச் சாத்துப்படிக்கு பாவாடை பட்டுகள், அஸ்மானகிரி, குத்துவிளக்கு, சரவிளக்கு மணி, தட்டம், தீபமுஸ்திதிகள் கொடுத்து அம்புபோட்ட பிறகு வாங்கிக்கொள்ளுகிறது: இந்தப்பிரகாரம் எண்ணெணைக்கும் சந்திராள் சூரியாள் கல்லுங்காவேரி புல்லும்பூமியும் உள்ளவரைக்கும் நடந்துவரும்படியாய் கட்டளையிட்டிருக்கிறோம். இந்த தர்மத்திற்கு யாதாமொருவர் வாக்குச்சகாயம் மனச்சகாயம் சரீரசகாயம் அர்த்தசகாயம் பண்ணினபேர்களுக்கு காசியில் கெங்கைக்கரையிலே கோடி சிவலிங்க பிரதிஷ்டை பண்ணின பூசாபலத்தைப் பெறுவார்களாகவும். இதற்கு விகாதம் பண்ணினபேர்கள் கெங்கைக்கரையிலே காராம்பசுவைக் கொன்ற தோஷத்தில் போவார்களாகவும்.

இந்தப்படிக்கி எழுதின நண்மை பழனியில் கந்தசாமி ஆசாரி.

இந்தப்படிக்கி மகா-ா-ா-ஸ்ரீ

தளவாய் ராமப்ப அய்யர் அவர்கள் (மூகர்.)

---

* இந்தச் சாசனத்தில் கொடுத்துள்ள காலம் பிழை. ஆதலால் இது போலிச் சாசனம் என்று தோன்றுகிறது.

## அனுபந்தம்—VI

### இரவிக்குட்டிப்பிள்ளை போர்

விருத்தம்

1. பண்டுபோல் வஞ்சி வேந்தர் பண்புடன் கல்க்குளத்தில்
அண்டர்கோ மானைப்போற்றி அவனியாண் டிருக்குநாளில்
திண்டாடி ராமப்பய்யன் சேனைகள் தட்டழிந்து
இண்டுசேர் பணகுடியில் இருந்துசே கரித்தார் தாமே.

வேறு

[இராமப்பய்யன் படை திரட்டிநிற்க, வஞ்சிமன்னர் ஆலோசனை செய்தல்]

2. வந்த படையுட பெருப்ப மெல்லாம்
மன்னவனே சொல்லத் தொலையாது ;
முந்திச் சிலைராம னுடன் பொருத
முகில் வெள்ளச் சேனை இதுக்கிணையோ ?
இந்தத் திருப்பதி சாரந் தொட்டு
ஏற்க வடசேரி மட்டும் படை
தந்திப் படையோடே குதிரைப் படை
தக்க காலாளும் பரந்து நிற்க.

3. எண்ணத் தொலையாத துரைமக்களும்
எழுபத்திரண்டு பாளையக்காரரும்
திண்ணத்துடன் வந்திருக்கு நாளில்,
சேரமானைக் கண்டடி தொழுதார்.
நண்ணும் புகழ்கொண்ட இளவரசர்
நாடி அரசரும் திருவுள்ளமாய் :
கண்ணுமணியே போல் இளவரசர்
காவல ரோடே திருவுள்ளமாய் :

4. எட்டு வீட்டிலுள்ள படை பண்டாரம்
இடத்தற மாதேவன் பேர்கொண்டானும்
ஒத்துத் திரண்டங்கே கூடியொன்றாய்
உதய புரிக்கிரிக் கோட்டை கொண்டார்.

5. மாற்றா னெதிர்வந்து பொருவ தல்லால்
மாபாவி யவனோடே எதிர்ப்பதுண்டோ ?
முற்று மொருவாறுக் கொடுப்பையானால்
முழுது மொருபடை கண்டறியோம்.

6. உற்ற புரவியும் காலாளும்
உங்கள் வசங்காணும், மந்திரியே!
வெற்றி நமக்கொன்று மிகவேண்டாம்;
வேண்டும் படையுண்டு புலியூரில் ;
பத்தியுடன் சென்றங் கிருப்பதுக்குப்
பாளையங்கள் நன்றாய்ச் சேகரித்தார்.

வேறு

[வஞ்சிமன்னரின் மந்திரிமார்கள் சிலர் உள்ளாலோசனை செய்தல்]

7. பாளையங்கள் புலியூர்க்குறிச்சியில்
பாரரசர் பரிகலத்தோ ரெல்லாம்
வேளையத்துடன் தாமங் கிருக்கவே,
வேந்தர் மந்திரி மார்களில் ஏழுபேர்
நாளைப் போருண்டதுக்கினி எப்படி
நாமள் ஏழுபேர் ஒன்றாகக் கூடியே
சாளையங்கள் வாராமல் நிருவித்துச்
சமுசாரித் தொருமொழி கொள்ளுவோம்.

8. என்று சங்குக் கொடிவீரன் கேசவன்
ஏற்ற வீட்டினில் எல்லோருங் கூடியே
வென்றி யாலே திருமலை நாயக்கன்
வேலய்யன்போல் ஒருதுரை தன்னையும்
கொன்றல் லாமலே ராமப்பய் யன்நம்மைக்
கோட்டைக்குள்ளே இருக்கவும் ஒட்டானே

9. எல்லா பேருமிதுக் கெப்படிப் புத்தியென்
றெண்ணி யெண்ணி விசாரித்துக் கொள்ளுவோம் ;
வல்லவ னிரவிக் குட்டிப்பிள்ளையை
மாற்றான் போரில் இறக்கிக் கொடுப்பமே ;
நில்லா மல்ப்பின் னணிவிட்டு வாங்கியே
நிற்கும் போதில் குதிரைப் படைவந்து
சல்லியமாய் வளைந்துகொண்டு பிள்ளையை
தலையையுங் கொடுபோனால் படையில்லை.

10. இந்தச் செய்திக்குள் ளோலை எழுதியே
இராமப் பய்யனுக்கே கொடுத்துவிட்டார்.
விந்தை யாலிந்தக் காரியம் ஆமல்லோ
வேந்தர் தானும் அறிய வொண்ணாதுகாண்.

சிந்தை அந்த மொழிகேட் டடக்கியே
திட்டென முகங்காட்டப் புறப்பட்டார் ;
வந்துகூடி எல்லோரும் ஒருமித்து
மன்னவரைச் சென்று முகங்காட்டினர்.

11. எந்தன் மந்திரிமாரே அழைத்தல்லோ
இராமப்பய்யன் படைக்காக வாறானே ;

12. கோட்டைதன்னை அடைத்திருந்தாலுமே
கூன்ற தேசத்தை நிற்தூளி யாக்குவான் ;
வாட்டமில்லா வடுகப் படையொடே
மந்திரிமாரே நீங்கள் எல்லாபேரும்
சேட்ட மாகவே கட்டிச் சமைந்தல்லோ
செல்லவேணும் இடங்கை வலங்கைக்கே.

13. நாணயத் தால் இடங்கை வலங்கைக்கு
நாமள் செல்லுவோம் நெற்றிக்கைக் காளில்லை.

[உள்ளாலோசனை யறியாது இரவி நெற்றிக்கைக்குப்போக உடன்படுதல்]

14. என்று மந்திரிமார்கள் உரைத்திட
இரவிப் பிள்ளையும் தானேது சொல்லுவார் :
சொன்ன நெற்றிக்கை தன்னிலே நான்போறேன்
துங்க வஞ்சிக் கரையா எனச் சொல,

15. சேரமானைத் தொழுது விடைகொண்டு
சிறந்த மந்திரி மார்கள் திரும்பினர்.
வார மானவர் தங்கள் தங்கள் வீட்டில்
வந்திருந் தாரே சிந்தைக் களிப்பொடே ;
வீர சூரன் இடத்தறத் தேவனும்
வெற்றியான மடத்தி லிருந்நல்லோ ;
ஏரிளம் பயில் மார்த்தாண்ட வர்மரும்
இணங்கும் கோவிக்கல் தன்னில் இருந்தாரே.

## விருத்தம்

16. இருந்தபோ திவர்க ளெல்லாம் எழுத்துமுன் கொடுத்துவிட்டுத்
திருந்தவே ஓலைதன்னைச் சென்றுரா மய்யன் கையில்
பொருந்தவே கொடுத்தா னேட்டன் புகழ்பெற்ற கணக்கர் வாங்கி
வருத்தமாய் இந்தஓலை வாசகம் உரைக்க லுற்றான் :

17. உரத்தினால் நாங்க ளெல்லாம் உதிக்குமுன் படைக்கு வாரோம்
பொருத்தமாய் நெற்றிக் கைக்குப் போரவாற துரையை நீங்கள்
விருப்பமாய் வாளைக்கொண்டு விரைவுடன் சதியதாகத்
திருத்தமாய்த் தலையைக் கொண்டு சீக்கிரம் போவீரென்றார்.

வேறு

[இரவியின் தாயார் கனவு காணுதலும், அவரைப் போர்க்குச்
செல்லவேண்டாமென்று தடுத்தலும்]

18. என்ற வார்த்தை கேட்ட போதே
இராமய்யனும் மனமகிழ்ந்து
நன்றெனவே அங்கிருக்க
நல்ல துரை இரவிப்பிள்ளை
அன்று படை புறப்படுமுன்
அவருடைய தாயாரும்
கன்றி மனங் கலங்கிடவே
கனவுகண்டாள் அன்றிரவு.

19. இரவுவிடிந் தெழுந்திருந்து
எல்லோரும் உண்டொருங்கிப்
பொருவதுக்குத் துரைகளெல்லாம்
போர்க்கோலஞ் சமைந்தனராம்
கருணையுற்ற பரிகலத்தோர்
கட்டிச் சமைந்தவர்கள் வாறார்
தெருவீதி தன்னிலவர்
சேகரமாய் நின்றிடவும்

20. மல்லாரும் திண்புசத்தோன்
மாதாவும் ஏதுசொல்வார்
எல்லாரும் படைக்காக
எழுந்தருளி வாறதுக்குப்
பொல்லாத காரியங்காண்
போர்வேந்தா நேற்றிரவு
வல்லாத கனவு கண்டேன்
வரும் பலங்கள் எப்படியோ?

21. என்மகனே என்இரவி
இன்று படை போகவேண்டாம்
கன்மவினை பொல்லாது
கனவுகண்ட சொப்பனங்கேள் :

22. வாதுக்கல் நீராழி
வரம்பிடிந்து விழவுங் கண்டேன்.
தாதுற்ற பூங்குழலாள்
தலைவிரித்து நின்றிடவும்

மோதித் தலைசாய்த்து
முறைவிளி கொண்டிடவும்
சாதித்த வாணுதலாள்
தக்ககுரல் ஆலோலம்.

23. ஆலமரம் மூட்டோடே
அடிநகண்டு விழுந்திடவும்
பாலிலைமேல் பள்ளிகொண்ட
பச்சைமுகில் வருணருட
நீலநிற மேனி யெல்லாம்
நீர்விசர்ப்புச் சிந்திடவும்
கோலவிழி கனல்சொரிந்து
கூந்தலதிற் பற்றிடவும்

24. கொந்தலரும் இலங்கமதில்
கூவையிருந் தழுதிடவும்
விந்தையுள்ள நம்பியற்கு
விரலாழி முரிந்திடவும்
சந்தமுள்ள தண்டியலில்
தார்வேந்தர் எழுந்தருளச்
சுந்தரஞ்சேர் கொம்பிரண்டும்
துண்டமிடக் கண்டேன்.

25. கூவையிருந் தழுவதெல்லாம்
கூற்றுவன்காண், என்னிரவி

26. கூற்றுவனோ? மாற்றானோ?
கொல்லவந்த சத்துருவோ?
27. பந்தியிலே கட்டிநின்ற
பரியினோடு தண்டுவெட்டிப்
புந்தியினுல் உள்புகுந்து
மறவர்கொடு போகக்கண்டேன்.

28. திரளானை கூட்டமிட்டுச்
சிங்கம்பற்றிக் கொல்லக்கண்டேன்;
ஒருபுலியை ஆட்டுத்திரள்
ஓதுங்கிப்பற்றிக் கொல்லக்கண்டேன்.

29. கல்க்குளத்தில் மகாதேவர்
கடியதொரு திருநாளில்
ஆறாந் திருநாளில்
அவுணர்கழு ஏறக்கண்டேன்;

ஏழாந் திருநாளில்
எருதுமேலே நடந்திடுமாம்;
எட்டாந் திருநாளில் தேர்
தட்டுமுட்டா யலங்கரித்தார்;
ஒன்பதாந் திருநாளில்
உடையவரும் தேரேறி
பத்தாந் திருநாளில்
பவனிவரக் கண்டேனன்.

30. தேரோடி வலத்துவரத்
தென்னவனார் பவனிவர,
திருநீல கண்டருட
தெற்குத்தெரு வீதியிலே

31. கண்டவர்கள் கொண்டாடக்
கதிர்மையுடன் ஓடிவரும்
வண்டிநாலும் ஒருப்போலே
வசங்களது தான்திரிந்து

32. திரிந்தவண்டி தான்முறிந்து
தேரினுட இருபுறமும்
பொருந்தியிடும் அச்சுக்களும்
பொடுபொடென அந்நேரம்

33. நெரிந்திடவே பணிகளெல்லாம்
நெறுநெறெனவே தெறிக்க
சரிந்திடவே தேரதுதான்
சாய்ந்து வரும்பொழுதே

34. தலையலங்காரம் முறிந்து
தாழிக்குடம் உடையக்கண்டேன்.
அலைகடலில் விட்ட உரு
அடிநகண்டு போயிடவும்
விலைமதியா ஆபரணம்
மேலிருந்த நவமணிகள்
பலதுமொருப் போலுதிர்ந்து
பாழாகக் கண்டேனன்.

35. வென்றுபுவி யாண்டதொரு
விறல்வழுதி மன்னவரும்
சென்றறிவிக்க விட்டிடுகில்
திருவுளங்கள் தந்திடுவார்

என்றுசொல்லியே விலகி
இருந்திடவே காரியங்காண்.

36. கண்டகனு அத்தனையும்
காவலரே பொல்லாது
பொல்லாத கனுவுகண்டேன்
போகவேண்டாம் நீர்படைக்கு.

[இரவியின் மறுமொழி]

37. தாயாரே, வாரும் அம்மா
தடுத்துமொழி சொல்லாதே
எங்கேதான் போனாலும்
எழுதினவிதி தப்பாது
அங்கிருந்தால் வாறவினை
இங்கிருந்தால் வாறாதோ
வாறவிதி எங்கிருந்தால்
வந்திடுங்காண், மாதாவே!

38. மார்த்தாண்ட மன்னர்வஞ்சி
மாராசர் இந்நாளில்
காத்தாண்ட புவியிலுள்ளோர்
காவலவர் மந்திரிமார்
சேர்த்தாண்ட கரிபரியும்
சேருவர்கள் உடன்கூட்டி
மார்த்தாண்டப் பிள்ளையண்ணர்
மாமனல்லோ படைபோறார்.

39. மாமனுட படைப்போரை
மாதாவே நானும் பார்த்து வாறேன்
காமனைக் கண்ணு லெரித்த
கங்காளர் தம்மாணை
நாமொருநாள் விடுவதில்லை
நல்லவடுகப் படைக்கு
சோமகுலத் தருளாலே
துரத்திடுவேன், தாயாரே!

[இரவியின் மனைவியிடம் தாயார் கூறுதல்]

40. தாயார் சொல் முசியாமல் (அந்தத்)
தார்குழலை ஏவி விட்டாள்
மாயமதால் படை யெடுத்து
வந்திருக்கும் ஐயனுடன்
ஐயனுடன் பொருவதுக்கு
ஆணழகன் படைபோறார்.

41. வாடியெந்தன் பூங்குழலே
மாமதுர மொழியாளே
தேடியவர் கொண்டாடும்
தேன்மொழியே எந்நாளும்
பேடியொன்று மில்லாமல்
பெரியதுரை வன்னியரும்
கூடி விடை ஏகியுடன்
கொற்றவனார் படை போரார்.

[மனைவி இரவியிடஞ் சென்று தடுத்தல்]

42. படைபோரார் என்ற சத்தம்
பைந்தொடியாள் கேட்டவுடன்
மடவார்கள் முகம்நோக்கி
மங்கை நல்லாள் ஏதுசொல்வாள்
உடையவன் தன் கல்பனையோ
ஊழ்விதி இப்படியோ
தடைவு செய்வேன் இன்றிவரைத்
தக்கபடை போவதுக்கு

43. விடுவதில்லை யென்று சொல்லி
மெல்லியர்கள் பணியணிந்தார்
கடுகடுத்து விழிசிவந்து
கனல்சொரியும் அப்படியே
சடுதியவள் துகிலுடுத்துத்
தாதியர்கள் தம்மோடே
கெடுதிவரும் என்று சொல்லிக்
கிஞ்சுகத்தின் சிலம்புகொஞ்ச

44. கொஞ்சு சிலம்பொலி நடையாள்
கொடியிடையாள் புறப்படவே
மிஞ்சுதனக் குடமசைய
மெல்லிநல்லாள் அப்பொழுதே
சஞ்சுகம்போலே நடந்து
தாதியர்கள் தம்மோடே
வஞ்சியர்கள் வந்து நின்று
மந்திரியோ டேதுரைப்பாள் :

45. தங்களுடன் சேர்ந்திருந்த
தார்வேந்தர்க் கனுகூலால்,
பொண்களுடன் இணைசேர்ந்த
போர்வேந்தர் நாயகமே !

திங்களைப்போல் அழகான
செயல்வீரப் பெருமாளே !
மங்கை நல்லாள் இங்கிருக்க
மணவாளர் படை போவார்களோ ?

46. இந்து நுதல்ப் பெண்கொடியாள்
ஏந்திழையாள் தனிச்சிருக்க,
பந்துமுலை யாளிருக்கப்
படைபோகக் காரணமேன்?
வெந்தமுள்ளார் தான்விலக்க
விடையேகக் கூடாது
அந்தமொழி தனையுரைத்து
ஆயிழையும் ஏதுசொல்வாள் :

[மனைவி தான் கனக்கண்டதை யுரைத்தல்]

47. நேற்றிரவு பஞ்சணைமேல்
நித்திரையாய் உறங்கையிலே
பார்த்திருக்கச் சனியன்வந்து
பர்த்தாவைக்கொடு போகக்கண்டேன் ;
காத்திருந்த சேவுகர்கள்
கையிலுடை வாளுருவி
நேர்த்தவர்கள் தங்களிலே
நிணமணியக் கண்டேனுன்.

48. ஏனமுடன் சரக்கறையில்
இருந்ததொரு கருவலங்கள்
கானவர்கள் கொடுபோகக்
கண்டேனுன், என்துரையே !

49. முன்வாயில் முத்துதிர்ந்து
முந்தியில் முடியக்கண்டேன் ;
பொன்னினிற மெத்தையிலே
புகையெழும்பக் கண்டேனுன் ;
என்னுடைய மங்கிலியம்
இழைபெருகி விழவுங் கண்டேன் ;
தன்னிட்டமாய் நீர்களத்தில்
தடுமாறி நிற்கக்கண்டேன்.

50. பொன்னு மூட்டிட்ட உடைவாளும்
புலித்தோல்ப் பரிசையுமாய்த்
தன்னிட்டமாய் நீர்களத்தில்
தடுமாறி நிற்கக்கண்டேன்.

51. உடைவாளும் பரிசையுமாய்
உக்கடத்தில் சாடக்கண்டேன்.

52. மந்திரிமார் வளையக்கண்டேன்;
மறவர் வெட்டிக் கொல்லக்கண்டேன்.

53. கண்டிதமாய் வடமலையில்
கடுப்பமதாய் வேடர்வந்து
மண்டிஒரு சேகரமாய்
மனைபுகுந்து கொல்லக்கண்டேன்.

54. கண்டகனு அத்தனையும் (என்னுடைய)
காவலா பொல்லாது.

55. பொல்லாத கனவுகண்டேன்;
போகவேண்டாம் நீர்படைக்கு.

56. வென்றியுடன் இணைசேர்ந்த
மெய்ப்புடைய மந்திரியே!
இன்றுபடை போகாதே யென்று
ஏந்திழையாள் விலக்கிடுவாள்.

[இரவியின் மறுமொழியும் உறுதிப் பாடும்]

57. அன்பி னுடனே விலக்கும்
ஆயிழையாள் முகம் நோக்கி
இன்ப முடன் ஏது சொல்வார்
இரவிப் பிள்ளை அந்நேரம்:
தன்பமுடன் உலகை யாண்ட
தார்வேந்தர் அருளாலே
என்தரத்தில் மந்திரிமார்
எல்லோரும் படை போமுர்.

58. இன்றுபடை போகா விட்டால்
இரவிகுலத் திழுக்கல்லவோ?
வென்றிபுவி யாண்டதொரு
விறல் வழுதி மன்னவனே
நன்றியுள்ள மந்திரிமார்
நல்லதொரு சேகுவர்கள்
இன்று என்னை நகையாரோ?
ஏந்திழையே! எந்நாளும்.

59. எழுகடலுக் கப்புறத்தே
இரும்பறைக்குள் இருந்தாலும்,
எமதூதருட ஆள்வந்தால்
இல்லையென்றால் போவார்களோ?

60. கல்லறையுங் கட்டிவைத்துக்
கல்லறைக்குள் இருந்தாலும்,
காலனுட ஆள் வந்தால்
கண்டிலேன் என்றால் போவார்களோ ?

61. நல்ல தெல்லாம் சொல்லுகிறேன்
நாயகமே ! விலக்காதே
தொல்லை சொல்லக் கூடாது
தோகையரே வாறவிதி

62. வாறவிதி எங்கிருந்தும்
வந்திடுங்காண், மெல்லியரே !
போறவரை விலக்காதே,
பொன்னினிய நிறத்தாளே !
சீறிமொழி சொல்லாதே,
தேன்மொழியே ! போய்வாடி

விருத்தம்

63. என்றுதான் இரவிப்பிள்ளை இருவிழி சிவந்து சொல்லி ;
கன்றியே மனது நொந்து காரிகை அழுது விம்மி
வென்றியால் நின்றாள் ; அந்த மெல்லியல் தன்னைநோக்கி
இன்றுநீர் புறப்ப டென்று இருக்குமந் நேரந் தன்னில்.

வேறு

[தாயார் மீண்டுந் தடுத்தல் : இரவி நீராடுதல்]

64. அந்த நேரம் இரவிக் குட்டிப் பிள்ளை
ஆல கால விழம்போலே கோவித்தார்;
சந்தணம் அரைக்கச் செறுக்கன் போகச்
சடுதி தன்னில் அமிர் தாகட்டும் என்றார்.
வெந்தெழுந்த உலையில் மெழுகுபோல்
விரைந் தோடியே தாயாரும் முனஞ்சொல்வாள்
சிந்தை நொந்து தளர்ந்தங் குருகியே
செல்வனே பட்ட பாடொன்று சொல்வன் நான்.

65. பாடு பட்டாலும் என்னால் முடியாது;
பைந்தொடி சொல்லைக் கேளாமல் போவாரோ?
நாடு வாழும் அரசர்தங் கல்ப்பனை
... ... ....

66. கைப் பிடித்தங் கழுது முறையிட்டே
கண்ணரசே ! படைக் கின்று போகாதே,
அய்யன் ஆணை படைபோகி லென்துயர்
ஆறிடா தொரு போதும் அடங்காது.

67. என்னழகா ! என்குடிக் கரசே !
என்னழகா ! என்னைச் சதித்து நீ போகாதே.
தன்வினையை அறியாமல் பிள்ளையும்
சந்தோழ மாக நீராடச் சென்றாராம்.

68. நீராடி யுடன் கரைதனில் ஏறியே
நீல கண்டா சரணெனத் தொழுதார்.
பாரப் பட்ட மரத்தில் இருந்தல்லோ
பல்லி வந்து வலத்தோளி லே விழ

[பல்லி வலத்தோளில் விழுதலும் இரவி திரும்ப நீ ராடுதலும்]

69. கட்டம் இங்ஙனே அல்லயோ ! லக்ஷணம் !
கண்ட தெல்லாம் பிழை என்று பல்லியைத்
தொட்ட நல்ல குறிபலம் பொல்லாது
சோபை யாகத் திரும்ப நீ ராடினார்.

70. திரும்பச் சென்று நீ ராடிய பிள்ளையும்
சிவனாரே ! சரணமெனச் சொன்னார்.
கரும்பின் மொழியாளே ! என்செல்வியே !
காத்து ரக்ஷிக்க வேணும் என் தாயே !
பத்திரமா காளி சரண மென்று
பாரிலங்கந் தனில் புகுந்தார் பிள்ளையும்.

வேறு

[பத்திரகாளியை வணங்கித் துணை வேண்டுதல்]

71. நின்றார் இலங்கந் தன்னில்
நீதி தவறாத பிள்ளை
நித்திய கல்யாண னொடு செல்லவே, தெய்வப்
பத்திர மாகாளித் தாயே !

72. மன்று புகழ் வாளிரவி
இன்று படை போறேனம்மா
மனமது தான் மெய்த்துத் தர வேணுமே
வந்துடனே காத்து ரக்ஷிப்பாயே
வாய்த்த தொரு பத்திரமா காளியே !

73. சுந்தரி பசுங்கிளியே !
சூலி பத்ர மாகாளி !
அடர்ந்து தாருகனை வென்ற தாயே ! ஈ
சுவரி எனக்கு வந்துதவாய் அம்மா !

74. சென்று நாடு மேவி வளர்
வஞ்சி பாரா சருமோ

சீறிக் கொண்டே அவர்பிறகே வாறார்
திருமலை நாயக்கன்படை சேர

75. ஒன்றாகவே இரண்டு
வந்து கூளப் பாளயங்கள்
உண்டைகள் பீரங்கி குழல் வண்டியும்

76. சேனைபடை சூழ்ந்து வாற
வஞ்சி பரராசருமோ
செப்பும்புகழ் மந்திரிமாரோடே
சிறந்தபடை தோட்டிபொரு வாணாய்

77. ஆணகுதி ரைத்திரளும்
சேகுவரு மாகச் சென்று
அய்யன் ராமப் பய்யனோ டெதிர்த்துடன்
அழகினோடு தோட்டிபொரு மென்று

78. தோட்டிபொரு மென்ற செய்தி
கேட்டுடனே மந்திரிமார்
சோபையான மன்னவர்தன் னோடு
துணிந்து வீரரென்றறிவித் தாராம்.

79. வாட்டவம்பு முதல் கைக்கும்
மாடசேரி கைதனக்கும்
வழிமேல்•செறுத்துப்போரப் போறோம்
மன்னவரே நெற்றிக் கைக்கா ளில்லை.

80. அப்படி அவருரைக்க
வஞ்சி பர ராசரோடு
ஆளில் நெற்றிக்கைக் கடியேன் போறேன்
படை போக விடைதாரு மன்னா!

81. இப்படி மொழிகொடுத்தேன்
உன்னுட அருளினாலே
இடர்க ளொன்றும் வாராமல் ரக்ஷிப்பாய்
ஈசுவரி யெனக்குதவ வேணுமே.

82. அலங்கார மாய்ப்பொருது
மீண்டுநான் வரும்பொழுது
அன்று தங்கத் தாலே சூலங் கொண்டு
அப்படி அடிபுறைகள் வைப்பன் நான்.

83. மலங்காத வண்ணமிந்தத்
தாருகனோடே பொருது
வாள்கரத்தில் சூலமது கொண்டுடன்
வாய்த்ததொரு பத்திரமா காளியே!

84. அரனார் திருநயனந்
தன்னிலே யுதித்தல் செய்து
அழகுடனே தாருகனை வென்றதும்
அம்ம பத்திர காளியும் நீ யல்லவோ!

85. புரகரியே தாயே தேவி!
துணைக்க வேணு மென்னை யென்று
போற்றியே நடந்திரவிப் பிள்ளையும்
புகழினொடு இருக்குமந்த நாளிலே

86. இப்படி நினைந்து கொண்டு
இரவிக் குட்டிப் பிள்ளை தானும்
இதமாகச் செல்லுமந்த வேளையில்
காதலுடன் செறுக்க னங்கே செல்லவே

வேறு

[சந்தனக்கிண்ணம் கவிழ்தலும் இரவி சஞ்சலப்படுதலும்]

87. அரைத்துக் கொடுவந்த சிறுகிண்ணிச் சந்தணம்
அடித்துக் கழுத்தினாற் போலவே கீழ்விழ
மனத்தில் சில பீடைகள் வைத்தல்லோ பிள்ளையும்
வாள்வீரனிரவி தொட்டுக்குறி யிட்டுடன்

88. நெற்றி தன்னிலே நீறும் அணிந்துடன்
நீல கண்டா சரணமெனச் சொன்னார்.

[இடைக்கட்டில் இரவிஉண்ணும் அன்னத்தில் தலைமுடி காணுதல்: தாயார் தடுத்தல்]

89. கஸ்தூரி நல்ல பொட்டதும் இட்டுடன்
கன்னி பத்திரகாளி சரணமென்றே
விஸ்தாரத் துடனே துகில் மாறியே
வீரன் போகி யிடைக்கட்டு தன்னிலே

90. வந்திருந்தார் இடைக்கட்டு தன்னிலே
மங்கை நல்லாள் அமிர்து கொடுவைக்கத்
தந்திரத்தால் அமிர்தொரு வட்டமாய்த்
தக்கதோர் கையினால் நின்றரைத்துடன்

91. நன்னயத்தோ டிரவிக்குட்டிப் பிள்ளை
நல்லதோர் அமிர்துண்ணும் படிக்காக
முன்னெடுத்த அமிர்தது தன்னிலே
முல்லைப் பூமலர் போலே தலைநாரும்

92. கண்ட போதம்ம தாயார் மலங்கியே
காரிய மொன்றும் நலமில்லை காணுமே;

தென்றல் சூழும் மடவார்கள் கண்டதோர்
தெரிசனம் ஒன்றும் பொல்லாது காணுமே.

93. பக்க நாளும் பகைநாளும் பொல்லாது
பாவியோனே ! படைக்கின்று போகாதே.
துக்கமில்லை படைக்கின்று போனுக்கால்
துணிந்தெத்தி யவருயிர் போக்குவேன்.

[வேறு அன்னம் உண்டு இரவி யுத்தஸந்நத்தனாதல்]

94. என்று சொல்லி இரவிக்குட்டிப் பிள்ளை
ஏந்திழையாள் முகமது நோக்கவே
அன்றவள் வேறே யன்னங் கொண்டு வைத்திட
அன்பி னுண்ணத் தாயார் புலம்பிட

95. கேட்ட தெல்லாம் மனத்தி லடக்கியே
கிறுபை யோடே அமிர்துண் டிள்கினர் ;
நாட்ட மாகவே கய்யும் விளக்கியே
நல்ல சல்லடம் மேல்கச்சை கட்டினர்.

96. பூசினரே புழுகொடு சவ்வாது
பூந்தளிர்க் கச்சை மீதி லணிந்துடன்
தாசி யோடே முடுக்காய் நலபணி
சந்திர மாலை பதக்கம் பலவகை

97. பணியா மாபர ணங்களு மிட்டுடன்
பாரப் புள்ளி யுறுமால் அணிந்தனர் ;
அணிவாராம் புழுகு சவ்வாதுடன்
ஆன நல்லதோர் சந்திர காவியும்

98. சந்திர காவி சமுதாடு மீதிட்டார்
தட்ட ழிந்தா லவிழ்ந்து விழாமலே
இந்திரனுக் கிணையது போலவே
சந்திரன் வந்துதித்தது போலவே.

99. அந்தரம் ஒன்றும் வாறது அறியாமல்
ஆயுதம் நாலு கூட்டம் எடுப்பாராம் ;
சிந்தை மெய்க்கவே மங்கை நல்லாளுக்குச்
சிநேக முற்றுக் கருவலம் வாரியே

[இரவி தன்மனைவிக்கு வேண்டும் பொருள் கொடுத்து அவளிடம் விடை பெறுதல்]

100. சந்தோழத்தின் படியே கொடுத்தல்லோ
சாத்திரை சொல்ல வேணு மினியென்றார்.
பந்தோ டொத்த முலையாள் மனங்குளிரப்
பாரமாய பணியா பரணத் தோடே

101 கருவலங் கய்யில் கண்ட பொழுதிலே
கய்நெகிழ்த் தாளே மங்கைநல் லாளுமே
அருமையாக இணைசேர்ந்த நாயகா!
ஆணழகா! வடுகப் படையோடே

102. அந்தரம் ஒன்றும் வாராமல் நீர்சென்று
சந்தோ ஷத்தால் படைகண்டு வாருமே.

103. வாருமென்று அவள் சொன்ன பொழுதிலே
மாதாவைத் திருவடி போற்றியே

[தாயாரிடம் விடை வேண்டுதலும் அவள் வருந்தி,
காளிதேவியைத் துணைபோக வேண்டுதலும்]

104. ஏது மொன்றுங் குறையில்லைத் தாயாரே!
எப்படியும் படைகண்டு வாறேன்நான்;
நீதியா லெந்தன் ஈசுவரி யுண்டம்மே
நீல கண்டர் அருளெனவே சொன்னார்.

105. சொன்ன தப்படி; தாயார் மலங்கியே
துயர முற்றாளே பத்திர காளியும்;
என்ன காலம்? எனக்கு வருந் தொல்லை
ஏது மொன்று மறியாத என்மகனே!

106. பெருமை யாக உதித்தாள் மாகாளியே;
பேயன் அம்மே ஒருமதி இல்லையே;
அரனார் திருக்கண் ணதில் பிறந்தே
அருமையாக உதித்ததும் நீயல்லோ!

107. தேய மெச்சவே கோவலனார் சென்று
சிலம்பு விற்க விலைகூறும் நேரத்தில்
வாய்மை யாகவே கொல்வித்த பாண்டியன்
மறுபழி மீட்கக் கண்ணகி போனதும்

108. கண்ணகைக்கு உடைவாள் கொடுத்ததும்
கன்னி பத்திர காளியும் நீயல்லோ!
எண்ண மெண்ணி யிருந்துநான் வாடாமல்
இரவி யோடே படைக்குப்போ மாகாளி!

[இரவி படைக்குப் புறப்படுதல், குதிரையிற் கலணை கீழ்விழுதல்]

109. ஏவிடாமல் அடிதொழுதே பிள்ளை
இரவிப் பிள்ளை படைக்குப் புறப்பட்டார்;

சாவடியில் வருமந்த வேளையில்
தக்க வீரப் படையும் புறப்பட்டார்.

110. மங்குள்ளானும் புரவி கொடுவந்து
மல்லம் வய்த்துக் கடுவா ரிறுக்கியே
சங்கை யாக நிறுத்துப் புரவிக்கே
சந்தணம் பன்னீர் புழுகு மிட்டார்.

111. இட்ட தோர்புரவி வட்ட மிட்டுவர,
இரவிப் பிள்ளை மனமும் மெய்த்து நிற்க

112. சென்று தொட்டுப் பரிமீதி லேறியே
சிறந்த மல்லங் கலனையற்றுக் கீழ்விழ

113. வாய்த்த நல்ல பரியிது பொல்லாது
மாறியே கொடு போமெனப் பிள்ளையும்
சாய்த்த தோருடை வாள்கையில் பிடித்திட்டுத்
தக்கபே ரொருமித்துப் புறப்பட்டார்.

[பலவகைச் சகுனப் பிழைகள்]

114. நல்ல தல்லா நிமித்தப் பிழைகளும்
நாதனை கண்டதீ தென்று பிள்ளையும்
மெல்லமெல்லச் செருப்பு மீதேறியே
வீரரோடே படைக்கு நடந்தனர்.

115. நடந்து தான்தெரு வீதியிலே வர
நல்ல வேதியன் எதிர்வந்து தோன்றினன் ;
படர்ந்த ஆலிலை மேல்பள்ளி கொண்டதோர்
பச்சை மாலே சரணமெனச் சொன்னர்.

116. அழுகண்ணன் விறகொடு வள்ளியும்
அன்பினுல் கத்தி கையி லிடுக்கியே
முழுகிக் கொண்டு உருளியும் அரிசியும்
முகியாமலே ஒருகய்யில் தீயுமாய்

117. எதிரில்வந்த மறையோனைக் கண்டபின்
ஏது வந்து விடியுமோ என்பாராம்.
கருதிக் கொண்டு புலியூர்க் குறிச்சியில்
கரும்பாறையின் மாளிகை மீதிலே

[இரவி புலியூர்க்குறிச்சியில் வஞ்சியர் மன்னனைக் காணுதல்]

118. கொத்தளத்தில் பரராச தம்பிரான்
கூன்ற வீரப் படையோ டிருக்கவே
மத்தளங்கள் விருது முழங்கவே
மன்னவரைச் சென்று முகங் காட்டினர்.

விருத்தம்

[தன்னைப்போர்க்கு அனுப்பும்படி இரவிவிடை வேண்டுதல்]

119. முகமது காட்டி மந்திரி முனிந்தடி பணிந்து நின்று
பகையதால் வந்த ராமப் பய்யனை வெல்வ துக்காய்
... ... ...
சுகமுடன் அனுப்பு மென்று தொழுதுடன் நின்றார் தாமே.

[ராமப்பய்யன் தூதனுப்புதல்]

120. நின்றநாள் ராமப் பய்யன் நினைந்துடன் போருக்காக
இன்றுதான் வரவே மன்னர்க் கேகவே தூதன் தன்னை
வென்றியா யழைத்துச் சொல்வான் வேந்தர்தன் முன்னே சென்று
மன்றினி லின்று போறேன் உரைத்து நீ வருவாய் என்றார்.

வேறு

[தூதன் செல்லுதல்]

121. என்றமொழி கேட்ட போது
தூதவ னடுத்து நின்று
இரகுபா ளுகிய
மந்திரி ராமப்பய்யனை
இன்பமோ டடிதொழுது போற்றியே

122. நன்றியொடு சென்று மீண்டு
வாறேனென் றடிதொழுது
நரபதி ராகவ
தூதுவனும் அவனென்ற போல்
நடந்து சாலை வழிவிட்டு மேவியே

123. வென்றியுடன் ஓடி யோடி
சுங்கா னம்பலங் கடந்து

விரவுடன் அயிக்காணியக்
குளமானது விட்டுடன்
வீரனதி சூரனய் நடந்துடன்

124. சென்றவனும் தோட்டி யோடு
எல்லையம் பலஙு் கடந்து
சேகுவ னெரு கொடி
யாக ஓடி நடந்துடன்
சிறந்த கருப்பட்டிலும் விட்டுடன்

125. விட்டனர் தம்ம குளமும்
வில்லிட் டாலு மூடும் விட்டு
வேகமுடனே பலவழி
யோடுகுளிமக் காடதும்
விட்டுடன் ஏரிகுளமங் காயதும்

126. சட்டமாய் நடந்து தூவ
லாறுங் தெங்கறையதும்
சடுதி யவன் சாலைப்
பதியொடு நடந்துடன்
சந்தைவழி விட்டுப்புலி யூர்தன்னில்

[தூதன் புலியூர்வந்து வஞ்சிமன்னனைக்கண்டு செய்தி சொல்லுதல்]

127. இட்டமோடு சென்று கோட்டை
வாசலதில் சென்றபோதே
இவனுரென்று தடுத்தனர்
அவரைத் தொழுதே யவன்
இன்பமொடு காவலாட்குச் சொல்லினன்.

128. துட்ட ளுகும் எனது துரை
ராமப்பய்யன் ஏவிவிட்டான்
சுகமுட னரசரை
அடியிணை தொழுதறிவித்திடத்
தூதனுக வந்தவன் நான் என்றனன்.

129. என்றமொழி கேட்ட போதே
காவலாளிலே யொருத்தன்
ஏகியுடன் சென்றடி
மலர்தொழுதறிவித்தனன்
இராமப்பய்யன் விட்டானெரு தூதுவன்

130. அன்றவன் வந்தே யுரைத்த
வாக்குக் கேட் டடியேனுட
அகமது பதறி விறைச்சுது
தேகம தெங்குமே
ஆபத்துச் சரியில்லை என்ற போதிலே

131. சென்றவனைக் கொண்டுவர
வேணுமென் றரசரும்
திருவுள்ள மாகின பொழுதொரு
சேவக னோடியே
திட்டெனத் திருமுன் கொண்டு விட்டனன்.

132. விட்டா னப்பொழுது ராமப்
பய்யன் விட்ட தூதுவன்
விரவொடு முகமது காட்டி
வணங்கின பொழுதிலே
வீரன் நீ யாரென் றரசர் கல்பிக்க

133. சட்ட வட்ட முள்ள ராமப்
பய்யனுட தூதுவன்
தானெனவே அறிவித்தவன்
அழகொடு சொல்லினான்
தக்கபடை இன்று பொருதிடவே

134. திட்ட மாக்கியே வரும்படி
என்னை அனுப்பினான்
தீரன தாகிய ராமப்
பய்யன் தன்னொடு
செல்வனே எதிர்த்திடக் கூடாதென்ன

135. அட்ட னவன் படைக்கு
வீரசூர னவன்
துரபரி வீரர்க ளெதிரிட
மாட்டா ரரசனே
சொல்லி நிரந்தா லழக தென்றவன்

[தூதன் சொல்லை இரவிகேட்டு அவனைக் கொல்லமுற்படுதல்]

136. அப்படி யுரைத்த மொழி
கேட்டிரவிப் பிள்ளையும்
அதிகோ பங்க ளெழுந்திரு
விழிகள் சிவந்துடன்
ஆரடா? உரைத்தவன் நீ யாரடா?

137. இப்படி யரசர் திரு
முன்பினுரை செய்தவனை
இதமொடு கட்டி ய்டித்திரு
கையு மொடித்துடன்
எல்லா பேருங் கண்டிட அனுப்புவீர்.

138. செப்பமுட னல்லயெங்கில்
இப்போழுயிர் தன்னைவதை
செய்திட வேணுமதென்றுட
வாளெ டுத்துடன்
சீறிவந் தடுக்கத் தூதன் சொல்லினன் :

139. சொல்லி வந்தான் நல்லதொரு
மந்திரி இவரைப் போல் எ
திர்ப்பொரு தில்லென
மந்திரி ராமப்பய்யன்
திருத்திடக் கொற்றவன் பா ரிவரென்ன

140. அன்றவன் கொண்டாடி யென்னைக்
கொல்லுவா னொருவனொடு
அடவொடு பொருது திரும்புவ
தெப்படி யென்றுநான்
அறிகில னென்றே யுரைக்கப் பிள்ளையும்

141. தாமஸ மினியரு
திவனைக் கொலை செய்வேனென்று
தானுறை வாளுநகழற்றி
யெடுத்தான் வெளியிலே
தக்கதோ ரரசர் விலக்கிடினர்.

[வஞ்சிமன்னர் தடுத்துத் தூதனை மறுமொழிதந்து அனுப்புதல்]

142. நாமிவனை இப்போழ் கொலை
செய்கினுந் தடுப்பதில்லை
நலமொடு தூதுவனைக் கொலை
செய்வ திழுக்கென்றே
நல்லமொழி சொல்லி விலக்கிடினர்.

143. போரமென விடை கொடுத்துத்
தூதனைப் பொலிவு நல்கி

பொருவதி னின்றுவரும்படி
யே கல்ப் பித்திடப்
புகழினொடு தூதனடி போற்றினன்.

[தூதன்மீண்டு ராமப்பய்யனிடம் விவரங் கூறுதல்]

144. போற்றியே நடந்தவனும்
தொங்க லோட்ட மாக ஓடி
பொலிவொடு சென்று புரிந்தவ
னும் பாளயமதில்
புக்குச் சென்று ராமப்பய்ய னடிமலர்

145. ஏற்றியே தொழுதிறைஞ்சி
யேயவனும் சொல்லினன்
இரவிய தென்றொரு மந்திரி
செய்தன கெறுவுகள்
எத்தனை விதங்க ளென்று சொல்லினன்.

146. மாற்றலர் புகழும் வஞ்சி
மன்னர்க்குச் சரியதாக
வடிவொடு கெறுவுகளும் நல்
வசனவு முள்ளதோர்
மன்னரில்லை யென்று சொல்லி மெய்க்கவே

147. போர்த்தலைவரும் படைகோப்
பிட்டொருங்கும் என்றுசொல்லி
புகழொடு ராமப் பய்ய
னுட [பெருஞ்] சேனையும்
புத்தி தெளிந்தே யிருந்த நாளிலே.

விருத்தம்

[இரவி படையெடுத்துச் செல்வதற்கு விடை வேண்டல்]

148. இருந்தநா ளிரவிப் பிள்ளை இருவிழி சிவந்து சொல்வார்
நிரந்தன காலாள் சேனை நிரைபரி யாள ரோடும்
பொருந்தவே புறப்ப டென்று புத்தியோ டருள் கொடுத்துத்
திருந்தவே யருள்வீ ரென்று திருமுகங் கண்டு நின்றார்.

வேறு

149. சென்றுமுகங் காட்டி நின்ற
போதில் வஞ்சி வாளிரவிப் - பிள்ளை
சீமைமுழு தாளும் வஞ்சி
மார்த்தாண்ட வர்ம தம்பு ரானே !

150. மன்றிக் கொண்டு நாயக்கனும்
மன்னவர் மேலே படைக்கு - வாரூர்
மறுத்துஞ் செறுத்துநமக்
கொன்றிரண்டு போர்பொர வேண்டாமோ ?

151. நன்று பிள்ளை நீர்படைக்குப்
போவதுக்கு நானுமொன்று - சொல்வேன்
நல்ல படையால் பொருது
வெல்லும்வகை எப்படியோ பிள்ளை ?

152. எப்படியும் தம்புரானே
இன்றடியேன் போர்க்களத்தில்-போறேன்
இதத்தொடே நின்றுபடை
பொருதால் சகிக்கு தில்லை யானால்

153. பாரும் பாரும் தம்புரானே
பாளயம் இளக்கிடுவேன்-இப்போழ்
பாக்கிய மில்லாதே போனால்
பக்கத்தேறி வெட்டுப்படு வேன்நான்.

[வஞ்சிமன்னர் தடுத்தல்]

154. காக்க வேணும் அனந்தையில்வாழ்
அச்சுதன் திருவருளி-னாலே
காவலுடன் சென்றுபடை
போர்பொருதால் சகிக்கு தில்லை யானால்

155. ஊக்க முள்ள ஓட்ட னிங்கே
ஓடி வரட்டும் விரவால் - வாறேன்
ஓடிக்கொண்டு நீரும் பிள்ளை
சாடிக்கொண்டு வந்திறங்க வேண்டாம்.

156. அப்படியே மன்னர்திரு
வுள்ளம்பற்றக் கேட்டிரவிப்-பிள்ளை
அரசர் பெருமாளோடு
மறுத்தொரு விண்ணப்பஞ் செய்தாரே.

[இரவி மீண்டும் வற்புறுத்தி வேண்டிக்கொள்ளுதல்]

157. எப்படியும் தம்புரானே
இன்றடியேன் போர்க்களத்தில்-போறேண்
இதத்தோடு நின்றுபடை
பொருதால் சகிக்குதில்லை யானல்

158. மல்பிடியால் ஏறி மாறி
மட்டுங்கடங் திப்புறத்தில்-வந்தால்
வாத்தாரங் கூட்டிக் குத்தி
வடுகர் கோட்டையும் இளக்கிவிடுவேன்.

159. சீரணிந்த மாலை மார்பா
கன்னிப் போருக் கின்றடியேன்-போறேன்
திருக்கையில் சிறப்பும் வாங்கிச்
சிவனுரையும் தொழுது பிள்ளை

[விடை பெற்று இரவி புறப்பட்டு வருதல்]

160. மின்னினிடி போலலறி
பொன்னினுடை வாளுகையில்-வாங்கி
வெற்றி வேலவா சரண
மென்று திருக்கையில் சிறப்பும் வாங்கி.

161. திருக்கையில் சிறப்பும் வாங்கிச்
சிவனுரையும் தொழுது-பிள்ளை
தென்னவன் இரவிப்பிள்ளை
மன்னவர் பவனியைப்போல் வாருர்.

வேறு

[இரவியின் பவனி]

162. மன்னர் பவனியைப் போலே - இரவிப்பிள்ளை
வாருர் பவனியைப் பாராய்

(i) மன்னர் பவனியைப்போல் மார்த்தாண்டன் வாளிரவி
வாற பவனிகண்டு மடவார்கள் கூடிநின்று
கன்னன் மதனுக்கிணை வன்னச் சிலையழகா
கருதிப் படைகளோடே வடுகர் போருக்காக

(மன்னர்)

(ii) போருக் கொருங்கி நின்று போற துரையைக்கண்டு
பூவையர் கூடிநின்றங் காசைமொழிகள் பேசிப்
பாருலகி லிந்தத் துரையைப் பெற்ற தாயும்
பைந்தொடியும் படை போகச் சொன்னார்களோ!

(மன்னர்)

(iii) சொன்னார்களோ இந்தத் துரையைப் பெற்ற தாயும்
துயரந் தீர்ந்து மனமடங்கி யிருப்பார்களோ!
எந்நாளும் புத்திசொன்ன முன்னும் படை வேலய்யன்
இறந்த பழிகள்மீள இன்று போர் கண்டாரோ!

(மன்னர்)

(iv) கன்னிப் படைநடத்திக் காலா ளிடைசெறுமக்
காமன் கருப்புவில்லுக் கெய்த கணையைப்போலே
பொன்னிட்ட உடைவாளும் புலித்தோல்ப் பரிசையுமாய்
போரரசர் வாளிரவி தெக்குக் கோட்டைவாசல் விட்டார்.

(மன்னர்)

## கும்மி

163. அத்தி முகவன் கணபதியாந் தொந்தி
ஐங்கரனே! துணை செய்திடுவாய்
புத்திதெளிந் திரவிக்குட்டிப் பிள்ளையைப்
போற்றிக் கும்மித் தமிழ்பாட.

164. ஆதி பராபர மானவளே! எங்க
ளாயி! பரமான சரஸ்வதியே!
நீதியுடன் கும்மி பாடுதற்கு
நின்னருள் தந்திடு மாதாவே!

165. இப்படித் தோற்றம் பலதும் சொல்லிப்புவி
யேலங் குழல்மட மங்கையர்கள்
செப்பமுட னெரும்பட்டுடனே யவர்
சேர்ந்து வட்டமிட் டாடுவராம்.

166. மன்னர்க்கு மன்ன ரருளாகி எங்கள்
மந்திரி வாறசிங் காரத்தைப்பார்!
சின்னப் புரவி நடத்தி வருகிற
செய்தியைக் கேளடி, தோழிப்பெண்ணே!

167. மாற்றல ராகமுன் வந்தானேடி வடி
வேலய்யன் என்ற துரையை முன்னம்
ஊற்றம தாகப் பொருது கொன்றுலகில்
உண்டான தெப்படி? தோழிப்பெண்ணே!

168. மித்திர பேத மதனாலே: படை
வேலய்யனைப் போலே துரைதான்
சத்திய மாகவே கொல்வே னென்றுரைத்து
தானினிக் கேளடி, தோழிப்பெண்ணே!

169. மீனவர் தன்னுடை மந்திரிமார்
விசேஷங்கள் கேட்டு மனம்சலித்து
தான்வரக் கூடியொரும் பட்டுடன்தமு
தாரித் தடக்கினர், தோழிப்பெண்ணே

170. முன்னம் வேலய்யனைக் கொன்றதுக்கு வெகு
முறண்டு கொண்டார் பழிஎடுக்க
இன்னம் படைக் கொலைக் கின்னொருபாயம்
எப்படி யென்றார்கள், தோழிப்பெண்ணே !

171. மூர்க்கம தாயுள்ள ராமப்பய்யனுக்கு
ஓலைமுன்னாகக் கொடுத்தனுப்பிச்
சேர்த்திடு வோமென் றெழுதியனுப்பின
செய்தியைக் கேளடி, தோழிப்பெண்ணே !

172, மொய்க்குந் துரைவீர னாகும் இரவிதன்
முன்னணி தன்னி லிறங்கிடவே
சிக்கெனவேதலை வெட்டிக் கொடுபோகச்
சீட்டி லெழுதினர், தோழிப்பெண்ணே !

173. மேதினி யோர்புகழ் ராமப்பய்யனந்த
மேல்வாச கங்க ளறிந்தவுடன்
சாதிப் பெரும்படையுங் கொண்டு வந்தவர்
தானங் கிருக்கிறர், தோழிப் பெண்ணே !

174. மய்யல் கொண்டிடும் ஒய்யாரனடி எங்கள்
மார்த்தாண்ட வர்ம ராசருக்குச்
செய்யுந் திறல்வீர மந்திரிமார்களைச்
சேர வருத்தினர், தோழிப்பெண்ணே !

175. மொஞ்சும் படையோ டெதிர்ப்பதுக்கா இன்று
முன்னணி பின்னணி இடங்கை வலங்கையும்
சஞ்சுக மான படை திருத்திடவும்
தக்கபோ ரென்றனர், தோழிப்பெண்ணே !

176. மோசம் வாராமல் இடங்கை வலங்கையும்
மோதிப் பொருதிடுவோம் நாங்கள்
நேசம தாகமுன் கைகளிலே சென்று
நின்றனர் மந்திரி, தோழிப்பெண்ணே !

177. மௌவன மான மொழிகேட்டு வீர
மந்திரி யாகும் இரவிப்பிள்ளை
செவ்வே முன்னணிக் காகப் படையொடு
செல்லுவன் என்றார்கள், தோழிப்பெண்ணே!

178. இம்மொழி கேட்டுப் பரார்ச கிடைக்
குற்றுச் சந்தோஷ மிகவாகி,
கர்ம வினையதுக் கென்ன செய்வோமடி
கல்ப்பனை யாச்சுது, தோழிப்பெண்ணே!

179. கல்ப்பனை யானது காரணமாயவர்
கன்னிப் படைக்கே யொரும்பட்டுடன்
வில்ப்பனம் வாறஸந் தோஷத்துக் காகநாம்
விரைந்து கும்மி யடிப்போமடி.

180. காரிய வீர னொய்யார னடியவர்
கய்யிலுடைவாள் பிடித்தழகும்
வீரிய வான் இரவி வாறதைக் கண்டு
விஸ்தாரக் கும்மி யடிப்போமடி.

181. கிஞ்சுகமே குயில் சஞ்சுகமே! அவர்
கிட்டே யடுத்து நிரந்துநின்று
வஞ்சி பராசர் மந்திரியைப் போற்றி
வாழ்த்திக் கும்மி யடிப்போமடி.

182. கீர்த்தி கொண்டிடும் ஒய்யாரனடி இவர்
கேசரி யோகம் பெற்றான் இரவி
ஆர்த்திக ளில்லை படை வெல்லுவார் நாமள்
அன்பால் கும்மி யடிப்போமடி.

183. கும்மி யடித்த மடவாரைப் பிள்ளை
கூப்பிட் டருகே யழைத்துடனே
ஸம்மானங்கள் மிகக்கொடுத்துத் தானே
வாங்கித் தொழுதவர் சொல்லுவாராம் :

184. கூப்பிட்டுத் தம்மானம் தந்தீரே எங்கள்
கொற்றவ ருடைய மந்திரியே!
காப்பிட்ட மங்கையர் எல்லோரும் நாங்கள்
கூப்பிட்டுக் கும்மி யடித்து வாறோம்.

185. கெம்பீர மான ஒய்யாரன் அந்தமொழி
கேட்டுடனே மட மங்கையர்கள்
இன்பமதாக அருகி லழைத்தவர்க்கு
இட்டார் சவடி தனித்தனியே.

186. கேட்டிடு மங்கே மடந்தையரே என்று
கேசரி யோகம் பெற்றுனிரவி
வாட்ட மதில்லே படை போனால் நாளே
வந்திடுவே னடி மங்கையரே!

187. ... ... ... ...
... ... ... ...
தெய்வ மதுதுணை யுண்டெனக்கு என்று
சீக்கிரம் வாறதைப் பாருங்கோடி!

188. கொங்கை நல்லாரிம் மொழி கேட் டுமங்கே
கொற்றவ ரோடே விடை வாங்கி
மங்கை நல்லா ரெல்லாங் கூடியங்கே
மகிழ்ந்து சென்றங் கிருந்தனராம்.

வேறு

(நொண்டிச்சிந்து மெட்டு)

[இரவி ஆயுதபாணியாய்ப் படைநடுவிற் குதிரைமீது செல்லுதல்]

189. கோட்டைவாசல் தனைக்கடந்து - இரவிப்பிள்ளை
கொடிநின் றுலாவிவரப் படை நடக்க
வாட்டமெத்த விருதலற - இரவிப்பிள்ளை
மருந்துண்ட வாணக்கெட் டாயிரமாம்.

190. கூட்டமிட்ட படையோடே - வெள்ளைவட்டக்
கொடிநின் றுலாவிவரப் படைநடக்க.

191. மந்திரிமார் புடைசூழ - இரவிப்பிள்ளை
வன்னவன்னப் பணிகள் தானணிந்தே
சந்திரகாவிப் பொட்டுமிட்டுப் - படைநடுவில்
தக்கபரி யாளரொடு தானடந்தார்.

192. மாற்றலர்தன் னோடு பொருவான் - இரவிப்பிள்ளை
வல்லயங்கள் ஈட்டியொடு கட்டாரியும்
ஊற்றமுள்ள வாள்ஏந்திப் - படைநடுவில்
உல்லாச மானபரி விட்டுநடந்தார்.

193. மிக்கவடுகப் படையுடன் - பொருவதுக்கு
வில்லரொடு மல்லர்குழற் காரர்நடக்கக்
கைக்குவே லெடுத்து நடக்கப் - படை நடையில்
கண்டிரவிப் பிள்ளைபடை யோடுநடந்தார்.

194. மீனவர் தன் னோடுபகைத்த - வடுகர்தன்னை
வெல்லவென் றெரும்பட்டுடை வாளெடுத்துடன்
மானமுள்ள மந்திரிமார்களும் - இரவியுமாய்
மாற்றலர்க ளோடுபடை யோடு நடந்தார்.

195. முத்துவயி ரத்தினழகும் - பணியழகும்
முகவரிக் குறிதானும் பொட்டினழகும்
கத்தூரிப் பொட்டினழகும் - திலஸமிடும்
கைவிஸ்தாரத் தின் னழகும் என்னசொல்லுவேன்!

196. மூர்க்கமுள்ள பேர்கள்முன்னணி - பின்னணிதன்னில்
மோதிவரும் பேர்களோடு வில்லர் முன்னணி
வாற்ப்புவெடிக் காரர் முன்னணிப் - படையிடையில்
மந்திரி உல்லாசமொடு கூடி நடந்தார்.

197. நல்லவண்ண மாகிவடுகப் - படையொடய்யன்
களிபெரு கியேபொர - வந்திருக்க
நம்முடைய பரிகலங்கள் - ஒக்கவொரு
கொடிதன்னிலே நகட்டிப் பொருதுவெல்ல.

[இரவி தெற்குக்கோட்டைவாசல்கடந்து சாலைவழியாக இளங்குளங்கரைசேர்தல்]

198. செல்லவேணு மென்றிரவிப் - பிள்ளை தன்னோடு
திருவுள்ள மானதினால் சிந்தை தெளிந்திடும்
அல்லலில்லை வெல்வதுக்கு - ராமய்யனோடு
அடல்முடு கியேபோர் பொருதுவெல்ல

199. அப்படியே வந்தொரு மித்து-நிரந்தன
அப்படையொடு தெக்குக்கோட்டை வாசல்விட்டார்;
அப்பொழு தவர்படைகள் - நிற்பதுகண்டு
குப்பங்குப்ப மாகச்சென் றங் கணிபிடித்தார்.

200. அரசர்கள் குலதிலகன் - வஞ்சிமார்த்தாண்டர்
அருளின் படிகேட்டு வடுகருடன்
பொரவென்று படைகூடி - இரவிப்பிள்ளை
போருக் கொருங்கிப்பணி தானணிந்தார்.

201. விரலோடு உடுப்புகளிட்டே - கச்சைகள் கட்டி
விஸ்தார மானதொங்க விட்டழகதாய்
சரஸத்துட ஞெருங்கியே - இரவிப்பிள்ளை
தக்கதெக்குக் கோட்டை வாசல் விட்டுநடந்தார்.

202. ஆனைப்படை காலாளும் - புரவிகளும்
அப்புறமும் இப்புறமும் ஒத்துநிற்க
ஏனமுடன் விருதூதக் - குழல் முழங்க
எக்காள மோடு சின்ன மொத்துவிளிக்க.

203. வானவர்கள் கொண்டாடப் - படைநடுவில்
மந்திரி உல்லாசமொடு கூடிநடந்தார் ;
சேனைபடை புடைசூழ - இரவிப்பிள்ளை
தெளிந்துடன் சாலைவழி யாகநடந்தார்.

204. இச்சையொடு சாலைவழி - நடந்தபடை
இதத்த புலியூர்தூவ லாறும்விட்டு
பச்சை யிட்ட வில்காறரும் - இருபுறமும்
பரப்பில் நில்லாமலணி நிரப்பில்நிற்க.

205. கச்சை கெட்டு ஈட்டிக்காறரும் - இருபுறமும்
கட்டாரி இட்டுப்படை வெட்டுவாரும்
ஒச்சை யிட்டுத் தானடக்க - இரவிப்பிள்ளை
உடனே இளங் குளங்கரை விட்டு நடந்தார்.

வேறு

[இரவியின் படை அணிவகுத்து நிற்றல்]

206. நடந்தபெரும் படையும் நடைக்காவும் திருவிடக்கோடும் விட்டுத்
துடந்தார் திடிமனுடன் துங்கவாத்தியம் வெற்றி முரசறைய

207. படர்ந்த கனகதப்பு பாரச்செண்டை யுடுக்குத்தவல் முரசு
பராசர் வஞ்சி வேணுட்டாருடன் படையெடுத்து

208. ஆன புரவிகாலாள் சேனைபடைத்தலைவர்
அடங்கச் சமைந் தொருங்கி நடந்தா ரிதத்திேனாடே
மீனவர் அருள்செய்த படியா லிரவிப்பிள்ளை
வீரசூரமதாக முன்னணியோடு கூடி நடந்துவர

209. வீராணம் நாகசுரம் தவில் வெங்கலத் தம்பட்டம் கொம்புகுழல்
தாரை மிதுலை செண்டை நடைத்தாளம் கைம்மணி கைத்தாளம்
பேரிகை முரசுதுடி பேசு முடுக்கு மகிடமுடன்

210. வில்லர் குழல்காரர் வெட்டும் வாள் பரிசை சுரிகைக்காரர்
முல்லை மணங்கள் வீச மிஞ்சிறை பைங்குளத் தீட்டிக்காரர்

211. எல்லையில்லாப்படையுஞ் சென்றிடங்கை வலங்கை நெற்றிக்கைக்கு
சொல்லத் துலையாதசுத்த வீரரெல்லாம் வந்தணிபிடித்தார்.

[இராமப்பய்யன் படை பருத்திவிளை சென்று அணிபிடித்து நிற்றல்]

212. இங்கவ ரணிபிடித்து நிற்குமந்த வேளையிலே
ஈத்தங்காட்டுப் பாளயத்தில் இருந்த வடுக ரெல்லாம்
சிங்கஞ் சினந்தெழுந்தாற் போல் ராமப்பய்யன் சேனைபடை
சேரத்துரை மக்கள்பல பாளயக் காறரெல்லாம்

213. பொங்குங் கடலொலிபோல் பூரிகை முழங்கிடவே
புரவிமீதில் டம்மானம் இடிபோல் முழங்கிடவே
சங்குதவில் தாளமுடன் சடுதி படை நடுவில்
தாரை சின்னம் எக்காளம் பூரிகை முழங்கிடவே

214. ஆலவட்டம் வெள்ளைவட்டக் குடைக ளிடைசெறும
ஆனைபுறத் தேவிருது ஆடற்கொடி ஆடிவர
மாலையிருள் போல்திரண்டு வாரணங்கள் முன்நடக்க
வன்னப்பரி மீதிலேறிச் சின்னராகுத்தன்மார் வர

215. காலப் புகையெழுந்தால் போலப் படைசெறுமக்
கள்ளியங்காடுங் கணியா குளமும் குளவரம்பும்

216. அறவாய் நடந்தபடை அயிக்காணியக் குளமும் விட்டு
விரவாய் நடந்தபடை வில்லிட்டானு மூடும்விட்டு

217. துடர்ந்து நடந்தபடை தோட்டியோடுந் தான்கடந்து
துடர்ந்த படைகளெல்லாம் சுங்கானம்பலமும்விட்டு
218. குப்பப்படை முன்னடக்கக் கொடிக ளிடைசெறும
கோலா கலமாகக் குழிமைக்காடு தான்கடந்து

219. ரெட்டை மலையடியும் இசக்கி குளவரம்பும்
பருத்தி விளைதன்னிலே நிறுத்தி அணிபிடித்தார்
முட்டிப் பொரவேணுமென்று கெட்டியே சமைந்தொருங்கி
மூன்றுகைக்குத் தான்படையைக் கூன்றவ ரணிபிடித்தார்.

வேறு

[நெற்றிக்கையிற் போர்]

220. அந்த நேரம் இடத்தறத் தேவனும்
ஆன சங்கரன் கோதை மருகனும்
விந்தை சேருங் கவசப் பெருமாளும்
வெங்கலக்கொடி குளத்தூர் இராமனும்

221. மன்னர் மெய்க்கும் செறுபள்ளிப் பிள்ளையும்
வலிய பிள்ளை பனையற ராமனும்
சுந்தரப் பார்ப்பான் குங்குமக் கண்ணுவும்
தூய்ய சங்கு கொடிவீரன் கேசவன்

222. என்னினும் புகழ் ஈசுர தேவனும்
இரவிப் பிள்ளையும் நெற்றிக்கை தன்னிலே
வந்து முன்னணி தன்னி லிறங்கியே
மாரி போலச் சரங்களைத் தூவினர்.

விருத்தம்

223. திருத்தினர் வடுகர் காலாள் சிறப்புடன் நெற்றிக் கைக்குப்
பரித்திரள் தூளி யாக்கிப் படைகாட்டி நிற்குந் நேரம்
வருத்தமாய் மலையாஞ் சேனை மாற்றானைக் கண்ட போது
உரத்தினால் வில்லை எய்து ஓசையால் வெடிகள் வைத்தார்.

வேறு

[ராமப்பய்யன் எதிரேற்றுப் பொருதல்]

224. வைத்தாரே வெடி யங்குமிங்குமாய்
வலிய தோக்குடன் கைவெடி
வந்து முடுகியே ராமப் பய்யனே
சென்று மாறியே படைக ளேறினர்.

225. ஏறினரிடங் கையிலும் வலங்
கையிலும் நெற்றிக்கையிலும்
இடி முழக்கம்போல் நடதிடிமனும்
இணங்கவே பரிசைக்காரரும்

226. கூட வந்ததோர் பரிசைக்காரரும்
குதிரைத் திரள்விட்டு முடுகவே
கொற்றவன்தலை கண்டு நின்றவர்
தொட்டியன்தலை வெட்டியே

227. வெட்டியதலை யற்றுக்கீழ்விழ
விரவில்கொடுதிரு முன்பிலே
மெய்க்க வைத்தவர் அடிதொழுதுடன்
வீரர்முன் கையில் வாளுவாங்கினர்.

வேறு

[இரவி இளங்குடிக் குளம்வந்து பொருதல்]

228. வந்த பெரும்படை வீரரெல்லாம்
வருத்த முடனங்கே தான்கூடி.
சிந்தை மகிழ்ந்தல்லோ இரவிப்பிள்ளை
சென்று ரிளங்குடிக் குளந்தன்னிலே.

229. வந்து முன்னணி தனிலிறங்கி
வன்னச் சிலைகய்யில் வாங்குவராம்.

230. கய்யில் சிலைவாங்கி இரவிப்பிள்ளை
கடுகச் சிலைபூட்டிக் காதிலிட்டார்.

231. இட்ட சரந்தன்னைத் தெரிந்தெடுத்து
இதத்த கிணபதிக்கே குறித்தார்.

232. தொடுத்து வலத்தோளில் எடுத்திருத்தித்
துய்ய குருவினை மனசினுன்னி
நகத்தால் கணைவிட நகமசைய
நடுங்க அவரங்கே எய்துவிட்டார்.

வேறு

233. எதிர்த்த மாற்றானைக் கண்டால் விடுவாரோ?
எய்து விட்ட சரந்தன்னைப் பிள்ளையும்
கதிர்த்துப் போர்க்களந் தன்னி லிறங்கியே
கருதும் படையொடே விருதொலி குமுறிட.

234. நாக்கா லேமுது படைவிளி கொண்டல்லோ
நாலு திக்கும் படைக ளிறக்கினர்
வாக்கி னாலே படைவிளிச் சத்தங்கள்
வானி லெங்கும் இடிபோல் முழங்கவே.

235. தெக்கே நின்று கடல் பரந்தால் போலே
தேச மெங்கும் பரந்தது தன்படை
பக்க மெங்கும் மருவலர் பொருதிடப்
படைக ளெங்கும் பரந்து நடக்கவே.

[ராமப்பய்யன் படை தந்திரமாக அடர்த்தல்]

236. பொருது நின்ற மருவலர் சேரவே
புத்தி தன்னில் உளவாயம் வைத்தல்லோ
வெடிக்க யாகஉள் உபாயம் வைத்துடன்
மெள்ள வீசியே மேலடர்ந் தேறினர்,

237. தாவினரே குதிரையை மேக்கேதான்
தாண்டி வந்தார் இளங்குடி தன்னிலே
வாறவாற குதிரையைக் கண்டபின்
மந்திரி யோடே ஒட்டன் உரைசெய்தான்.

[இரவியை ஒட்டன் எச்சரித்தல்]

238. 'பரவி மேக்கே குதிரை வருகுதே
பற்றி நாமள் மலையேறிக் கொள்ளுவோம்
239. 'இந்த நேரம் குதிரை வருமுன்னே
ஓடி நாமள் மலையேறிக் கொள்ளுவோம்'

[இரவியின் தீரச்செயல்]

240. வார்த்தை சொன்ன குடைக்காரனைத் தானும்
மாறி வைத்தா ரடியிடி போலவே.

241. மந்திரி யாய்ப் பிறந்தாலு நாமல்லோ
மாற்றானைக் கண்டு ஓடுவ தாண்மையோ?
அந்தரம் வரும் இன்றுநாம் ஓடினால்
அரசர் திருமுன்னே எப்படிச் செல்லுவோம்?

242. எந்தனோடே இறங்கிப் பொரத்தக்க
ஏற்ற சேகுவ ருண்டானால் வாருங்கோ!
சிந்தை மெய்க்கவே ஈட்டி கய்யில் வாங்கித்
திரும்ப ஏறினர் ஈற்றப் புலிபோலே.

243. ஏறி னரே இளங்குடி தன்னிலே
இடி முழக்கம்போல் வாத்தாரங் கூட்டியே
வாற வாற குதிரையைக் குத்தியே
மாற்றலர்படை வெட்டி மடக்கினர்.

244. ஆடல் வன்பரி மீதினி லேறினர்
அறையாமலே வெட்டி மடக்கினர்
மாறியே கசை வீசி யடிக்கவே
மறவர்தன்படை வெட்டுப்பட் டோடவே.

[மறவர் படையையும் குதிரைகளையும் இரவி அதஞ்செய்தல்]

245. வெட்டுப் பட்டவர் கீழே மடியவே
விதியோ யென்றவர் அலறி விழுந்திட,
சட்டை நல்ல தலைப்பாவும் அற்றிட,
தலையுந் தோளும் மறுபடி வெட்டினர்.

246. தாளும் சென்னியும் தோளுந் துணிபட,
சட்டை நல்ல தலைப்பாவும் அற்றிட,
தலமண் தன்னில் மறவர் மடியவே
தட்டழிந் தாரே ஆவி தளர்ந்துடன்.

247. வெட்டுப் பட்டு மறவர் மடியவே
விதியோ சிவனே சரண மென்பார்.

248. கன்னல் சேரும் மொழியினுள் தன்னையும்
கையினாலே துதிசெய்தார் பிள்ளையே.

249. வாழை நல்ல தடைபோலே பிள்ளையும்
வாற வாற குதிரையை எக்கினார்
காலும் நாலு முகமீடும் அற்றிடக்
கண்ட கண்ட திசைகளுஞ் சுற்றிட

250. ஏறி யெங்கும் பொருகிற வேளையில்
ஏற்ற நல்ல பரிவீரர் தான்படை

[இரவி வஞ்சினங் கூறல்]

251. சென்று நாடு படைவீடு தன்னிலே
சேர நல்ல துரைகளுண் டாகிலோ
பண்டு முள்ளதோர் கப்பப் பணத்திலே
பழங் காசு கிடையாது காணுமே.

252. தென்னவ ரோடே தேவேந்த்ர சாமியும்
தேடி னைலதுக் கெப்படிக் காணுமே?
மன்னவரும் இவ ரென்று சொல்லலாம்
வாய்மை யாகவே சேர்த்துக்கொள்வோமென்றார்.

[மன்னர் தேடிவர, அண்ணர் பொருமிடத்து நின்று சேனை சிதறிவர, அங்கே
இரவிசென்று பொருதல்]

253. அந்த நற்படை யோடவர் தன்படை
அரசர் மன்னர் பெருமாளைத் தேடினர்
அண்ணர் போனாரே வம்புமூலைக் கைக்கே
ஆரவாரங்கேட்டா ரோடி வாறாரே.

254. என்னை மெய்க்க வளர்த்த பாராசர்
இப்பள் தன்பரி மீதேறி வாறாரே
முன்னணி யையும் வெட்டித் துரத்தியே
மிஞ்சும் வீரப் படையோடே சொல்லுவார்

255. எண்ண மெண்ணி யடுத்துவரக்கண்டு
ஏற்ற சேகுவர் மேலடர்ந் தேறினார்.

256. வீர சூரன் இடத்தறத் தேவனும்
வெள்ளிகெட்டு குழல்காறர் கூட்டமும்
பாரநாளில் வெடிகள் கொளுத்தியே
பற்றலர்படை வெட்டி மடக்கினார்.

257. கோர மாகவே ராவுத்தன் மாரெல்லாம்
குதிரை சேர இறக்கிப் பொருதாரே.

வேறு

[வடுகப்படையோடு இரவி கடும்போர் புரிதல்]

258. பொருதாரே இரவிப்பிள்ளை வடுகர் படையோடே
பொடுபொடென வெடிகள் இடி போல முழங்கிடவே
சுரிசை பரிசைக்காரர் சுடத்தலை ஈட்டிக்காறர்
துங்கவாள் பரிசைக் காறர் சிங்கத்திரள்போல் முடுக்க

259. கருதும் படியேசினத் தங்கவரும் இவருமாகக்
கதிர்த்துப் பிள்ளை கண்முன்னே அரைக்ஷணத்தில் மடிவார் சிலர்.

260. மடிவார்கள் வெடிகள் கொண்டு சிலவர் அதினாருள
மறிந்து விழுந்துகன்னஞ் சின்னங்கள் பொடிந்திடவே
உடலில் கணைகள் கொண்டு குடலில் குருதிசோர
ஒன்றுபோலே அடர்ந்தேறி உரைத்துப்பொரு மந்நேரத்தில்

[வடுகப்படையின் நடுவில் இரவி அகப்படுதல் : துணைவந்த வீரர்கள் படுதல்]

261. சத்தியம் நமக்குதவி யாகவந்த பேர்களெல்லாம்
சதித்தாரோ நம்மையிந்த வடுகப்படை யிடையில்
புத்தி மிகவே தெளிந்து உற்றதோர் இரவிப் பிள்ளை
பொருதார் இரவிப்பிள்ளை வடுகர்படை யிடையில்

262. அந்திமதி சூடுவரா அரனே சரணமென்று
ஆதிச்சன் பள்ளியுடன் அரத்தனுடையானும் பட்டான் ;
சுந்தரப் பரம்மக்குட்டி சூரியச் செக்காலநாயர்
தொட்டியப் படைகளோடே வெட்டியே பொருதும் பட்டார்.

263. கொச்சிரவிப் பணிக்கனும் குஞ்ஞு மாதிரச்சுவரனும்
கோதிச்ச மார்த்தாண்ட பிள்ளை குளத்தூரிரவியுமாய்
பிச்சப்பிள்ளை பொன்னரத்தன் பெருமாள் கோவிந்தநாயர்
பிள்ளையை வளைந்தபோது முன்னணியில் வெட்டுப்பட்டார்.

264. அற்றமில்லாப் போர்க்களத்தில் அடர்ந்தேறிப் பொருமந்நேரம்
ஆணழகன் மந்திரிக்கு ஆனகுடைக் காறன்பட்டான்.

[இரவியை ராவுத்தர் சூழ்ந்துகொண்டு அவர் தலையைக் கொய்துவிடுதல்]

265. மிக்கமான போர்க்களத்தில் விண்ணவரெல் லாருங்காண
வேகத்துடன் ஆடற்பரி மீதில்வாற பேரைக்குத்தப்
பக்கத்தில் குதிரைவிட்டுப் பட்டாணித் துரையை வெட்டப்
பற்றியே ராவுத்தன்மார்கள் சுற்றியே வளைந்துகொண்டார்.

266. வெட்டினா ரிரவிக்குட்டிப் பிள்ளையைக் குதிரைக் காறர்
மெய்தனில் விழுகிறவாள் அய்யய்யோ எனவிலகக்
கட்டகாலமோ எனக்கு எந்தனுடை வாளினாலே
காளிபத்ர காளியம்மை கைவிட்டென்னைத் தள்ளினாளோ?

267. வெட்டினா ரிரவிக்குட்டிப் பிள்ளையைக் குதிரைக்காறர்
விதியோ சிவனேயென்று சிவலோகம் சேருவாராம்.

268. இட்டமுடன் தெய்வகன்னி மார்கள்வந்து மாலையிட்டு
இந்திரவன்னத் தேரிலேற்றிக் கொண்டுபோற நேரத்திங்கல்
திட்டெனத்தலையும்வெட்டி வெற்றிக்கொட்டும் கொட்டிக்கொண்டு
செப்பத்துடன் ஈத்தங்காட்டுப் பாளயத்தில் போயிருந்தார்.

விருத்தம்

[தலையை ராமப்பய்யன் முன்னர் வைத்தல்]

269. இருந்தபோ திவர்க ளெல்லாம் இரவிதன் தலையைப் பட்டில்
பொருந்தவே பொதிந்து கட்டிப் புகழ்ந்து ராமய்யன் கையில்
... ... ...
திருத்தமாய்க் கொண்டு வைத்துச் சென்றடி வணங்கிநின்றான்.

வேறு

[தலை யாருடையது எனக் கேட்டுத் தெரிதல்]

270. வணங்கி நின்ற ஓட்டனோடே வார்த்தை யெல்லாங் கேட்பாராம்
இணங்கும்படி தலையிதுதான் ஏதுதலை யெனக்கேட்டார்
குணம்பெறவே ஓட்டாளன் கூறிடுவான் துரையோடே
அணங்கரசன் மணவாளன் ஆனவஞ்சி வேந்தருட

271. வேந்தருட மந்திரிமார் வீரரெட்டுப் பேர்களுண்டு
ஏந்துபுகழ் மலர்மார்ப இரவிக்குட்டிப் பிள்ளையுட
சேர்ந்ததுரை தலையிதென்று செப்புவானும் ஒட்டாளன்
செப்புமொழி கேட்டபோதே செயலழிந்து ஏதோசொல்வார்

வேறு

[ராமப்பய்யன் வருந்துதல்]

272. அய்யோ இந்தத் துரையைப்போல
அவனிதனில் பார்த்தா லொருவருண்டோ?

273. கையும் எழும்பிச்சோ இவரைவெட்டக்
கண்டவர் மனந்தான் கலங்காதோ?
வையம் புகழ்ந்திடும் இவர்வடிவும்
வயிரப்பணி யிட்ட காதழகும்

274. கோதி முடிந்ததோர் முடியழகும்
கூன்ற கஸ்தூரிப் பொட்டழகும்
ஏதுசொல்லப்போறேன் இவர்வடிவை
இனிமேல் நினைந்தாலும் பலனுண்டோ?

275. போதம் அறியாத ராமப்பய்யன்
போரில் சதியாகக் கொன்றுபோட்டான்;
தீது வராமல் தலைதனைத்தான்
திரும்பப் பாளயத்தில் கொடுத்துவிட்டான்.

[இரவியைப் பகைவர் வளைத்துக்கொண்டமை வஞ்சிமன்னர் அறிதல்]

276. பாளயத்தில் தலைசென்ற போதே
பராசர் முன்னே ஒருவன் சொல்வான்

277. மன்னவரே! நீரும் வளர்த்ததொரு
மந்திரி இரவியை வளைத்துக் கொண்டார்.
தென்னவரே இப்போழ் செல்லுகிலோ
தீரன் இரவியை மீள்க்கலாமே.

[வஞ்சிமன்னர் போர்க்களத்திற்குப் புறப்பட்டு வருதல்]

278. கேட்ட பொழு தந்தப் பராசர்
கெடுமதியோ என் றெழுந்தருள
வாட்டம் அறியாமல் அவிடம்விட்டு
மட்டுங் தூவலாறு தனைக் கடந்தார்.

279. கொம்பில் குயில்கூவும் குழுமையிலே
கொற்றமுடி மன்னர் வாறநேரம்

[இரவியின் மரணத்தை வழியில் அறிதல்]

280. கட்டுக் குலேயாமல் ஓடிச்சென்று
காவலவ ரோடே விண்ணப்பமாய் :

281. பாடுபட வேண்டாம் தம்புரானே
பட்டுப் போனூரே இரவிப்பிள்ளே ;
பாடு பட்ட தெல்லாம் பழுதாச்சே
பழுதே களேந்தோமே இரவியைத்தான்.

[வஞ்சிமன்னர் போர்க்களத்தில் இரவியின் சரீரத்தைக் கண்டு
கனகமஞ்சத்திலேற்றி வருதல்.]

282. என்று புலம்பியே பராசர்
ஏங்கியுடன் மண்ணில் விழுந்தழுதார்.
'இன்றுநான் சென்று பாடெடுப்பேன்
இல்லாவிட்டால் நானும் இறந்திடுவேன்'

283. என்று சொல்லி மன்னர் எழுந்தருளி
இளப்பமுடன் சென்றூர் போர்க்களத்தில்
கொண்டு சென்றஉடை வாளினுலே
கொற்றவர் குதிரை வீசினதும்

284. துட்டர் இருமுறி மறவர்களேத்
துலங்கும் படியவர் தான் சினத்து,
கட்டித் திருக்கையால் பாடெடுத்துக்
கனக பள்ளியந் துலாவில் வைத்தார்.

285. பட்டு வீரகாளி கொண்டு மூடிப்
பாடு கொண்டு மன்னர் எழுந்தருள

286. இப்படி நின்று பொருவ தெல்லாம்
எந்தன் முன்னே நின்று பொரவேண்டாமோ ?
மல்பிடியால் (போர்) பொருவ தெல்லாம்
மாமன் மார்த்தாண்டன் அறிந்தில்லயோ ?

[இரவியின் தாயார் மன்னர் முன்பு வந்து இரவி எங்கே என்றல்]

287. மேவி மலேயேறிச் சென்றதிலே
மெல்லி நல்லாள் தாயார் திருமுன் செல்ல

288. கண்டங் கிருந்தம்ம தாயாரும்
கருதும் இரவிதான் எங்கே யென்றூர்.

289. எங்கே யென்று தாயார் கேட்டபோதே
ஏங்கி மனதெல்லாம் தள்ளாடி.

290. தம்பிதனைக் கொன்ற படுகளத்தில்
தனித்துக் கொடுத்திங்கே வந்தீரோ?

வேறு

[மார்த்தாண்டன் சடையன் வருதல்]

291. ஓடி மனம் வாடி யண்ணர் பீடை பெரிதாகி
உற்றபுகழ்த் தம்பிஎந்தன் இரவிவரக் காணேன்
தேடியவர் அண்ணர்மனம் தட்டழிய் ஓடித்
தென்னர்வஞ்சி மன்னர் புலி யூரதிலே வந்தார்.

292. வாடி யண்ணர் மனம்கலங்கித் தட்டழிய ஓடி
வன்னப்புலி யூரும் விட்டுத் தன்னிட்டமாய் நடந்தார்.

293. கண்ணுமணி போலிருந்த மார்த்தாண்டன் சடையன்
கள்ளர்கொலை செய்யுங் குழுமைப் பதியில் வந்தார்.

294. போரிலெங்கும் கீர்த்தி கொண்டு ஆளும் பராசர்
பிள்ளையுட பாடுகொண்டு வாறதையும் கண்டார்.

295. கட்டுக்குலை யாதிருந்த இரவி இறந் தானோ?
கண்ணுமணி போலிருந்த பிள்ளை இறந்தானோ?
மட்டுக்கடங் காதிருந்த இரவிஇறந் ததுக்கு
மாமனுட கையிலுடை வாளில்லையோ? சிவனே!

296. இந்திரனே போலிருந்த இரவிஇறந் ததுக்கு
இருப்பதில்லை நானுமென ஏங்கி விழுந்தழுதார்.

297. மண்ணதிலே விழுந்தெழுந்து அண்ணர்முகம் வாடி
மன்னர்பர ராசர்சென்று கைப்பிடித்து இளக்க

298. பக்கநாளில் இன்றுபடை போகவேண்டாம், பிள்ளை!
பழிகாரர் உண்டுனக்குச் சென்றபடை வீட்டில்

299. ஆணழகன் என்னிரவி இன்று நீ போகாதே
அண்ணருண்டு அரச ரோடே சென்று பொருவாரே.

300. பொன்னினுடை வாள்கொடுத்தங் குன்னைச் சதித்தாரோ?
புத்திசொல்ல எனக்குஇனி வேறொருவ ருண்டோ?
அண்ணர்மலங் காதபுத்தி சொல்லிப்பர ராசர்
அம்மையறிந் தாக்காலதுக் காந்தரங்கள் வருமே.

[' இறந்தவன் இரவியன்று; காளிநாயரே' எனத் தாயார்க்கு அறிவித்தல்.]

301. பிள்ளைபட்ட தறியாமல் சென்றுசொல்லி வாரீ
பெருமையுள்ள மன்னர் குடைக்காரனை அழைத்தார்.

302. தட்டழிய வொட்டிப்பொரும் நேரம்பிள்ளை வளர்த்த
தந்திரத்தில் காளிபட்டுப் போனான், பிள்ளை வாரூர் ;
விட்டிறங்கு மேடைவிட்டு வேந்தர்கூட வாரூர் ;
மெல்லியரே வேறேயொரு விக்கினங்க ளில்லை ?

303. சொல்லும் மொழி கேளுமம்மா துரையவர்கள் வாரூர்
மெல்லியரே வேறேயொரு விக்கினங்க ளில்லை.

304. கள்ளமொழி சொல்லியம்மை உள்ளமெலாந் தேற்றக்
காரிகையு மேடைவிட்டுக் கீழிறங்கு வாளே.

305. தெழிச்சயமாய்த் தாயாரும் ஓடிவந்த பொழுதே
தென்னன்வஞ்சி முகத்தோடே தேன்மொழியாள்பார்த்தாள்.

வேறு

[பிணத்தைக் காணத் தாயார் விரும்புதல் ; சேவகர் தடுத்தல் ;
தாயார் வலிதிற்சென்று காணல்]

306. அப்பொழுதே தாயாரும் அழுதுகொண்டு அய்யோ என்றூர்
அய்யோ எந்தன் காளிபட்ட அரும்பாடு தன்னைக் காண
வேணும்

வேறு

307. கய்யற மாய்ப்பட்ட பாடுதன்னைக்
காணவேண்டாம், அம்ம ! தாயாரே !

308. செப்பத்துட னங்கே செலும் நேரம்
சேகுவரு மங்கே ஏதுசொல்வார்
குப்பப் படைக்குள்ளே நீங்கள் சென்று
கூண்ட காளிபட்ட பாடுதன்னை

309. காளி நாயருட பாடுதன்னைக்
காணவேண்டாம் அம்ம ! தாயாரே !
தோழமல்லோ நீங்கள் பாடுகண்டால் ?
தூரகில்லும் அம்ம ! தாயாரே !

310. என்று சொல்லியே சேகுவர்கள்
அம்ம தாயாரை விலக்கிடுவார்

311. அப்பொழுதே அம்மை தாயாரும்
அவரோடே தான் மிகவும் சினந்து

312. பன்னு தமிழ்கொண்ட மந்திரிதன்
பாடுதனைச் சென்று காணுவேனே !

[இறந்தவன் இரவியென்று தெரிந்து தாயார் புலம்புதல்]

313. பாடுதனைச் சென்று கண்டபோதே
பதறித் தடுமாறி மனங்கலங்கி
காடுதனில் தடி போல்விழுந்து
கதறிச் செங்கய்யாலே முகத்தறைந்தாள்.

314. அறைந்து மண்ணில் புரண்டழுது
ஆவிதளர்ந்தே ஏது சொல்வாள்
இறந்து விட்டான் போர்க்களத்தில்
இதத்த நல்லகாளி என்றான்

315. காளிபட்ட பாடதென்று
கள்ளமல்லோ நீங்கள் சொன்னதெல்லாம்

316. ஆகமெல்லாம் மிகப்பதறி
அழுதுகொண்டு அய்யோ என்றார்
சோக வெந்து துயர முற்று
விழுந்தா ரந்த வெளியிலேதான்.

விருத்தம்

317. வேளியிலே பாடு கண்டு விசனமுற் றம்மை தாயார்
வாளியால் மடிந்தா யென்தன் மைந்தனென் றழுதபோது
சூழவே நின்றோ ரெல்லாம் துயரமுற் றேது சொல்வார்
ஊழியின் விதியால் வந்தால் ஒருவரால் வெல்லா தென்றார்.

318 என்றவர் சொல்லக் கேட்டு ஈன்றநல் தாயார் தானும்
கன்றியே மனது நொந்து கலங்கிநின் றேதோ சொல்வார்
இன்றுநான் ஏது செய்வேன் என்னை நீ சதித்தாய் என்று
மண்ணினில் விழுந்தழுது வயிற்றினி லறைந்தார் தாமே.

வேறு

319. அறைந்து மண்ணில் விழுந்தழுது
அருமைமக னேடோநான்
இறந்திடுவேன் நானுமினி
இருப்பேனோ இந்நாட்டில் ?

320. நாட்டில் புகழ்கொண்ட என்னிரவி
நாடிச் சதிவந் திதோ துரைகளெல்லாம்
காட்டிக் கொடுத்தாரோ உன்னை இன்று
கருதிப் போர்க்களத்தில்

321. தக்க படை போன குறிகள் கண்டு
சதிதான் வருமென்று சொன்னேனே
மிக்கதா யுன்னை விலக்கிடவும்
வேந்தர் விலக்கவும் கேளாமல்

322. வீரருடன் சென்று சமர்க்களத்தில்
... ... ...

323. சமர்க்களத்தில் போர்பொருது
சதிதான் வருவதை யறியாமல்
என்னிரவி பொன்னிரவி
என்றுன்னை நான் காணுவனே?

324. அடிக்கடியும் இரவிப்பிள்ளை
ஆண்டிரியும் இரவிப்பிள்ளை
நடுக்கமுடன் சமர்க்களத்தில்
நாடியின்று கால்நடையில்

325. கால்நடையில் போனதுக்குக்
கட்டணத்தால் வருவானேன்?
காட்டானை பாய்ந்த துண்டோ?
கள்ளர்குத்திக் கொன்றதுண்டோ?

326. காட்டிலுள்ள பலமிருகம்
கரடிபுலி கண்டதுண்டோ?
கரடிபுலி கடுவாய்தான்
கடித்த துண்டோ? என்னிரவி!

327. என் விதியோ! என்னிரவி!
என்றுசொன்ன தாயாரும்
... ... ...
ஏது செய்வேன் எனவழுதாள்.

328. மங்கை விலக்கவும் கேளாமல்
மந்திரி சொல்லவும் கேளாமல்
மந்திரி சொல்லவும் தட்டிவைத்து
மாதா விலக்கவும் கேளாமல்

329. அந்தகன்வந் திருக்கையிலே
அருமறையோன் எதிரேவந்தான்.

330. எதிரேவந்த குறிபலங்கள்
ஏனோநீ அறிந்தில்லையோ ?
சதிகள் வருமென்றல்லவோ
தக்கவரைக் கைப்பிடித்தாய் ?

331. கைபிடித்து உன்னுடைய
காரியப்பேர் விலக்கிடவும்
மெய் பிடித்ததோழியர்கள்
மிக்கதா யுன்னை விலக்கிடவும்

332. வேந்தர் விலக்கவும் கேளாமல்
ஆருவிலக்கவும் கேளாமல்
அமர்பொருது மடிந்தாயோ ?

333. சென்றங் கடர்ந்தேறிப் பொரும்நேரம்
சேகுவர்கள் தானும் அங்கில்லையோ ?

334. வய்யம் புகழ்கொண்ட என்னிரவி
மந்திரி மார்களும் அங்கில்லையோ ?

335. செப்பும் எசமானும் அறிந்தில்லையோ
சென்றங் கடர்ந்தேறிப் பொரும்நேரம்

336. போர் மதனே உன்னுடைய
புரவித்திரள் அங்கில்லையோ ?
ஆருமறியாமல் உன்னை இன்று
அகப்படுத்திக் கொடுத்தாரோ ?

337. உற்ற படை சென்று தான் பொருது
உடனே மீண்டிங்கே வாராமல்
வெற்றியுடன்பரி பிடிக்க வென்று
வேகத்துடன் ஏறிப் பொருந்நேரம்

338. சுற்றிப் படைவிட்டு வளைந்து கொண்டு
துடர்ந்து வெட்டிச்சிர மறுக்கும் நேரம்
கற்ற தொழிலொன்றும் அறிந்தில்லையோ ?
கையில் உடைவாளும் இருந்தில்லையோ ?

339. ஏறிப் பொரவந்த துரைகளெல்லாம்
இலங்குர் திருமுகங் கண்டில்லையோ ?

340. கதிர்த்துச் சிரம்தன்னை அறுப்பதற்கு
கய்யும் எழும்பிச்சோ அவர்களுக்கு ?
மறுத்துப் பொரவந்த மாற்றலர்கள்
மந்திரி தானென் றறிந்தில்லையோ ?

[இரவியின் மனைவி புலம்புதல்]

341. கருத்து மலங்கியே தாயாரும்
கருதித் துயரமுற் றிருக்கும் நேரம்
வருத்த முடனந்த மங்கைநல்லாள்
வாய்த்த பெருமாள்தன் பாடுகண்டார்

[தாயார் மருமகளைப் பார்த்துப்பார்த்துப் புலம்புதல்]

342. கருத்து மலங்கிய தாயாரும்
கதறித் துயரமுற் றழுதுநின்றாள்.

வேறு

343. அழுதனராம் தாயாரும்
காரிகையும் மேல்விழுந்து விம்மி யழுதாளே
என்னிரவி வாள்வீரா

344. என் அருமைக் குடிக்கழகா
என்னழகதுள்ள கண்மணியே
என்னாசை மகனே அய்யோ
என்னருமை மகன்பாடுகண்டால்

வேறு

345. பழுதாக உன்னை யுரைத்தவனே
படைக்குக் கொடுத்துன்னைச் சதித்தாரோ ?
முழுதுமவர் வஞ்சனை தான்
முகிந்ததுவோ உன்னளவில் ?

வேறு

346. பத்துமாசம் சுமந்து பாருலகில் பெற்றெடுத்தேன்
பெற்ற வயிறெரிய என்னுள்ளம் பேதலித்து வருகுதல்லோ !

347. ஆனையிலும் ஆனையல்லோ என்னழக துள்ள போரானை
வீரியமுள்ள ஆனையல்லோ விழுந்தடக்கம் பாடாச்சோ !

348. உறக்கமோ என்னிரவி நான் உன்னையல்லோ தேடுகிறேன் ?

349. தெக்குப் புரைதனிலும் தேவரங்கு மெத்தையிலும்
தேவி தனிச்சிருக்க நீ தேசவழி போனதென்ன ?

350. வடக்குப் புரைதனிலும் மாதளம்பூ மெத்தையிலும்
மங்கைநல்லாள் இங்கிருக்க நீ மாயவழி போனதென்ன ?

351. எண்ணெய் இட்டுக் கச்சைகட்டி நீ இலங்கமதில் போம்பொழுதே
வன்னச் சிரமிசொன்ன வாற்த்தாரம் கேள்க்கேகேளு ?

352. ஆறுவேனு நானுமினி அருங்கனலில் மாளுவேனே
தேறுவேனே நானுமினி தீக்கனலில் விழுமளவும்

353. தட்டும் பரிசையுமாய் தாமரைப்பூப் பொந்தியுமாய்
விட்டு விளையாட உனக்கு வீதியிடம் போந்தில்லையோ

354. அய்யூரில் பள்ளரெல்லாம் இய்யூரில் பறையரெல்லாம்
தீண்டாத சாதியல்லோ திருமுடியைத் தொட்டாரே !

355. வரப்போ தலகாணி ? வாய்மடையோ பஞ்சுமெத்தை ?
புல்லோ உனக்குறுதி ? புல்ப்பாயோ பஞ்சு மெத்தை ?

வேறு

356. அண்ணன் மார்த்தாண்டன் கண்டில்லையோ
அரசர் பெருமாளும் உன்னை மறந்தாரோ

வேறு

357. கள்ளியங் காடுதன்னில் கணியா குளமதிலே
பிள்ளைபட்டு விழுந்திடவும் பெண்கொடியாள் புலம்பினதும்

[தாயாரையும் மருமகளையும் மன்னர் அழுகை யமர்த்தி, இரவியின் தலையைக் கொண்டுவரப் போவார் யார் என்றல் : பலரும் போக எழுதல்]

358. தாயார் துயரங்கள் தீர்ந்த போதே
தக்க பெருமாளும் திருவுள்ளமாய்
ஆயிழையே தாயே அழவேண்டாம்
அழுதால் இரவியும் வரமாட்டான்

359. ஆணழகன் மந்திரி பாடடக்க
ஆருதலைகொண்டு வாருறென்றார்
ஆரு தலைகொண்டு வாருறென்று
அரசர் பரிகலத்தோர் கல்பிக்கவே

360. பாடடக்க வேணு மென்று மன்னர்
பசுந்தலையைக் காணேனே
பசுந்தலையைக் கொடுவரவே
பராசர் கல்பிக்கவே

வேறு

361. கல்பித்தாரே பராசர் சொல்பரி கலத்திறோடே
கதிர்த்து ராமப்பய்யன் பாளயத்தில் சென்று
கருதித் தலைகொண்டு வரலாமோ?

362. கலங்காத சேகுவர்களுண்டோ இந்தப் பாளயத்தில்
கருதித் தலை சென்றுகொண்டு வருகிலோ
கல்லு நாட்டி இறைகூலி கொடுப்பன் நான்.

363. அப்படியே கல்பிக்கவே ஆனதொரு பரிகலத்தோர்
ஆடுங்குதிரைப் பாளயத்தில் நாங்கள்
அனைபேரும் போவோமென்று சொல்லுவார்.

[அப்பொழுது இரவியின் வளர்ப்புப் பிள்ளையாகிய காளிநாயர்
அனந்தையினின்று மீளுதல்]

364. வல்லவன் இரவிக்குட்டிப் பிள்ளைதான் வளர்த்தசெல்வன்
வாய்த்ததொரு செக்காலக் காளியும்
வண்மையுடன் அனந்தைப்பதி போனான்.

365. நல்லவண்ணம் காரியங்கள் கண்டு மீண்டு காளிநாயர்
நலமாக அனந்தைப்பதி விட்டுடன்
நல்லதொரு காமனை கடந்தான்.

366. தொல்லைகள் வாராதவண்ணம் தொங்கலோட்டமாக ஓடி
சுத்தவீரன் நீற்கன்பறம்பு விட்டான்
துடர்ந்து பாப்பனங்கோடு கடந்தான்.

367. கடந்துடனே காறைக்கா மண்டகமும் நேமம்விட்டுக்
கருதும்படி வெங்கானூரில் வந்தான்
கண்டு மாடப்பச்சார் தடைந்தான்.

368. நடந்து சென்று கைப்பிடித்துத் தடைந்துடன் மாடப்பச்சார்
நன்மை எந்தன் கண்மணியே காளியே (என்று)
நலமாகக் கட்டித்தழுகிக் கொண்டான்.

369. தழுகிக்கொண்டு செக்கால மாடப்பச்சார் அந்நேரம்
தம்பி உன்னைப் போகவிடேன் இன்று
தாமஸித்து நாளைப்போக லாமே.

370. அப்பொழுதே காளிநாயர் அண்ணே இன்று தடையவேண்டாம்
அரசர் சென்ற பதியில் சென்றல்லாதே (நானும்)
அவதரிப்ப இல்லையென்று சொன்னான்.

371. சொன்னானே காளிநாயர் துலங்குங்குதிரைப் படையோடே
தோட்டி சேர்ந்த மருவலர்கள் பொருததும்
துலங்கும்படி சேகுவர்கள் கூடியே.

372. அந்நாளில் ராமப்பய்யன் பாளயத்தில் ஏறிவெட்டி
ஆர்த்தபடை வேலய்யனைக் கொன்றதும்
அய்யனங் குறுப்புபட்டுப் போனதும்.

373. பட்டுப் போனதின் பிறகு பாளயங்கள் தன்னைவாங்கிப்
பணகுடியில் வந்துசேகரித்ததும்
பாளயக் காரரை வரவழைத்ததும்

374. இட்டத்துடன் எழுபத்திரண்டு பாளயக்காரர் கூடி
ஏற்றராமப் பய்யனுங் கூடியே
ஈத்தங்காட்டில் வந்து பாளயஞ் செய்தார்.

375. இப்படிப் படைத்திடுக்க மாயிருக்கும் வேளையிலே
இங்கே நின்றால் மந்திரி நகைப்பார்
இன்று சென்றப் பதியில் போவேன் என்றான்.

376. ஒப்பமுடன் உபசார வார்த்தைசொல்லிக் காளிநாயர்
உன்னாணை இனியொருநாள் வந்தால்
உன்மனையில் வந்தவதரிப்பேனான்.

377. என்று சொல்லிக் காளிநாயர் அன்று முடவுப் பாறைவிட்டு
ஏற்ற அந்தி ஊர்க்காடும் விட்டுடன்
இதத்த கூட்டப் பனையில் வந்து சேர்ந்தான்.

378. நன்று புகழ் ஸ்ரீராமன் ஏவிவிட்ட தூதனைப்போல்
நாடியே நெய்யாற்றங்கரை விட்டுடன்
நலமையுடன் மாங்காலி கடந்தான்.

379. மாங்காலி பிறகே விட்டு அமரவிளை தான்கடந்து
வன்பினுடன் கொண்டான்காணி யதுவும்
வாய்த்த உதியங் குளமுங் கடந்தான்.

380. உதியங்கோடு கடந்து உற்றதொரு பருவிக்கல்லும்
உடனே தவளையில்லாக்குளம் விட்டுடன்
உற்றபாறைச் சாலைதன்னில் மேவினன்.

381. வந்தவன் நடையில் நின்று மகாதேவரைப் பணிந்து
வாய்த்ததோர் செக்காலக் காளியும்
வண்மையுடன் குளித்துறை கடந்தான்.

[இரவிபட்டதைக் காளி வரும்வழியிற் கேள்விப்படுதல்]

382. அப்படியே அங்கேநின்று வாறவர்கள் போறவர்கள்
அந்த மந்திரி பொருத சட்டத்தை
அங்கவர் தங்களிலே சொல்லுவார்.

383. இந்த விசேஷங்கள் பறைந்து காளிநாயர் கேட்டபோதே
ஈற்றப்புலி போலவேயவன் ஓடியே
இதத்துடன் குளித்துறை கடந்தான்.

384. ஆறுகடந் தக்கரையில் அய்யனரையும் தொழுது
அய்யனரே இந்தவிதம் வந்திதோ என்று
ஆவிதளர்ந் தொட்டனைப்போல் ஓடினன்.

385. ஓடியே இரவிபுதுக் கடையில் வருமந்நேரம்
உற்ற மந்திரி இரவிப்பிள்ளை பட்டதும் (மறவர்)
வெட்டித் தலையைக்கொண்டு போனதும்

386. அந்தச் செய்தியை அறிந்து மன்னவர் எழுந்தருளி
அந்த மந்திரி பாடெடுப்பேன் ஒன்றில்
அல்லெங்கில் அவ்விடத்தில் படுவேன் நான்.

387. என்று சொல்லி மன்னவரும் இரவிப்பிள்ளை பாடெடுத்து
இன்பமுடன் சென்றப் பதியில்வந்தார்
இனியசார் தலைக்குப் போறதென்றார்.

[இரவியின் வீட்டுக்குக் காளிவந்து சேருதல்]

388. மேவலரை வெல்லுந்தீரன் விரைவுடன் சார்க்கோடும் விட்டு
மேவலர் புகழும் சென்றபதியிலே
மேக்குக் கோட்டை வாசல்கடந்தானே.

389. மேவலரை வெல்லுமந்திரி வீடதிலே சென்றுநின்று
வித்தார மாகவேதான் காளியும்
வேந்தர் மந்திரி பாடுகண் டழுதான்.

வேறு

[காளிநாயர் புலம்புதல் : மார்த்தாண்டன் சடையனும் மன்னரும் தேற்றுதல்]

390. சொன்னானே காளிநாயர் துக்கமினி என்ன? இந்தத்
துரையோடே வெட்டுப்பட விதிமுகிந்த தில்லே;
என்னை அஞ்சுவயசில் கொண்டு முன்னாளில் வளர்த்தான்
இடுக்கத்துக்கு உதகாமல் ஏதுக்கு நான் இருந்தேன்?

391. அன்னையரைப் பிரிந்திருக்க விதியோதான் சிவனே
ஆருதஞ்ச மென்று சொல்லி நானிருப்பதிங்கே?
என்று சொல்லிக் காளிநாயர் அழுது புலம்பிடவே
ஏங்கியுடன் மண்ணதிலே விழுந்து புரண்டழுதான்.

392. மண்ணதிலே விழுந்து காளி அழுது புலம்பிடவே
வாசியுடன் மார்த்தாண்டன் சடையனோடி வந்தான்.

393. வந்தவனைக் கைப்பிடித்து மார்த்தாண்டன் சடையன்
மலங்காதே காளியென்று மனசெல்லாந் தேற்றி
எந்தப்படி யானாலும் உங்களை நான் இப்பம்
இரட்சிக்க நானும் உண்டு; எனக்கல்லவோ தானம்?

394. கைப்பிடித்து அரசர் மன்னர் காளிநாயரைத்தான்
கலங்காதே காளியென்று மனதையெல்லாந் தேற்றி

395. எந்தப்படி யானாலும் இனி உங்களைத்தான்
இரட்சிக்கவே நானுமுண்டு எனக்கல்லவோ தனிமை?

[மன்னரிடம் காளி விடைபெற்று, இராமப்பய்யனது பாசறை சென்று இரவியின் தலை வேண்டுதல்]

396. அந்தமொழி மன்னர் சொல்லக் காளிநாயர் கேட்டு
அடிதொழுது அரசரோடே மறுத்துமொழி சொல்வான்
முந்தப்படி போலே நானும் வாழ்ந்திருப்பதில்லே
மோசமில்லே ராமப்பய்யன் பாளயத்தில் போறேன்

397. பாளயத்தில் சென்று தலையின்று கொண்டு வருவேன்
பார்த்துக்கொள்ளலாமெனவே ஈட்டி கையிலெடுத்தான் ;
வேளையொத்த சூரன் திருக் கையில் சிறப்புவாங்கி
வெற்றியுடன் கோவிக்கல்லில் விரவாலோடிச் சென்றான்.

398. சென்றுநின்று மன்னவரை அடிதொழுது காளி
செப்பத்துடன் பாளயத்தில் தலைவாங்கப் போறேன்

399. வேளையொத்த மதனரூபன் திருக்கையில் சிறப்புங் கொடுக்க
வெற்றியுடன் காளிநாயர் விடைவாங்கி நடந்தான்.

400. கடந்தானே இரவிப்பிள்ளை வீடுஞ்சென்றப் பதியும்
கல்குளமும் தூவலாறும் குளுமைக்காடும் விட்டு

401. நன்றியுடன் அயிக்கானிய குளமும்விட்டுக் காளி
நலமுடனே ஈத்தங்காடு தன்னில் செல்லும் நேரம்

402. செப்பத்துடன் ஓடி ஓடி கணியாகுளம் கடந்து
சீறுஞ் சிங்கம் போலேயவன் ஈத்தங்காட்டில் சென்றான்
அப்பொழுதே அங்கேநின்ற மறவரெல்லாங் கூடி
அந்தநேரம் குதிரைவிட்டு அவனை வளைந்தார்

403. வளைந்து கொண்ட போதிலந்தக் காளிநாயர் சொல்வான்
வன்னப் புரவிவிட்டுக் கலையாமல் போங்கோ

404. மன்னுபுகழ் கொண்ட எந்தன் மன்னர் திருவாணை (நானும்)
மரிப்பதில்லை என்றுமவன் எதிரேறிச் செல்ல

405. எதிரேறிச் சென்றபோது மறவர் ஏது சொல்வார்
எப்படியும் மலையாளி இன்றுசதி செய்வான்

406. ஈட்டி குறுகப் பிடித்தான் செக்காலக்காளி
இனியொரு துரைமக்களும் உண்டானால் வரட்டும்’

407. என்று சொல்லிக் காளிநாயர் ஈட்டி குறுகப்பிடித்து
ஏற்றதுரை வீற்றிருக்கும் பாளயத்தில் சென்றான்.

408. சென்றவுடன் ராமப்பய்யன் முன்னொருவன் ஓடி
சீக்கிரம் சேகுவனார் சென்ற பதியிலிருந்து

409. அரசர்மன்னர் ஏவிவிட்ட ஆளு இவன் என்று சொல்ல
அவனை இங்கே கூட்டிக்கொண்டு வாடா என்று சொன்னான்.

410. முந்தப்படி போலே இனி சேருவனே வாடா என்று
மொழிந்தவனைக் கூட்டித்துரை முன்னே கொண்டுவிட்டார்.

411. விட்டவுடன் அடிதொழுது காளிநாயர் தானும்
விரைந்து என்னைக் கொண்டுவிட்ட காரியத்தைச் சொல்வாய்

412. எங்கேபோக வந்த மலையாளி யென்று கேட்டான்
எனைவளர்த்த எசமானன் வாளிரவிப் பிள்ளை
என்னை யொருநாளும் விட்டுப் பிரியாம லிருந்தார்
எழுத்து விதியாலே நான் அனந்தையிலே போனேன்.

413. கருதலனுர் சிங்கம் சொன்ன காரியத்தைக் கேட்டுக்
காதலுடன் ஓடிச்சென்றப் பதியில்வருந் நேரம்
மருவலர்கள் புகழும் சிங்க மந்திரி பட்டாரென்றும்
மறவர் வெட்டித் தலையைக் கொண்டு போனுரென்றும் கேட்டேன்.

414. என்எசமான் இரவிக்குட்டிப் பிள்ளையவர் தானும்
இறந்துவிட்டார் என்றுசொல்லிக் கேட்டுவந்தேன் நானும்
என்னவேணு மென்று சொல்லிக் கைப்பிடித்தங் கிருத்தி
என் எசமான் தலையைத்தர வேணுமென்று கேட்டான்.

415. தந்துவிட வேணுமெந்தன் எசமானுட தலையை இன்று
சண்டைகள் பிணையுமென்று காளிநாயர் சொல்வான்.

416. என்று சொன்ன மொழிகேட்டு ராமப்பய்யன் சொல்வான் :
ஏற்றமாஸம் மூன்று பொன்னு நானுனக்குத் தருவேன்.

417. உரைத்தமொழி கேட்டபோதே காளிநாயர் சொல்வான்
உயிதமில்லை சோறு முண்டு இங்கே யிருப்பேனோ ?

418. அந்தமொழி கேட்டபோதே ராமப்பய்யன் சொல்வான்
அவனைக் கூட்டிக்கொண்டு எசமான் தலையைப் பாருமென்றுர்

419. என்று ராமப் பய்யன் சொல்லச் சேருவர்கள் கூடி
எத்திரயோதலை கிடக்கும்படைக் களத்தில் கொண்டுவிட்டார் ;
எங்குந்தேடிப் பார்த்திரவி தலையைக் காணுமல்
ஈடழிந்து செக்காலக் காளிநாயர் சொல்வான்.

420. என்னை அஞ்சு வயதில் கொண்டு வளர்த்த மந்திரி தலைதான்
இங்கேயில்லை என்றுமவன் ஈடழிந்து நிற்க,
வன்னப்பட் டதில்பொதிந்து வைத்திருந்த தலையை
வாங்கியுடன் காளிநாயர் முன்னே கொண்டு வைத்தார்.

421. அந்நேரம் காளிநாயர் இரவிப் பிள்ளை தலையை
அகமழிந்து கஸ்தூரிக் குறியைக் கண்டு எடுத்தான்.

வேறு

[அற்ற தலையைக்கண்டு காளி புலம்புதல்]

422. கஸ்தூரிக் குறியைக் கண்டு காளி முகத்தோடணைத்து
கதறிடுவான் செக்காலக் காளியும்
கண்டு மறப்படைகள் பார்த்து நிற்கவே.

பத்தாஞ் சனிபிடித்துப் பதிகுலைந்து போவதுக்குப்
பாவி உந்தன் பசுந்தலையில் விதியோ?
பட்டு விட்டாய் மறவர் கையினாலே.

423. வெட்டுப்பட் டிறந்ததுக்கு ஏதுசொல்லப் போறேன் என
வித்தார மாகவேதான் காளியும்
விரவால் ராமப்பய்யனையும் தொழுதானே.

[காளிக்கு இராமப்பய்யன் பரிசுநல்கி, அற்ற தலையைச் சிவிகையில்
ஏற்றிக்கொண்டு செல்ல விடுத்தல்]

424. தொழுதபோது கைப்பிடித்துக் கம்பிளி தனிலிருத்தி
சுத்தவீரன் உன்னைப்போலே உண்டோ?
சுருதியுள்ள சேகுவனும் நீயே,

425. தம்மானமும் மிகக்கொடுத்து தந்தப் பல்லக்கும் வருத்தி
தக்க மறப்படைகள் பாலித்து நிற்கவே
மிக்கசிரம் பொதிந்து வைத்தார்.

426. கய்க்கு வளை கெச்சமிட்டு காலில்ரெண்டு வீரதண்டை
காதில் பணி அணிந்தப்போது
காளிக்கு வெகுமானங் கொடுத்தார்.

427. பச்சைப்பட்டுப் புள்ளிப்பட்டுப் பட்டுத் தலைப்பாவும் கட்டி
பச்சை வீரகாளி பட்டினாலே
மிக்க பசுந்தலையைப் பொதிந்து வைத்தான்.

428. ஆக்கமுள்ள சிவியார்கள் ஆறுபேரையும் வரவழைத்து
அரையாமல் நீங்கள் சென்றப்பதியிலே
அனைபேரும் போமென் றனுப்பினர்.

வேறு

[காளிநாயர் மீளுதல்]

429. கட்டமுக னுட சிரமெடுத்து
கனகபள்ளியந் திலாவில் வைத்தார்
அட்டதிசை மெய்க்கும் காளிநாயர்
அரிய சிவியாருந் தானுமாக.

430. இட்ட முடன்பண குடியும் விட்டு
இதத்த முப்பந்தல் தோவாளை விட்டார்;
கட்டப் புளியமூடு கணியா குளமும்
கடந்தயிக் காணியக் குளமும் விட்டார்.

431. குளமுந் திருவிடைக் கோடும் விட்டு
குழுமைக்காடு தூவ லாறும் விட்டார்;
உளங்கள் தவறுத மனதீரன்
உற்ற புலியூர்க் குறிச்சி விட்டார்.

432. மந்திரி இரவியுட சிரமுங் கொண்டு
மன்னர் பெருமான் திருமுன்பிலே
சிந்தை தளரவே காளிநாயர்
திட்டெனவே வைத்தடி தொழுதான்.

விருத்தம்

[சிவியான்மாரோடு காளிநாயர் மன்னரை அடைதல்;
மன்னர் வெகுமதி கொடுத்தல்]

433. வைத்தடி தொழுது நிற்க மன்னர்முன் காளிநாயர்
சித்தமுந் தெளிந்து கூட வந்ததோர் சிவியான் மார்க்கு
அத்த கடயம் முடுகு அழகதோர் தலைப்பா சட்டை
மெத்தவே வெகுமானித்து மேவியே விடை கொடுத்தார்.

434. விடைதனைக் கொடுத்து மன்னர் விரைந்துடன் சிவியான்மார்கள்
அடிதொழு துடனே அன்று அவர்களும் போனபோதே
கடியாமல் சிவிகைக் கொண்டு வந்ததோர் காளிநாயர்
உடலது விறைக்க உள்ளம் தள்ளாடித் தளர்ந்து நின்றான்.

வேறு

[வெட்டப்பட்ட தலையை இரவியின் உடலோடு
இணைத்துப் பார்க்கும்படி மன்னர் கூறல்]

435. அடிதொழுது காளிநாயர் நிற்குமந்த வேளையிலே
அரசர் திருவுள்ளம் பற்றுவாரே
அன்று மார்த்தாண்டன் சடையனோடே,

436. வடிவுடைய மந்திரி இரவிப்பிள்ளை பாடதிலே
வாய்த்த சிரந்தனை இணைத்துப் பாருமென்று
மன்னர் திருவுள்ளம் பற்றுவாரே.

437. திருவுள்ளம் பற்றக்கேட்டு மார்த்தாண்டன் சடையனும்
சிறந்த மந்திரிமார்களும் கூடியே
சிரந்தனை யிணைத்துப் பார்த்தபோதே.

438. உருவுசிலை வடிவழகன் மந்திரி இரவியுடே
உற்றசிரம் தானிதென்று சொல்லி
உடனே மன்னரோ டறிவித்தாரே.

[அண்ணர் மார்த்தாண்டர் வருந்துதல்]

439. அறிவித்து மந்திரிமார் அனைபேரும் நிற்கும் நேரம்
அன்று மார்த்தாண்டன் சடையன் தானும்
அழகாய் இரவி கய்யைமுகத் தணைத்தார்.

440. அணைத்து முகந் தன்னில் வைத்து இருகண்ணினாலே ஒற்றி
அரசர் பெருமாளை மறந்தீரோ ? வளர்த்த
அண்ணரையும் மறந்தீரோ ? பிள்ளே !

441. குணமதாய்ப் பெற்று வளர்த்த தாயாரையும் நீர் மறந்து
குஞ்சிரவி மாரை மறந்தீரோ ? நீரும்
கூன்ற ஆசையெலாம் விட்டு இறந்தீரோ ?

442. தம்பியரே ! நீரும்படை போவதறியாமல்
தக்கதொரு வம்புமூலைக் கய்யில்
சமர்பொரு வதுக்குநானும் போனேன்.

443. வம்புமூலைக் கய்யில் நானும் போன செய்தியை அறிந்து
வடுகப் படைக்குள் இறங்கி வெட்டித் தம்பி
வயமறியாமல் படுவானேன் ?

444. என்று சொல்லி மார்த்தாண்டன் சடையனும் புலம்பியழ
ஏற்றபர ராசர் தம்புரானும்
இரங்கி மந்திரியைத் துயரமாற்றி.

[மார்த்தாண்டரை மன்னர் துயரமாற்றி, இரவியைப் பாடடக்கக் கூறுதல் ;
இரவியின் மனைவி வந்து விழுதல்]

445. அன்றரசர் பெருமாளும் மந்திரிமார் தங்களுடன்
ஆள்வீரன் இரவி மந்திரியை
அன்பினுடன் பாடடக்கு மென்றார்.

விருத்தம்

446. பாடதை அடக்கவென்று பாரதில் அரசன் சொல்ல
வேளையில் மந்திரி மங்கை விரும்பியே செவியில் கேட்டு
ஆணதி லழகன் எந்தன் அழகான மந்திரி தன்னைத்
தானவள் ஓடி வந்து தான்கண்டு விழுந்தா ளன்றே.

447. கண்டபோ தந்த மங்கை கணவன்தன் பாடு கண்டு
அண்டர்கோ னுலகில்போக அயன்விதித்தானோ உம்மை?
தெண்டமிட் டிருகையாலே சிரீந்தகால் முகத்தில் நெஞ்சில்
அண்டு மாலிலே வயிற்றில் அறைந்துடன் விழுந்தாள் தானே.

வேறு

[இரவியின் மனைவி புலம்புதல்: தாயார் புலம்புதல்]

448. விழுந்து மண்ணில் புரண்டழுது
விசனமுற்றுள் மங்கை நல்லாள்
அழுந் துயரால் வெதனமுற்று
ஆவி தளர்ந் தேது சொல்வாள்:

449. எழுத்தும் படியினல் வந்ததுக்கு
எண்ணி மனம்நொந்தால் விதிவிடுமோ?

450. விதித்த விதிக்கினி மதிகளுண்டோ?
வெல்ல ஒண்ணாது ஒருவராலும்;
சதித்தாரோ உம்மை மந்திரிமார்;
தாய்க்குத் தாயென்று இருந்தேனே.

451. என்று புலம்பியே மந்திரிதன்
ஏந்திழை யாளும் துயரமுற்றுள்;
நன்றி யுடனவர் மூகம் பார்த்து
நடுங்க அழுதுடன் ஏது சொல்வாள்:

452. மன்றுதனை நீரும் மறந்தீரோ?
மாதாவையும் நீர் மறந்தீரோ?
மங்கை என்னையும் நீர் மறந்தீரோ?
மந்திரி மாரையும் மறந்தீரோ?

453. கருதும் வேணாட்டை மறந்தீரோ?
கனங்கொ ளுலகத்தை மறந்தீரோ?

454. சென்ற படைவீட்டை மறந்தீரோ ?
சேனை கருவலம் மறந்தீரோ ?
வண்டார் தொடைமார்ப! என்னையும் நீர்
மறந்து பிரிந்து அண்ணரையும் மறந்தீரோ ?

455. அன்னையரும் காணு திருப்பார்களோ ?
அரசர் பெருமாளுந் தேடாரோ ?
கன்னனைப்போல் வடிவழகன் உம்மைக்
கண்டவர்களும் ஆறுவாரோ ?

வேறு

456. ஆறுவேனோ நானுமினி
அருங்கனலில் விழுமளவும் ?
தேறுவனோ ? நானுமின்று
தீக்கனலில் மாளுவனோ ?

457. மாரனைப்போல் வடிவழகன்
மனதீரா ! உம்முடைய
காரனைய குழல்முடியில்
கட்டினதோர் சிவதாடும்

458. பூமதனே ! உம்முடைய
பூமுடிக்கே தானிணங்க
பூவிட்ட உறுமாலும்
பொன்னரிய மாலைகளும்

459. தேய்பிறைபோல் நெற்றிதனில்
திலஸவரிக் குறியழகும்
சேயமதி முகத்தழகும்
சிறுபுருவ விழியழகும்

460. கதிரவனர் ஒளியதுபோல்
காண்பேனோ நானுமினி ?
வையகத்தில் கீர்த்திகொண்டார்
வாளிரவி உம்முடைய

461. வன்ன மொத்த கழுத்ததிலே
வயிரமுத்து மாலைகளும்
மார்வி லிட்ட சந்தனமும்
வாள் பூட்டு கையழகும்

462. கய்யிலிட்ட முறுக்குவளை
கனகவீர சங்கிலியும்
வெய்யவனூர் ஒளியதுபோல்
வீதியிலும் காணேனே.

463. ஒய்யார நடையழகும்
உடுத்த ஒற்றைப் பருமுறியும்
ஒற்றைப் பருமுறியும்
ஒதுக்கினதோர் வெற்றிலையும்

464. வெற்றிலையுந் தானருந்தி
விரித்தமுந்தி ஒலியலுமாய்
ஒலியலிட்ட முந்தியுமாய்
உல்லாசக் கய்வீச்சும்

465. கைவீச்சும் வாளிலிட்ட
கனகவீர சங்கிலியும்
வெள்ளிக் கரண்டகமும்
வேதிட்ட சுண்ணாம்பும்

466. ஒள்ளியதோர் செறுக்கனுமாய்
உல்லாச நடையழகும்
மன்னவரை முகங்காட்டி
வரும்பவனி காணேனே.

467. காணேனே உம்முடைய
கச்சை கட்டும் சித்திரமும்
கச்சை கட்டி எண்ணெயிட்டு
கட்டியனூர் தானெடுத்து

468. இச்சையுடன் வாள்பூட்டி
இலங்கமதில் உள்புகுந்து
பச்சைப் பரிசையுமாய்ப்
பாங்கினுடன் கால்தூக்கி

469. பாங்கினுடன் கால்தூக்கிப்
பரபரென நடந்து சென்று
பாங்கினுடன் தடுத்து வெட்டும்
வார்த்தாரம் கேளேனோ?

470. வார்த்தார முறையழகும்
வாள்மயிலுஞ் சித்திரமும்
பார்த்திருந்தும் காணுமினிப்
பலபொழுதும் தேடுவேனோ?

471. நித்திரையில் தேடுவேனோ?
நீரிறந்த போதேநான்
வாசமில்லாப் பூவானேன்;
மண்ணிழந்த மரமானேன்.

472. பத்தாந் திருநாளில் மன்னர்
பவனிவரும் வேளையிலே
சித்திரம்போல் வாள்பூட்டித்
தென்னர்பெருமாள் திருமுன்

473. தென்னர் பெருமாள் திருமுன்
சேவித்துவரும் அந்நேரம்
அந்நேரம் இருபேருமாய்
அகமகிழ்ந்து மனசு மெய்த்து

474. மெய்த்து மனம் களிபுகுந்து
மேடையின்மேல் பார்த்திருப்போம்;
கொத்தலரும் மேடையின்மேல்
கூடியங்கே பார்த்திருப்போம்.

475. வித்தார மலர்மார்பா!
விரைந்துவரக் காணேனோ?
காணேனோ உம்முடைய
கட்டழகும் சித்திரமும்

476. பூவையர்கள் மலர்மார்பா!
போர்க்களத்தில் மடிந்தீரோ?
நேசமுற்ற தோர்வடிவாய்
நீரிறந்த போதேநான்

477. வாசமற்ற பூவானேன்,
மண்ணிழந்த மரமானேன்;
பாசமுற்ற நாளதிலே
பாடுபட்டீர் நீரல்லவோ?

478. ஆசையெல்லாம் மறந்தீரோ என்
ஆணழகா என்றழுதாள்.

479. என்றுசொல்லி மங்கையரும்
மாதாவும் தான் அழவே,
மந்திரியைப் பாடடக்க
மன்னவரும் எழுந்தருள

வேறு

[இரவியின் மனையில் மன்னர் எழுந்தருளி, தாயார்க்கும் மனைவிக்கும்
ஆறுதல்கூறி நீட்டுக் கொடுத்தல்]

480. முந்தப் பொட்டகத்தின் தாள்திறந்து
முழுத்த வீரகாளிப் பட்டெடுத்தார்.

481. சிந்தை குடிகொண்ட மன்னவரும்
சிறந்த துரைவீரர் பரிகலமும்
மந்திரி இரவிதன் மனைதனிலே
மன்னவரும் அங்கே எழுந்தருள

482. மன்னர் மனைதன்னில் எழுந்தருள
மங்கையரும் பைங்கொடியும்
அன்னியாய மென்று திரு முன்பிலே
அய்யோ என்றுசொல்லி விழுந்தழுதார்.

483. விழுந்தவர்கள் அழுதிடவே
வேந்தர் பெருமாளும் மிகச்சலித்து
பொருந்தும் படிமன்னர் பரிவட்டத்தை
புத்திச் சலிப்போடே முகத்தணைத்து

484. அன்று திருமுத்தும் விழுத்தாடி
அரசர் மந்திரிதன் தாயார்க்கும்
வென்றியுடன் நல்லாள் மங்கையர்க்கும்
வெசனம் தீரவே திருவுள்ளமாய்.

485. ஒன்றுக்கும் நீங்கள் மலங்கவேண்டாம்
உறுதியுட னவர் இருந்தாப் போலே
நன்றியுடன் உங்கள் எல்லோரையும்
நானும் காப்பாற்றிக் கொள்வேனென்றார்.

486. என்று மந்திரிதன் தாயார்க்கும்
ஏந்திழை யாளுக்கும் புத்திசொல்லி
நன்றியுடன் மன்னர் மனம்தெளிந்து
நாடி மங்கைமார்க்கும் தமையனுக்கும்

487. நாட்டில் சனமெய்க்க இறகூலியும்
நன்றாக மன்னர் நீட்டெழுதி
நீட்டெழுதி மன்னர் முத்திரையிட்டு
நேச முடன்வர் தான்கொடுத்தார்.

488. வாட்டமற மன்னர் தான்கொடுத்து
மந்திரியைப் பாடடக்கு மென்றார்.

வேறு

[இரவியைப் பாடடக்குதல்]

489. பாடடக்க வேணுமென்று மந்திரிமார் ஒத்துக்கூடி
பட்டுவீர காளிகொண்டு மூடி யெடுத்துப்
பல்லக்கின் மேல்கிடத்து வாரே.

490. கோடையிடிபோல்வெடிகள் திடுமென அதிரிடவே
கூடவே சங்கு கனகதப்பும்
கொம்பு சின்ன வீராணத் தொனியுமாய்

491. சின்னவீராண முழங்கத் திடுமென அதிரிடவே
சிறந்தபல வாத்தியம் முழங்கவே
திட்டெனவே மன்னர் எழுந்தருள

492. முன்னவர் ழெழுந்தருளிப் பாடடக்க வேணுமென்று
முத்துக்குடை வெஞ்சாமரம் வீசவே
முன்னும் பின்னும் மந்திரிமார் சூழவே

493. சூழவே சுடலை தன்னில் அடுக்கினதோர் கட்டையிலே
சுற்றிமூணு வளையமாக வந்து
சுத்தவீரன் இரவி மந்திரியை

494. மந்திரியைப் பாடடக்க வேணுமென்று மன்னர் சொல்ல
வாகினுடன் திருவுள்ளங் கல்ப்பித்தார்
வரிசையுள்ள முறைமைக்காரர்க் கன்று

495. முந்தவே முறைமைக்காரர் தங்களுக்கு வேண்டத்தக்க
முறைமைக ளெல்லாம் கொடுத்து மன்னர்
முகனையுடன் பாடடக்கு மென்றார்.

496. அந்நாளில் உள்ளமுறை ஆனதெல்லாம் அங்குச்செய்து
ஆள்வீரன் இரவி மந்திரியை
அன்பினுடன் பாடடக்குவாரே.

[காளிநாயர்க்கு வஞ்சிமன்னர் சாவேற்று விருத்தி அருளி, இரவியின்
[தாயார்க்கு நன்மொழிகூறி, வீற்றிருத்தல்]

497. அடக்கியே மந்திரிமார் அனைபேரும் நிற்கும்நேரம்
அதிசூரன் காளிநாய ரோடே
அரசர் திருவுள்ளம் பற்றுவாராம்.

498. திடமாக உன்னுடைய ஊரும் பேரும் உன்குலமும்
செப்பிடு என்று மன்னரருள
செக்கால னடியேன் என்றான்.

499. செக்காலே நானடியேன் சேர்ந்திருக்கும் குப்பப்பாடு
தேசவும் குஞ்சரக் கோடதென்றான் ;
சிறந்த பேருங் காளிஎன் றுரைத்தான்.

500. என்ற போதில் வஞ்சி பராசர் மன்னர் மகிழ்ந்து
ஏற்றவளை கைக்குநல்ல முடுகும்
இகல்வீரன் காளிநாயர்க் கன்று

501. நன்றியுடன் உன் தனக்குச் சந்ததிப் பிரமாணமாக
நலமுடன் குஞ்சரக் கோடுபதியில்
நாணயமா யிருகல நிலமும்

502. இருகல நிலமதுவும் சாவேற்றி விருத்தியாக
இதத்த மார்த்தாண்டன் சடையனை அழைத்து
இகல்வீர காளிநாயர்க் கன்று

503 மார்த்தாண்டன் சடையனை வரவழைத்து மன்னவரும்
வாகினுடன் காளிநாயர்க் கன்று
வண்மையினாலே கொடுத்து மன்னர்

504. மன்னர் மந்திரிதன் தாயார்க்கும் புத்திசொல்லி
வாழும் சென்றபடை வீடும்விட்டு
மன்னர் கல்குளத்திலே எழுந்தருள

505. கல்குளத்தில் கோவிக்கல்லில் காவல ரெழுந்தருளி
கலியாணம் போலே மன்னர் தானும் நீல
கண்டர் அருளால் வீற்றிருந்தார்.

Solden & Co., Madras, Q. H. MS. 151—200/7-1-10.